மறைந்தார்; அதைக் கண்டு வால்மீகியும் அவருடைய சிஷ்யர்களும் ஆச்சர்யப்பட்டார்கள்.

பிறகு அவர்கள் அந்த மஹார்ஷியால் செய்யப்பட்ட மானி ஷாத்வென்ற ச்லோகத்தை வெகுப்ரீதியுடன் அடிக்கடி பாடினார்கள். நான்கு பாதங்களோடும் அவைகளில் ஸமமான அக்ஷரங்களோடும் வால்மீகியால் சொல்லப்பட்ட அந்த ச்லோகம், அடிக்கடி பாடுவதால் எல்லோராலும் கொண்டாடத்தக்கதாயிற்று. பிறகு தன் உத்தே சம் தடையில்லாமல் நிறைவேற வேண்டிப் பகவானை ப்ரார்த்தித்து, "ராமாயணம் முழுவதையும் இப்படிப்பட்ட ச்லோகங்களால் செய்யக் கடவே"னென்று நிச்சயித்தார். விசால புத்தியுள்ள அந்த மஹர்ஷி, கீர்த்தியின் அவதாரமான ராமனுடைய சரிதத்தையும் குணங்களையும் வர்ணித்து, அர்த்தம் பதம் ஸமமான அக்ஷரங்கள் பொருந்திக், கேட்பவர்களின் மனதைக் கவரும் பல ச்லோகங்களால் அதைச் செய்து அழிவில்லாத கீர்த்தியையடைந்தார். ரகு குலத்தில் பிறந்த அரசர்களுக்குள் ச்ரேஷ்டனான ராகவனுடைய சரித்ரமும், அவர் தசமுகனை ஸம்ஹாரஞ் செய்ததும், வால்மீகி மஹார்ஷியால் காவ்ய ரூபமாகச் செய்யப்பட்டதை எல்லோரும் கேளுங்கள். அதில் பதங் களின் சேர்க்கையும், அக்ஷரங்களின் சேர்க்கையும், பதங்களின் கருத்தும், சாஸ்த்ரத்தை ஒட்டியிருக்கின்றன; ஒன்றிற்கொன்று ஏற் றத் தாழ்வில்லாமல் ஸமமாயும் மதுரமாயும் தெளிவான அர்த்தமுள்ள தாயுமிருக்கும் வாக்யங்களால் அமைக்கப்பட்டிருக்கிறது.



## 3. ஸர்க்கம்

# கதாஸங்க்ரஹம்.

(அவதாரிகை)

இந்தக் காவ்யத்தில் வர்ணிக்கப்படும் விஷயம் நிர்மலமான ஞான திருஷ்டியால் பார்க்கப்பட்டது; லோகோத்தமமான நாயகனுடைய குணங்களால் அலங்கரிக்கப்பட்டது; ஆகையால் ஸர்வோத்தம மானது.

நான்கு புருஷார்த்தங்களையும் தெளிவாய் விளக்கும் ராம சரிதத்தை வால்மீகி நாரதரிடத்தி லிருந்து கேட்டார்; ஆயினும் அந்தத் தர்ம சிந்தையுள்ளவர் அதை இன்னும் நன்றாய்த் தெரிந்து கொள்ள முயன்றார். விதிப்படி ஆசமனஞ் செய்து, கிழக்கு நுனி யாய்ப் போடப்பட்ட தர்ப்பங்களில் உட்கார்ந்து, தன் குருவை மன ஸால் நமஸ்கரித்துக் கைகூப்பி, ப்ரஹ்மாவின் அனுக்ரஹத்தால் கிடைத்த யோகபலத்தால் பின்வருமாறு யோசித்தார். "ராமன், லக்ஷ்மணன், ஸீதை, தசரதர், ராஜபத்னிகள், கோஸல ஜனங்கள் முதலியவர்களுக்கு நேர்ந்த யாவற்றையும்; அவர்களின் பேச்சு, ஸம் பாஷணை, நடை உடை பாவனை, வேடிக்கை வார்த்தை, கலஹம், கோபம், துக்கம் முதலியவைகளையும்; பிதிருவாக்ய பரிபாலனத்திற்காக ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் வனத்தில் வஸித்த பொழுது அவர் களுக்கு நேர்ந்ததையும்; அதற்குமேல் நடக்கப் போவதையும், கையி லிருக்கும் நெல்லிக்கனியைப்போல் ஞானக்கண்ணால் பார்த்தறிந்தார். ராமனுடைய கல்யாண குணங்களைப் பார்த்தனுபவிக்கும்பொழுது அவருக்குப் பரமானந்த முண்டாயிற்று. தேஜஸ் அதிகரித்தது. லோகரக்ஷணத்திற்காக ரகுகுலத்தில் அவதரித்து ஸகல ப்ராணி களின் மனதைக் கவர்ந்த ராமனுடைய சரிதத்தை, நாரதர் தனக்கு உபதேசித்தபடி, ராமாயணமென்ற மஹா காவ்யமாகச் செய்ய ஆரம் பித்தார்.

ஸமுத்ரத்தில் கிளிஞ்சில் முத்துச்சிப்பி பாலடை முதலிய ஸாமான்ய வஸ்துக்களும், ரத்னங்கள் முதலிய விலையற்ற பதார்த்தங் களும் கலந்திருப்பது போல், தர்மம் மோக்ஷமென்ற புருஷார்த்தங்

கள் இந்தக் காவ்யத்தில் ப்ரதானமாகவும், அர்த்தமும் காமமும் சுருக்கமாகவும் காட்டப்பட்டிருக்கின்றன. ச்லோகங்கள் கேட்ப தற்கு மதுரமாக, அவைகளின் அர்த்தங்கள் மனதிற்கு விசேஷ ஆனந்தத்தைக் கொடுக்கின்றன. ஸகல வேதங்களும் எந்தப் பரம புருஷனைத் துதிக்கின்றனவோ அவருடைய கல்யாண குணங்களே இதில் வர்ணிக்கப்படுகின்றன.

## பால காண்டம்.

தசரதர் செய்த விசேஷ தபஸால் மஹா விஷ்ணுவே அவ ருக்குப் புத்ரனாய் அவதாரஞ் செய்ததும்; சிறுவயதிலேயே மாரீசன் ஸுபாஹு முதலிய கோரராக்ஷஸர்களை ஜயிக்கும் பலம் வீர்யம் எல்லோர்க்கும் அனுகூலமாகவிருப்பது, எல்லோருடைய ப்ரீதிக்கும் பாத்ரமாகவிருப்பது, பிறர் செய்யும் குற்றங்களைப் பொறுப்பது, எப் பொழுதும் ப்ரஸன்னமாகவிருப்பது, புன் சிரிப்புடன் பேசுவது முதலிய உத்தம குணங்களும்; ராமலக்ஷ்மணர்கள் விச்வாமித்ரரு டன் போனதும்; அப்பொழுது அவரால் சொல்லப்பட்ட விசித்ர கதைகளும்; மிதிலையில் ராமன் பரமசிவனுடைய வில்லை முறித்ததும்; ராமலக்ஷ்மண பரத சத்ருக்னர்கள், ஸீதை ஊர்மிளை மாண்டவி ச்ருதகீர்த்தி யென்றவர்களை மணம்புரிந்ததும்; ராமனுக்கும் பரசு ராமனுக்கும் ஸம்வாதமும் இந்தக் காண்டத்தில் சொல்லப்படு கின்றன.

## அயோத்யா காண்டம்.

ராமனிடத்தில் சேர்ந்திருந்த ஸகல ராஜலக்ஷணங்களும்; அவரை யுவராஜாவாய் அபிஷேகஞ்செய்யத் தசரதர் செய்த முயற்சி யும்; கைகேயி அதைத் தடுத்து ராமனைக் காட்டிற்கனுப்பினதும்; நகரத்து ஜனங்கள் ப்ரலாபித்ததும், தன்னுடன் வந்தவர்களை அவர் தமஸா நதிக்கரையில் விட்டுப் போனதும்; கங்கைக் கரையில் குஹ னைக் கண்டு ஸுமந்த்ரரை அங்கே நிறுத்திவிட்டதும்; கங்கையைத் தாண்டிப் பரத்வாஜரைத் தரிசித்ததும்; அவருடைய உத்திரவின் படி சித்ரகூட மலையில் லக்ஷ்மணனால் கட்டப்பட்ட பர்ணசாலையில் ஸீதையுடன் வஸித்ததும்; புத்ரசோகம் தாங்காமல் தசரதர் உயிரை விட்டதும்; பரதன் ராமனிடத்திற்கு வந்து அயோத்யைக்கு வரும் படி ப்ரார்த்தித்ததும்; ராமலக்ஷ்மணர்கள் பிதாவுக்கு உத்தரக்ரியை களைச்செய்ததும்; ராமனுடைய பாதுகைகளைப் பரதன் நந்திக்ராமத்தில்

அபிஷேகஞ் செய்து அவருக்காக அங்கே காத்துக்கொண்டிருந்ததும்; ராமன் அத்ரியின் ஆச்ரமத்திற்கு வந்ததும், அநஸூயை ஸீதைக்குச் சந்தனம் முதலியவைகளைக் கொடுத்ததும் இந்தக் காண்டத்தின் கதை.

## ஆரண்ய காண்டம்.

அவர்கள் தண்டகாரண்யத்தில் புகுந்ததும், விராதனுடைய வதமும்; சரபங்கர், ஸுதீக்ஷ்ணர் அகஸ்த்யர் வால்மீகி ஜடாயுஸ் முதலியவர்களைத் தர்சித்ததும்; பஞ்சவடியில் வஸிக்கும்பொழுது சூர்ப்பநகை வந்து அவர்களுடன் ஸம்பாஷித்ததும்; அவளுடைய காதையும் மூக்கையும் லக்ஷ்மணன் அறுத்ததும்; அதற்காக யுத்தஞ் செய்ய வந்த கரன் தூஷணன் த்ரிசிரஸ் முதலிய ராக்ஷஸர்களை ராமன் கொன்றதும்; அதைக் கேட்டு ராவணன் மாரீசனுடன் அங்கே வந்து ஸீதையை எடுத்துப் போனதும்; ராமன் மாரீசனைக் கொன்றதும்; ஸீதையைக் காணாமல் ராமன் ப்ரலாபித்ததும் ஜடாயுஸ் உத்தம கதியடைந்ததும்; கபந்தனுடைய வதமும்; சபரீ மோக்ஷமடைந்ததும்; ராஜபுத்ரர்கள் பம்பா நதிக்குச் சென்றதும் இந்தக் காண்டத்தின் சுருக்கம்.

## கிஷ்கிந்தா காண்டம்

ரிச்யமூக பர்வதத்தில் ராமன் ஸுக்ரீவனைக் கண்டு அக்னி ஸாக்ஷியாக அவனுடன் ஸ்நேஹஞ் செய்ததும்; அவனுக்கு நம்பிக்கையை உண்டாக்கினதும்; ஸுக்ரீவனுடன் வாலி யுத்தஞ் செய்யும் பொழுது ராமன் அவனைக் கொன்றதும், தாரையின் ப்ரலாபமும், ஸுக்ரீவ பட்டாபிஷேகமும்; அவனுடைய ப்ரதிக்ஞையும்; ராமன் மழைக்காலத்தில் ப்ரஸ்ரவணகிரியில் தங்கினதும்; ஸுக்ரீவன் தாமதிக்கிறானென்று ராமன் கோபங்கொண்டதும்; வானராதிபதி ஸைன்யங்களைத் தருவித்துப் பூலோகத்தை வர்ணித்து நான்கு திக்குகளிலும் ஸீதையைத் தேட அனுப்பினதும்; ராமன் தன் மோதிரத்தை மாருதியிடத்தில் கொடுத்தனுப்பினதும்; தெற்கில் போன வானரர்கள் குகையில் நுழைந்து தடுமாறினதும்; ஸமுத்ரக்கரையில் ப்ராயோபவேசஞ் செய்ததும்; ஸம்பாதியால் ஸீதையின் வரலாற்றை அறிந்ததும்; மாருதி மஹேந்த்ர பர்வதத்திலேறி ஸமுத்ரத்தைத் தாண்ட முயன்றதும் இந்தக் காண்டத்தில் வர்ணிக்கப்படுகின்றன.

## ஸுந்தர காண்டம்.

மைநாகபர்வதம் அவரை உபசரித்ததும், அவர் ஸிம்ஹியைக் கொன்று லங்கைக்குச் சென்று மலய பர்வதத்தில் இறங்கி ராத்ரியில் நகரத்திற்குச் சென்றதும், ஏகாந்தத்தில் ஆலோசித்ததும், தூங்கும் ராவணனைக் கண்டதும், பானசாலையில் தேடினதும், ராவணனுடைய ஸ்த்ரீகளைப் பார்த்ததும், அசோகவனத்தில் ஸ்த்ரீகளைக் கண்டதும், ராக்ஷஸிகள் அவளை உபத்ரவித்ததும், ராவணன் அவளிடத்தில் பேசினதும், அவள் தான் கண்ட ஸ்வப்னத்தை த்ரிஜடைக்குச் சொன்னதும், மாருதி அவளிடத்தில் ராமனுடைய மோதிரத்தைக் கொடுத்ததும், அவளுடைய சூடாமணியை வாங்கிக் கொண்டு அசோகவனத்தை அழித்ததும், அதை ராக்ஷஸிகளால் அறிந்து ராவணன் அனுப்பின கிங்கரர்களை மாருதி கொன்றதும், ப்ரஹ்மாஸ்த்ரத்திற்குக் கட்டுப்பட்டதும், லங்கையைக் கொளுத்திக் கர்ஜித்ததும், மறுபடியும் ஸமுத்ரத்தைத் தாண்டி மதுவனத்தை அழித்ததும், ராமனிடத்தில் சூடாமணியைக் கொடுத்துத் தேற்றினதும் இந்தக் காண்டத்தில் வர்ணிக்கப்படுகின்றன.

## யுத்த காண்டம்.

ராம லக்ஷ்மணர்கள் வானர ஸைன்யத்துடன் ஸமுத்ரக் கரைக்குச் சென்றதும்; விபீஷணனுக்கு அபய ப்ரதானஞ் செய்ததும்; நளன் ஸமுத்ரத்தில் அணை போட அதின் வழியாய் லங்கைக்குச் சென்று அதை முற்றுகையிட்டு, விபீஷணன் சொன்ன உபாயங்களால் கும்பகர்ணன் இந்த்ரஜித் ராவணன் முதலிய ராக்ஷஸ ச்ரேஷ்டர்களையும் ஸைன்யங்களையும் ஸம்ஹரித்து, ஸீதையை மீட்டதும்; விபீஷணனை லங்கையில் அபிஷேகஞ் செய்ததும்; எல்லோரும் புஷ்பக விமானத்திலேறி அயோத்யைக்கு வந்ததும்; பரத சத்ருக்னர்களைக் கண்டதும்; ஸ்ரீராமன் பட்டாபிஷேக மஹோத்ஸவம் கண்டருளினதும்; வந்திருந்தவர்களை உபசரித்து ஊருக்கனுப்பினதும்; ராஜ்யபாலனமும் இந்தக் காண்டத்தின் விஷயம்.

## உத்தர காண்டம்.

ராவணாதி ராக்ஷஸர்களின் விருத்தாந்தமும், ராமனுடைய ராஜ்ய பரிபாலன விமர்சையும், லோகாபவாதத்திற்குப் பயந்து அவர் ஸீதையைக் காட்டிற் கனுப்பினதும், அச்வமேதமும், இனி நடக்கும் வரலாறுகளும் வால்மீகி மஹர்ஷியால் தெளிவாய் இந்தக் காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

## ஸர்க்கம் 4.

# ராமாயணத்தைப் பாடினது.

(அவதாரிகை)

*ராமாயணமென்ற க்ரந்தம் ஸர்வோத்தமம்.*

ராமன் ராஜ்யாபிஷேகம் பெற்று ஆண்டு வரும்பொழுது, ப்ரஹ்மாவின் கிருபையால் ஞானதிருஷ்டியை அடைந்த வால்மீகி, விசித்ரமான பதச்சேர்க்கையுள்ள ச்லோகங்களால் ராமசரிதத்தைச் செய்தார். இந்த மஹா காவ்யத்தில் ஏழு காண்டங்களும் ஐந்நூறு ஸர்க்கங்களும் 24,000 சுலோகங்களும் அடங்கியிருக்கின்றன. பட்டாபிஷேகத்திற்குப் பின்பு நடந்தவைகளையும் இனி நடக்கப்போகிறவைகளையும் வர்ணித்து, "இந்தக் காவ்யத்தைக் கற்று ஜனங்களுக்கு வெளிப்படுத்தக்கூடியவர்கள் யாரெ"ன்று ஆலோசித்தார்.

தகுந்த சிஷ்யன் கிடைக்க வேண்டுமென்று பரமாத்மாவை வேண்டக், குசன் லவனென்று இரண்டு சிஷ்யர்கள் அவரை நமஸ்கரித்து, ராமாயணத்தைத் தங்களுக்கு உபதேசிக்கும்படி கேட்டார்கள். அவர்கள் ராஜகுமாரர்கள், ஸ்தைர்யமுள்ளவர்கள், ஆரம்பித்த கார்யத்தைக் கைவிடாமல் நட[illegible]பர்கள், குரு சுச்ரூஷையின் தர்மத்தை அறிந்தவர்கள், வே[illegible]ங்கங்களைப் பூர்ணமாய்க் கற்றவர்கள், வித்யைகளை அப்யஸித்துக் கீர்த்தி பெற்றவர்கள். கற்றதை மறவாமல் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளக்கூடிய புத்தியுள்ளவர்கள், ஸஹோதரர்கள், மதுரமான சாரீரமுள்ளவர்கள், தன் ஆச்ரமத்தில் வஸிப்பதால் தனக்கு மிகவும் பிரியமானவர்கள். ஆகையால் அவர்களை அங்கீகரித்து, ஸகல வேத சாஸ்த்ரங்களின் அர்த்தங்களை வெளியிடும் தன் காவ்யத்தை அவர்களுக்கு உபதேசித்தார். அதற்கு ராமாயணமென்றும், மஹிமையுள்ள ஸீதாசரிதமென்றும், பௌலஸ்த்யவதமென்றும் பெயர். படிப்பதற்கும் பாடுவதற்கும் மதுரமாக, த்ருதம், மத்யம், விலம்பிதமென்ற கால ப்ரமாணங்களையுடையதாக ஷட்ஜம் முதலிய ஏழு ஜாதி (ராக முறை)களால் அமைக்கப்பட்டு

தாக, தந்த்ரீ வாத்யங்களுக்கும் லயத்திற்கும் ஒத்ததாக, சிருங்காரம் கருணை ஹாஸ்யம் வீரம் பயானகம் ரௌத்ரம் பீபத்ஸம் அத்புதம் சாந்தமென்ற நவரஸங்களால் அலங்கரிக்கப்பட்ட அந்தக் காவ்யத்தை அவர்கள் கற்றார்கள். ஸங்கீத சாஸ்த்ரத்தின் உண்மையை அறிந்தவர்கள்; வீணை முதலிய வாத்யங்களை வாசிப்பதில் நிபுணர்கள்; மந்த்ரம் மத்யம் தாரமென்ற ஸ்வரங்களின் உத்பத்தி ஸ்தானங்களை அறிந்தவர்கள்; மனுஷ்ய வேஷம் பூண்ட கந்தர்வர்களைப் போன்றவர்கள்; நிகரற்ற அழகும் உத்தம லக்ஷணங்களும் பொருந்தினவர்கள்; நாடக லக்ஷணங்களில் நிபுணர்களானதால் பாடும்பொழுது உபயோகிக்கும் அபிநயக்ரமங்களை நன்றாக அறிந்தவர்கள்; பேசும்பொழுதும் இனிமையான குரலுடையவர்கள்; ராமனுடைய தேஹத்தின் ப்ரதிபிம்பங்களைப் போன்றவர்கள்; மனோவாக்கு காயங்களில் தோஷமற்றவர்கள்.

அவர்கள் குருவின் உபதேசப்படி ராமாயணம் முழுவதையும் மனவில் நாட்டி, ரிஷிகளும் வேதியர்களும் ஸாதுக்களும் கூடியிருக்குமிடங்களில் அந்தத் தர்ம கதையை ஜாக்ரதையாய்ப் பாடிக்கொண்டு வந்தார்கள், ராமன் செய்த அச்வமேதயாகத்தில் வைதிகக்ரியைகளுக்கு நடுவில் இளைப்பாறிக்கொண்டிருந்த மஹர்ஷிகளிடத்திலும் பாடினார்கள். மஹா புத்திமான்களும் பாக்யவான்களுமான அந்தச் சிறுவர்கள் பாடுவதைக் கேட்டு, ரிஷிகள் மிகவும் ஆச்சர்யப்பட்டு ஆனந்தக்கண்ணீர் உதிர்த்து, “நல்லது, நல்ல”தென்று கொண்டாடினார்கள். தர்மவான்களான அந்த முனிகள் பரம ப்ரீதியடைந்து, “குழந்தைகளே! பாட்டின் மாதுர்யத்தை என்னென்று சொல்வோம்? அதிருக்கட்டும். ச்லோகங்கள் எவ்வளவு இனிமையாயிருக்கின்றன! வெகு நாளைக்கு முன் நடந்த விஷயங்கள் இப்பொழுது கண்ணிற்கெதிரே நடப்பவைபோலிருக்கின்றன”வென்று, ராமாயணத்தையும் வால்மீகியையும் குசலவர்களையும் புகழ்ந்தார்கள். மஹா தபஸ்விகளின் ஸந்தோஷத்தால் அவர்கள் உத்ஸாஹமடைந்து, ராக லக்ஷணங்களை அனுஸரித்து, ஸ்வரம்குறையாமல், கேட்பவர்களுக்கு ச்லோகங்களின் கருத்து நன்றாக விளங்கும்படி, மனோஹரமாகப் பாடினார்கள். ஒரு ரிஷி மிகவும் ப்ரீதியடைந்து எழுந்து, தன் கலசத்தை அவர்களுக்கு வெகுமதியாகக் கொடுத்தார். ஸங்கீதத்தின் குண தோஷங்களை அறிவதில் ப்ரஸித்தியுள்ள மற்றொரு ரிஷி தன் மரவுரியைக் கொடுத்தார். ஒருவர் கிருஷ்ணாஜினத்தையும் ஒருவர் முஞ்சிப்புல்லால் செய்த அரை நூலையும், ஒருவர் கமண்டலுவையும், ஒருவர் யக்ஞோபவீதத்தையும் (பூநூல்) ஒருவர் ஜப

மாலையையும், ஒருவர் தர்ப்பாஸனத்தையும், ஒருவர் கௌபீனத்தை யும், ஒருவர் கோடாலியையும், ஒருவர் காஷாயத்தையும், ஒருவர் தலைமயிர் கட்டும் கயிற்றையும், ஒருவர் விறகு கட்டும் கயிற்றையும், ஒருவர் யாக பாத்ரத்தையும், ஒருவர் விறகு கட்டையையும், ஒருவர் அத்திப் பலகையையும் கொடுத்தார்கள். சிலர் "உங்களுக்கு மங்கள முண்டாகட்டு"மென்றார்கள். சிலர் "நீண்டகாலம் வாழக்கடவீ" ரென்றார்கள். எல்லா ரிஷிகளும் பல வரங்களைக் கொடுத்தார்கள்; அவர்களுடைய சொல் வீணாகாது.

ராஜவீதிகளிலும் தெருக்களிலுமுள்ள ஸகல ஜனங்களும் "வால்மீகி முனியால் செய்யப்பட்ட இந்த மஹா காவ்யம் மிகவும ஆச்சர்யகரமானது. ஆரம்பிக்கப்பட்டபடியே முடிக்கப்பட்டிருக் கிறது. இனி வரப்போகும் கவிகளுக்கும் இதே முக்யமான ஆதா ரம். எல்லாவித கானத்திலும் நிபுணர்களான முனி புத்ரர்களே! தீர்க்கமான ஆயுளையும் ஆரோக்யத்தையும் கொடுப்பதால், ஸகல ஸ்வரங்களும் அமைந்திருப்பதால், கேட்பவர்களுக்கு மனோஹரமாக விருக்கும் இந்த ராமாயணத்தை நன்றாகப் பாடினீர்க"ளென் றார்கள்.

இப்படி எல்லோராலும் கொண்டாடப்படும் குசலவர்களைப் பற்றிச் சத்ருகுலகாலனான ராமன் கேள்விப்பட்டு, அவர்களைப் பரத னால் அழைப்பித்துப் பார்த்துத் தகுந்தபடி உபசரித்தார். அச்வமேத தீக்ஷைபெற்ற ரகுநாதன், யாதொரு கவலையுமின்றித் தம்பிகளும் பந் துக்களும் மந்த்ரிகளும் சூழ்ந்திருக்கத், தசரதர் ஸ்வர்க்கத்திலிருந்து கொண்டுவந்த தங்க ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்தார். நிகரற்ற அழகுவாய்ந்த அவ்விரு பையன்களை உற்றுப் பார்த்துத், தம்பிகளை நோக்கி "தேவதைகளைப்போல் தேஜஸ்விகளான இந்தச் சிறுவர்கள், விசித்ரமான பதங்களும் அர்த்தங்களுமடங்கிய ஓர் சரித்ரத்தைப் பாடுகிறார்கள். அதைக் கவனித்துக் கேட்போ"மென்று, கானவித் தையில் நிகரற்ற குசலவர்களைப் பாடும்படி உத்திரவிட்டார்.

அவர்கள் ச்லாக்யமான ராகாலாபத்துடன், தந்த்ரீ வாத்யங் களுக்கும் லயத்திற்கும் ஒத்து, மதுரமாக, ச்லோகத்தின் அர்த்தம் கேட்பவர்களுக்கு நன்றாக விளங்கும்படி பாடினார்கள். அந்தக் கானா மிருதம் கேட்பவர்களின் காதுகளால் புகுந்து மனதையும் அவயவங் களையும் ஆனந்தமடையச் செய்தது. அப்பொழுது ராமன் "ஜனங் களே! இந்தச் சிறுவர்கள் ரிஷி வேஷந் தரித்தாலும் உத்தம ராஜ

லக்ஷணங்கள் பொருந்தினவர்கள்; பாடகர்களாகிலும் மஹா தபஸ்வி கள்; இவர்கள் பாடும் ஸீதா சரித்ரமோ விசேஷ மஹிமையுள்ளது. ப்ரியநாயகியை விட்டுப் பிரிந்த எனக்கும் அதிக ஆறுதலைக் கொடுக் கிறது. ஆகையால் இதை நன்றாகக் கேளுங்க''ளென்றார். ராம னுடைய உத்திரவைப் பெற்றுக் குசலவர்கள், மார்க்கமென்ற ஸங்கீத முறைப்படி பாடினார்கள். நல்ல பதார்த்தத்தை ஒருவனே புஜிக்கக் கூடாதென்ற ந்யாயப்படி ராமன் 'இந்த உத்தம கானத்தை நான் மாத் தரம் கேட்டு ஆனந்திக்கக்கூடாது; எல்லோரும் கேட்க வேண்டு'' மென்று நினைத்தார். உன்னதமான ஆஸனத்திலிருந்தபடியால் தன்னை ஒண்டியாக நினைத்துக்கொண்டார். ஆனால் திடீரென்று எழுந்தால் ஸபையிலிருப்பவர்களும் எழுந்திருப்பார்கள். அப் பொழுது ரஸபங்கம் நேரும். ஆகையால் ஆஸனத்திலிருந்து மெள்ள மெள்ள இறங்கி, ஸபையோர்களுடன் உட்கார்ந்து, அந்த ஸுகத்தை அனுபவிக்க விரும்பி அதில் மனதைச் செலுத்தி தன்னை மறந்தார்.



## ஸர்க்கம் 5.

# அயோத்யை.

(அவதாரிகை.)

கருணாமூர்த்தியான வால்மீகி, ராமாயண காவ்யத்தை ஆரம்பித்து, அது விக்னமில்லாமல் முடிவுபெற்று அழிவற்ற கீர்த்தியை அடையும்படி மங்களம் செய்கிறார். ஆசீர்வாதம் நமஸ்காரம் விஷயத்தைக் குறிப்பிடுவதென்ற மூன்று வகையில் இங்கே மூன்றாவது காணப்படுகிறது. க்ரந்தத்தின் விஷயத்தையும் ப்ரயோஜனத்தையும் தெரிவித்து, இதைக் கொண்டாட வேண்டுமென்று ஸாதுக்களை வேண்டுகிறார். இந்த ஸர்க்கத்தில் பகவானுடைய அவதாரத்திற்கு யோக்யமான ஸ்தலம் வர்ணிக்கப்படுகிறது.

ஏழு த்வீபங்களால் சூழப்பட்ட இந்தப் பூமி முழுதும், மற்ற அரசர்களுக்கு ஸ்வாதீனமாயிருந்தது போலன்றி, வைவஸ்வத மனுவென்ற ப்ரஜாபதியின் காலம்முதல் ஜயசாலிகளான எந்த இக்ஷ்வாகு வம்சத்தரசர்களால் ஆண்டுவரப்பட்டதோ; எந்த வம்சத்தில் ஸகரனென்ற அரசன் பிறந்து, தன் அறுபதாயிரம் புத்ரர்களால் ஸாகரத்தை வெட்டுவித்தானோ, அந்த மஹிமை பொருந்தின இக்ஷ்வாகு வம்சத்தில் அவதரித்த ராமனுடைய சரிதத்தைச் சொல்லும் இந்தக் காவ்யம் ராமாயணமென்று ப்ரஸித்தி பெற்றது. ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடிய இந்த க்ரந்தத்தை ஆரம்பம் முதல் முடிவுவரையில் ச்ரத்தையுடன், கேவலம் நம்மைப்போன்ற மனுஷ்யன் செய்ததல்லவாவென்று அஸூயைப்படாமல் கேட்க வேண்டும்.

ஸரயூநதியின் இருகரையிலும் கோஸலமென்று ஒரு தேசமுண்டு. அது வெகு விஸ்தாரமுள்ளது; அளவற்ற தனதான்யங்களுள்ளது; அதில் எண்ணிறந்த ஜனங்கள் எப்பொழுதும் கவலையற்று ஆனந்தமாகக் காலங்கழிக்கிறார்கள்.

அதில் அயோத்யையென்று ஒரு நகரமுண்டு, மனுஷ்யர்களுக்கு அதிபதியான வைவஸ்வதமனுவால் அது அமைக்கப்பட்டது; ஸகல

லோகங்களிலும் ப்ரஸித்திபெற்றது; பனிரெண்டு யோஜனை நீளமும் மூன்றுயோஜனை அகலமுமுள்ளது; மேடுபள்ளமில்லாத ஸமபூமியில் நேர்த்தியான தான்யங்கள் ஏராளமாயும் செழிப்பாயும் வளரக்கூடிய ஸ்தலத்தில் கட்டப்பட்டது. அதிலுள்ள ஜலம் கரும்பின் சாற்றைப் போல் ருசியுள்ளது. அதிலிருந்து பலவிடங்களுக்குப் போகும் வழிகளும், பலதேசங்களுக்குப் போகும் சாலைகளும், நிழல் அடர்ந்த மரங்களுடன் இருபுறத்திலும் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. கோட்டையைச் சுற்றியிருக்கும் அகிழ்கள் மிகுந்த ஆழமும் அகலமுமுள்ளவை; சத்ருக்கள் ப்ரவேசிக்க முடியாத அரண்களையுடையவை; கோட்டைச் சுவர்களில் சதக்னி முதலிய ஆயுதங்களும் பலவித யந்த்ரங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆயுதபாணிகளான வீரர்கள் இரவும் பகலும் கண்கொட்டாமல் அங்கே காவலிருக்கிறார்கள்; கோட்டைக்கதவுகள் மிகவும் உறுதியானவை. எக்காலத்திலும் பழங்களும் புஷ்பங்களும் நிறைந்த மரங்களுள்ள பலசோலைகளும் தோப்புகளும் தோட்டங்களுமுண்டு. ராஜவீதிகள் கோணாமல் ஒழுங்காக நகரத்தின் எல்லை வரையில் போகின்றன. அங்கே தினந்தோறும் ஜலந்தெளித்துப் புஷ்பங்களை இறைப்பார்கள். கடைவீதிகள் அகலமாகவும் ஜனங்களுக்கு வேண்டிய ஸகலபதார்த்தங்களால் நிறைந்துமிருக்கின்றன. விலையற்ற ரத்னங்களிழைத்த பல அரண்மனைகளும் க்ரீடாக்ருஹங்களும் (விளையாட்டறைகள்) க்ரீடாபர்வதங்களும் உப்பரிகைகளும் அங்கங்கே காணப்படும். தனதான்யங்களாலும் ரத்னங்களாலும் ஆடையாபரணங்களாலும் நிறைந்து, அந்த நகரம் விமானங்களைப் போன்ற அழகான வீடுகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. உயரமான மேடைகளின்மேல் கட்டப்பட்ட வீடுகளின் உச்சியில் அழகுள்ள கொடிகள் பறக்கின்றன.

புண்யபுருஷர்கள் தபோபலத்தால் அடைந்த விமானக்கூட்டங்களைப்போல் தூரத்திலிருந்து காணப்படுகிறது. சொக்கட்டான் பலகையைப்போல் நடுவில் ராஜ க்ருஹங்களும், சுற்றிலும் ராஜவீதிகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. சில்பிகளாலும், அரசனுடைய கீர்த்தியைப் புகழும் ஸூத மாகத வந்தி வைதாளிகர்களாலும், ஸங்கீதத்திலும் நாட்யத்திலும் நிபுணர்களாலும், அரசனைக் காண்பதற்கும் கப்பங்கட்டுவதற்கும் பல தேசங்களிலிருந்து வந்த அரசர்களாலும், தீவுகளிலிருந்தும் மற்றத் தேசங்களிலிருந்தும் வ்யாபாரத்திற்காக வந்த வைச்யப் பிரபுக்களாலும் அது எப்பொழுதும் நிறைந்திருக்கும். பேரீ மிருதங்கம் மர்த்தளம் வீணை புல்லாங்குழல்

முதலியவைகளின் நாதம் எப்பொழுதும் கேட்கப்படும். உத்தம ஜாதி யானைகள், குதிரைகள், பசுக்கள், ஒட்டகங்கள், எருதுகள், கோவேறு கழுதைகள் பல கோடியுண்டு.

அதிலுள்ள ப்ராஹ்மணர்கள் வித்யைகளிலும் கலைகளிலும் நிபுணர்கள்; அக்னிஹோத்ரம் ஔபாஸனம் வைச்வதேவம் முதலிய வைதிகக்ரியைகளை விதிப்படி அநுஷ்டிப்பவர்கள்; வேத வேதாங்கங்களைப் பூர்ணமாய்க் கற்றவர்கள்; சமம் தமம் ஸத்யம் முதலிய உத்தம குண ஸம்பன்னர்கள்; வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளைப்போன்றவர்கள்.

அதிலுள்ள க்ஷத்ரியர்கள் மஹாரதர்கள், அஸ்த்ர சஸ்த்ர வித்யையில் ஈடில்லாதவர்கள், ஸகல உபாயங்களையுமறிந்தவர்கள். துணையற்றவனையும் ஒரே புத்ரனையும் அடிப்பதில்லை. மறைந்திருந்து அடிப்பதுமில்லை. மதங்கொண்ட சிங்கம் புலி யானை பன்றி முதலியவைகளைக் கைகளாலும் கூர்மையான ஆயுதங்களாலும் கொல்வார்கள்.

இப்படி அழகு வாய்ந்து நிகரற்ற காந்தியுடன் அயோத்யையென்ற உத்தம நகரம் பூமியில் ப்ரஸித்திபெற்றது.



# ஸர்க்கம் 6.

# த ச ர த ர்.

(அவதாரிகை)

பகவான் அவதரிக்கத் தகுந்த புருஷன்

மஹாதேஜஸுள்ள வைவஸ்வதமனு லோகத்தை ரக்ஷித்தது போல், தசரதர் அயோத்யையிலிருந்து ராஜ்யத்தை ஆண்டு வந்தார். அவர் வேதங்களைக் கற்று, அவைகளின் உட்கருத்தை நன்ருகவறிந்தவர்; சூரர்களையும் வித்வான்களையும் ஆதரித்து வெகுமதித்து வசப்படுத்தினவர்; வெகு காலத்திற்குப் பின் வரும் விஷயங்களை யோசிப்பவர்; மஹா தேஜஸ்வி; நகரத்திலும் நாட்டிலுமுள்ள ஜனங்களுக்கு மிகவும் ப்ரியமானவர்; இக்ஷ்வாகு வம்சத்தரசர்களில் அதிரதர்; விதிப்படி யாகங்களைச் செய்தவர்; குளம் கிணறு வெட்டுவிப்பது, தோட்டம் போடுவது, ஆலயங்களைக் கட்டுவது முதலிய தர்ம கார்யத்தில் வெகு ஆசையுள்ளவர்; தன் குடிகளை வசப்படுத்தினவர்; மஹர்ஷிகளுக்கு ஏறக்குறைய ஸமமானவர்; ராஜச்ரேஷ்டர்; மூன்று லோகங்களிலும் ப்ரஸித்திபெற்றவர். எல்லையற்ற தேஹபலமுள்ளவர்; சத்ருக்களை ஜயித்தவர்; உத்தம மித்ரர்களுள்ளவர்; தனம் தான்யம் தங்கம் முதலிய உலோகங்கள் ரத்னம் பட்டு வஸ்த்ரம் முதலிய அபூர்வ வஸ்துக்களைச் சேகரிப்பதில் இந்த்ரனையும் குபேரனையும் போன்றவர்; ஸத்யத்தில் மிகுந்த ப்ரீதியுள்ளவர்; புருஷார்த்தங்களை ஒன்றிற்கொன்று தடைபடாமல் அனுஷ்டிப்பவர்; அவரால் ரக்ஷிக்கப்பட்ட அயோத்யை, இந்த்ரனுல் ஆளப்பட்ட அமராவதியைப் போல் விளங்கிற்று.

நகரங்களுக்குள் மேலான அயோத்யையில் வஸிப்பவர்களெல்லோரும் ஸுகமாக வஸிப்பதால் எப்பொழுதும் ஸந்தோஷமும் தர்மசிந்தையும் வாய்ந்தவர்கள். குருமுகமாகச் சாஸ்த்ரங்களைப் பல தடவை கற்றவர்கள். தங்களுக்குக் கிடைத்ததால் திருப்தியடைந்து பிறருடைய பொருளில் கொஞ்சமேனும் ஆசையில்லாதவர்கள்; உண்மையுரைப்பவர்கள். அல்பத்தனமுள்ளவர்களும், பசு குதிரை

தன தான்ய மில்லாதவர்களும், புருஷார்த்தங்களை அடையாத குடும்பி களும் அதிலில்லை. காமத்திலேயே மிகுந்த ஆசையுள்ளவனும், தான, தர்ம காரியம், புத்ரன், பார்யை, பெற்றோர், ஸஹோதரன், பந்துமுதலியவர்களை லோபத்தால் உபத்ரவிக்கும் கதர்யனும், கொடியவனும், படிப்பில்லாதவனும், நாஸ்திகனும் அதிலில்லை. எல்லா ஆண் பெண்களும் இந்த்ரியங்களை அடக்கி, இயற்கையாகவே நற்குணமும் ஆசாரமும் பொருந்தி, மஹரிஷிகளைப்போல் சுத்தமான மனதுள்ளவர்கள்; குண்டலம், தோள்வளை, கைவளை, தலைப்பாகை, ரத்னமாலை யில்லாதவனும், தைல ஸ்நானஞ்செய்து வாஸனை த்ரவ் யங்கள் கலந்த சந்தனத்தை அணிந்து புஷ்பங்களைச் சூடிக்கொள்ளாத வனும், ஸ்வல்ப ஸுகமுள்ளவனும், மனதை அடக்காதவனும், அக்னி ஹோத்ரங்களையும் யாகங்களையும் விதிப்படி செய்யாதவனும், பர ஸ்த்ரீகளிடத்தில் ஆசையுள்ளவனும், ஸ்வல்பமான வித்யையும் செல் வமுமுள்ளவனும், போதுமான ஆஹாரம் கிடைக்காதவனும், திருட னும் அந்த நகரத்திலில்லை.

வேதியர்கள் இந்த்ரியங்களையடக்கித், தானம் அத்யயனம் தானம் வாங்குவதென்றவைகளைக், குறைகளை விலக்கி நடத்திக்கொண் டிருந்தார்கள். நாஸ்திகன், பொய்யன், சாஸ்த்ரப்ரியாதவன், அஸுயைக்காரன், இம்மை மறுமைக்கு வேண்டியவைகளை அடைய முடியாதவன், வேதவேதாங்கங்களைக் கற்காதவன், விருதங்களைச் செய்யாதவன், தானங்கொடாதவன், தீனன், மனவருத்தமுள்ளவன், நோயாளி, குரூபி, ராஜபக்திபற்றவன் அவ்வரசனுடைய காலத்தி லில்லை. நான்கு வர்ணத்தாரும் நன்றியுள்ளவர்களாக, உசிதமான தானங்கொடுப்பவர்களாக, தேவதைகளையும் அதிதிகளையும் பூஜிப்பவர் களாகச், சூரர்களாக, ஸத்யத்தையும் தர்மத்தையும் விடாதவர்களா கத், தீர்க்காயுஸுள்ள பெண்பிள்ளையுடையவர்களாக விருந்தார்கள். க்ஷத்ரியர்கள் வேதியர்களின் உத்திரவுப்படி நடந்தார்கள்; வைச்யர் கள் க்ஷத்ரியர்களை அநுஸரித்தார்கள்; சூத்ரர்கள் மேன்குலத்தா ருக்குப் பணிவிடைசெய்தார்கள்.

முன்காலத்தில் மனிதர்களுக்கு நாதனான வைவஸ்வத மனுவைப் போல் தசரதர் அயோத்யையை ஆண்டார். எண்ணிறந்த யுத்தவீரர் கள் அதை ரக்ஷித்தார்கள். அவர்கள் அஸ்த்ரசஸ்த்ர வித்தையயில் நிபுணர்கள். பிறர் செய்த அவமானத்தைப் பொறுக்காதவர்கள். கபடமற்றவர்கள்; எல்லையற்ற சௌர்யமுள்ளவர்கள். ஆகையால்,

ஸிம்ஹங்களால் நிறைந்த மலைக்குஹைகளைப்போல், சத்ருக்கள் நெருங்கமுடியாமல் அந்த நகரம் விளங்கிற்று.

காலாட்படைகளைத் தவிரக் காம்போஜம் பாஹ்லீகம் வனாயு ஸிந்து வென்ற தேசங்களிலுண்டாகி, இந்த்ரனுடைய உச்சைச்ச்ரவஸைப் போன்ற உத்தம ஜாதிக்குதிரைகள் கணக்கில்லாமல் அவ்வரசனுக்குண்டு.

விந்த்யம் ஹிமாசல முதலிய மலைகளில் பிறந்து, ஐராவதம் மஹாபத்மம் அஞ்சனம் வாமனமென்ற திக்கஜங்களின் குலங்களில் உண்டாகி, மலைகள் நடப்பதைப்போல் தோன்றி, எப்பொழுதும் மதங்கொண்ட பல யானைகளுண்டு. பத்ரம், மந்த்ரம், மிருகம், பத்ர மந்த்ரம், பத்ரமிருகம், மிருகமந்த்ரமென்று பல வகுப்புகள் அவைகளிலுண்டு.

இவ்விதமான ஸைன்யங்களின் மிகுதியால் அந்நகரத்திற்கு இரண்டு யோஜனை தூரம் வரையில் சத்ருக்கள் நெருங்கமுடியாது. அயோத்யையென்ற பெயர் (யுத்தத்தால் பிடிக்கமுடியாதது) அதற்குத் தகும்.

உறுதியான சுவர்கள், கோட்டை வாசல்கள், தாழ்ப்பாள்கள், விசித்ரமான வீடுகள், பலவகை ஜனங்களால் நிறைந்து, வஸிப்பதற்கு யோக்யமாக, அயோத்யையென்று உண்மையான பெயருடன் விளங்கும் அந்நகரத்தை, மஹா தேஜஸ்வியும், சத்ரு குலகாலனும், தேவேந்த்ரனை எவ்விதத்திலும் ஒத்தவருமான தசரதர், நக்ஷத்ரங்களைச் சந்த்ரன் ரக்ஷிப்பது போல் காப்பாற்றி வந்தார்.

## ஸர்க்கம் 7.

# மந்த்ரிகள்.

மஹா புத்திமானும் மஹா வீரனுமான தசரதருக்கு திருஷ்டி, ஜயந்தன், விஜயன், ஸித்தார்த்தன், அர்த்தஸாதகன், அசோகன், மந்த்ரபாலன், ஸுமந்த்ரனென்று எட்டு மந்த்ரிகளுண்டு. மேலும் வஸிஷ்ட வாமதேவர்கள் எப்படி அவருக்கு மிகவும் ப்ரதானர்களோ, அப்படி மற்ற ரித்விக்குகள் (யாகம் செய்விப்பவர்கள்) மந்த்ரிகளாகவும் பிரதானர்களாகவுமிருந்தார்கள். அவர்கள் ஆலோசனையில் நிபுணர்கள், இங்கிதமறிந்தவர்கள், அரசனுக்கு அனுகூலமாயும் பிரியமாயுமிருக்கும் கார்யத்தையே எப்பொழுதும் செய்கிறவர்கள், கீர்த்திமான்கள், ராஜ கார்யத்தில் ஊக்கமுள்ளவர்கள், மனோ வாக்கு காயங்களில் சுத்தர்கள், யஜமான த்ரோஹமற்றவர்கள்; ஆன்வீக்ஷிகி, தண்டம், வார்த்தா, த்ரயீயென்ற ராஜநீதி சாஸ்த்ரத்தில் கரைகண்டவர்கள்; அதர்மத்தைச் செய்வதில் வெட்கமுள்ளவர்கள்; சாஸ்த்ரங்களால் விலக்கப்பட்ட விஷயங்களில் இந்த்ரியங்களையும் மனதையும் செலுத்தாதவர்கள், ஐச்வர்யம், புத்தி, தடையற்ற பராக்ரமம் வாய்ந்தவர்கள்; ராஜ கார்யங்களில் தவறாதவர்கள்; சொன்னபடி செய்கிறவர்கள்; தேஜஸும் பொறுமையுமுள்ளவர்களென்று பெயர் பெற்றவர்கள்; எப்பொழுதும் சிரிப்புடன் பேசுகிறவர்கள், காமக்ரோத லோபங்களுக்கு உட்பட்டுப் பொய் சொல்லாதவர்கள்; எல்லாவிதத்திலும் பரீக்ஷிக்கப்பட்டு நம்பிக்கையுள்ளவர்கள்; தன் ராஜ்யத்திலும் மற்று ராஜ்யங்களிலும் மூன்று காலங்களில் நடக்கும் விஷயங்களைத் தூதர்களாலும் சாரர்களாலும் உடனே அறிகிறவர்கள்; நன்றாக ஆலோசிக்கப்பட்டு நிச்சயஞ் செய்த விஷயத்தை ஸமயோசிதமாகத் தெரிவிப்பதில் நிபுணர்கள்; தன் புத்ர மித்ர பந்துவானாலும் குற்றத்திற்குத் தகுந்தபடி தண்டிப்பவர்கள்; பொக்கிஷத்தையும் ஸைன்யத்தையும் அடிக்கடி விருத்தி செய்வதில் நோக்கமுள்ளவர்கள்; சத்ருக்களைத் தடுக்கும் சக்தியும் அவர்களை ஜயிப்பதில் குறைவற்ற உத்ஸாஹமுமுள்ளவர்கள்; நீதிசாஸ்த்ரப்படி நடப்பவர்கள்; தங்களுடைய ராஜ்யத்தில் வஸிக்கும் ஸாதுக்களை ரக்ஷிப்பவர்கள்; சத்ருவாயிருந்தாலும் குற்றஞ்செய்யாதவனை உபத்ரவிக்காதவர்கள்; நான்கு வர்ணத்தாரை

யும் ஹிம்ஸிக்காமல், குற்றவாளிகளின் பலம் வயஸ் தேசம் கால முதலி யவைகளுக்குத் தகுந்தபடி அபராதங்களை விதித்துப் பொக்கிஷத்தை நிரப்புகிறவர்கள்; ஒரே மனதுள்ளவர்கள்; நேர்த்தியான வஸ்த்ர ஆபரணங்களால் எப்பொழுதும் அலங்கரிக்கப்பட்டவர்கள்; நன் னடத்தையுடையவர்கள்; அரசனுடைய ஹிதத்தையே நாடி நீதி தவருதவர்கள்; ஆசார்யர்களின் தோஷங்களைக் கவனிக்காமல் குணங் களையே க்ரஹிப்பவர்கள். நடந்ததையும் நடக்கப்போவதையும் நிச் சயிக்கும் புத்திமான்களென்றும் பராக்ரமசாலிகளென்றும் எல்லாத் தேசங்களிலும் பெயர்பெற்றவர்கள்; ஸந்தி விக்ரஹ முதலிய குணங் களையும், ஸாமதான பேததண்டமென்ற உபாயங்களையும் அனுஷ்டிக் கும் காலத்தையறிந்தவர்கள்; ராஜ்ய வ்யவஹாரங்களை வெளியிடாத வர்கள்; மென்மேலும் தோன்றும் யுக்தியுடையவர்கள்; எப்பொழு தும் ப்ரியமாகப் பேசுகிறவர்கள்.

இவர்கள் ராஜ்ய கார்யங்களை நடத்தி வரும்பொழுது ப்ரஜை கள் தர்மத்திலேயே நோக்கமுள்ளவரானார்கள். இந்த உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்ட மந்த்ரிகளுடன் தசரதர் கவலை யின்றி ஆண்டு வந்தார். அவர் ராஜ்யத்தில் நடக்கும் ஸகல விஷ யங்களையும் சாரர்களால் உடனேயறிந்து, பராக்ரமத்தால் சத்ருக்களை ஜயித்தார்; அதர்மத்தில் புத்தியைச் செலுத்தாமல் ராஜ நீதிப்படி குடிகளை ரக்ஷித்தார்; எல்லையின்றி கொடுப்பவரென்றும், ஸத்யந் தவ ருதவரென்றும், மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தியுள்ளவர். உத் தம மித்ரர்களை ஸம்பாதித்துக் குடிகளுக்கு நேரக்கூடிய எல்லா உபத்ரவங்களையும் நீக்கினர்; அவரைப் போன்றவனும் அவருக்கு மேற்பட்டவனும் அக்காலத்தில் ஒரு அரசனுமில்லை. ஆலோசனை யில் நிபுணர்களும், ராஜ்ய கார்யங்களில் ஸமர்த்தர்களும் புத்திமான் களுமான மந்த்ரிகளால் சூழப்பட்ட தசரதர், ஆயிரம் கிரணங்களுடன் உதிக்கும் ஸூர்யனைப்போல் ப்ரகாசித்து, இந்த்ரன் ஸ்வர்க்கத்தை ரக்ஷிப்பதுபோல் பூமியை ஆண்டு வந்தார்.

ஸர்க்கம் 8.

# தசரதர் அச்வமேதஞ் செய்ய நிச்சயித்தது.

---

அவதாரிகை.

பகவானுடைய ஆராதனமான அச்வமேதமே அவர் அவதாரஞ் செய்வதற்கு ஸாதனமாயிற்று.

---

தர்மாத்மாவும் இவ்விதமான மஹிமை பொருந்தினவருமான தசரதர், புத்ரபாக்யத்தை அடையப் பலஸாதனங்களை அனுஷ்டித்தும் பயன்படவில்லை. மனம் நொந்து இதற்கு என்ன செய்யலாமென்று யோசித்து, அதற்கு இடையூறாயிருக்கும் பாபங்களைப் போக்கக்கூடிய உபாயம் அச்வமேதமேயென்று மந்த்ரிகளிடத்தில் சொல்ல அவர்களும் அதை அங்கீகரித்தார்கள். பிறகு அரசன் "ஸுமந்த்ரரே! என் புரோஹிதரையும் ஆசார்யர்களையும் சீக்ரமாக அழைத்து வாரு"மென்றார். அவர் அதி வேகமாகச் சென்று புரோஹிதரான வஸிஷ்டரையும் வேத வேதாங்கங்களில் கரைகண்ட ஸுயக்ஞர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர் முதலியவர்களையும், மற்ற ப்ராஹ்மணோத்தமர்களையும் அழைத்து வந்தார். தர்மவானான தசரதர் அவர்களை விதிப்படி பூஜித்து "ப்ராஹ்மண ச்ரேஷ்டர்களே! என் வம்சத்தை விருத்திசெய்வதற்குப் புத்ரனில்லாமல் புலம்பும் எனக்கு இந்த இராஜ்யமும் தனமும் அதிகாரமு மிருந்தும் என்ன ஸுகம்? புத்ரோத்பத்தியைத் தடுக்கும் பாபங்களைப் போக்க அச்வமேதமே தகுந்த உபாய மென்று எண்ணுகிறேன். ஆகையால் அதை விதிப்படி நடத்த ஏற்பாடுகளைச் செய்யுங்க"ளென்றார்.

இப்படித் தர்மத்தையும் அர்த்தத்தையும் ஒத்து மதுரமாக அரசன் சொன்ன வார்த்தைகளை அந்த உத்தம ப்ராஹ்மணர்கள் மிகவும் கொண்டாடி "மஹாராஜா! தர்ம கார்யத்தில் தங்களுக்கு ச்ரத்தை உண்டானபடியால் இந்த அச்வமேதத்தால் நிச்சயமாகப்

புத்ரர்களை அடைவீர்கள். யாகஸாமக்ரிகளைச் சேர்த்து, அச்வமேதக் குதிரையைப் பூமிப்பிரதக்ஷிணஞ் செய்ய அனுப்பலா"மென்றார்கள்.

தசரதர் அளவற்ற ஸந்தோஷத்தால் மலர்ந்த கண்களுடன் "மந்த்ரிகளே! வஸிஷ்ட மஹர்ஷியின் உத்திரவுப்படி யாகஸாமக்ரிகளை ஸம்பாதிக்க வேண்டும். யாகக் குதிரையைக் காப்பாற்றத் தகுந்தவர்களை ஏற்படுத்திப், பூமி ப்ரதக்ஷிணஞ் செய்ய உபாத்யாயர்களுடன் அனுப்புங்கள். ஸரயூ நதியின் வடகரையில் யாகசாலை அமைக்கப்படட்டும். விக்னங்களை விலக்கச், சாந்தி ஹோமம் முதலியவை கல்பஸூத்ரப்படி நடக்கட்டும். பல ப்ரஹ்மராக்ஷஸர்கள் இவ்விதமான யாகங்களைக் கெடுக்க ஸமயம் பார்த்துக்கொண்டிருப்பார்கள். யாகக்ரியைகளில் குற்றம் நேர்ந்தால் யஜமானனுக்குக் கெடுதி. இவ்வித அபாயங்கள் நேராவிட்டால் அரசர்களெல்லோரும் இந்த யாகத்தை அடிக்கடி ஸுலபமாகச் செய்வார்களே. ஆகையால் இது விதிப்படி யாதொரு விக்னமில்லாமல் முடியும் வழியைத் தேடுங்கள். நீங்கள் எவ்விதத்திலும் திறமையுள்ளவர்களாகையால் உங்களிடத்தில் இதை ஒப்புவிக்கிறே"னென்றார். மந்த்ரிகள் "மஹாராஜ! உத்திரவுப்படி செய்கிறோ"மென்றார்கள். பிறகு ப்ராஹ்மணர்கள் அரசனை ஆசீர்வதித்து, அனுமதி பெற்றுக் கொண்டு தங்களிருப்பிடஞ் சென்றார்கள். அரசன் "மந்த்ரிகளே! ரித்விக்குகள் சொல்லுகிறபடி யாக ஸாமக்ரிகளை ஸித்தஞ் செய்யுங்க"ளென்று உத்திரவிட்டனுப்பி ஸந்தோஷத்தால் மலர்ந்த முகத்துடன் அந்தப்புரத்திற்குப் போனார். தன் ப்ரிய பார்யைகளை அழைத்து, "நமக்குப் புத்ரபாக்யம் உண்டாவதற்கு அச்வமேதம் செய்யப்போகிறேன். நீங்களும் தீக்ஷை பெறவேண்டு"மென்றார். அதைக் கேட்டு அந்த ராஜபத்னிகளின் அழகிய முகங்கள் பனி நீங்கினவுடன் விளங்கும் தாமரைகளைப்போல் ப்ரகாசித்தன.

# ஸர்க்கம் 9.

# ரிஷ்யசிருங்கர்.

அவதாரிகை

*ராமனுடைய அவதாரத்திற்குப் பூர்வாங்கமான புத்ரகாமேஷ்டியைச் செய்யத் தகுந்த அதிகாரி 9, 10, 11-வது ஸர்க்கங்களில் வர்ணிக்கப்படுகிறார்.*

தசரதருக்கு ஸாரதியும் மந்த்ரியுமான ஸுமந்த்ரர் ஒருநாள் அவரிடத்தில் ரஹஸ்யமாக வந்து "மஹாராஜ! ப்ராஹ்மண ச்ரேஷ்டர் தங்களிடத்தில் இப்பொழுது சொன்ன விஷயங்களை முன்றுகாலங்களை அறிந்த ஸனத்குமாரர் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

காச்யபருக்கு விபண்டகரென்று மஹா கீர்த்திமானுன ஒரு புத்ரருண்டு. அவருக்கு ரிஷ்ய சிருங்கரென்ற ஒரு குமாரன் பிறப்பான். அவன் பால்யம் முதல் காட்டிலேயே வளர்ந்ததால் தன் பிதாவிற்குப் பணிவிடை செய்வதைத் தவிர வேறொன்றையும் அறியான். அக்னிகார்யங்களையே கவனித்துக்கொண்டிருக்கும் அந்த ரிஷிபுத்ரனுடைய ப்ரஹ்மசர்யவிரதத்திற்குச் சில காலத்திற்குப் பின் கெடுதி நேரும்.

அந்த ஸமயத்தில் ரோமபாத மஹாராஜன் அங்க தேசத்தை ஆள்வான். மஹாபலவானும் விசேஷகீர்த்திசாலியுமான அவ்வரசனுடைய குற்றத்தால் அந்த ராஜ்யத்தில் பலவருஷங்கள் வரையில் மழை பெய்யாது. ஸகல ப்ராணிகளும் சொல்ல முடியாத கஷ்டமடைவதைப் பார்த்து ரோமபாதன் மனம் வருந்தி, வயஸாலும் வித்தையாலும் பெரியோர்களான ப்ராஹ்மணர்களை வருவித்து "மஹாத்மாக்களே! சாஸ்த்ரங்களைக் கற்று லோகாசாரங்களில் நிபுணர்களான நீங்கள், இதற்குத் தகுந்த ப்ராயச்சித்தத்தை விதியுங்க" ளென்று வேண்டிக்கொள்வான். வேதங்களைக் கரைகடந்த அந்தப்புண்யாத்மாக்கள் "அரசனே! விபாண்டகருடைய புத்ரனுன ரிஷ்யசிருங்கரை எப்படியாவது இங்கே தருவித்தால் உடனே மழை பெய்யும். அவரைப்

பூஜித்து, உமது பெண் சாந்தையை அவருக்கு விதிப்படி கன்யா தானஞ் செய்யு"மென்பார்கள். அவரை அழைத்துவர ப்ராஹ்மணர்களே தகுமென்று நிச்சயித்துத், தன் புரோஹிதரையும் மந்த்ரிகளேயும் மிகவும் வேண்டி மர்யாதையுடன் அனுப்புவான். அவர்கள் "மஹாராஜ! விபாண்டகர் எங்களைச் சபித்துவிடுவார். நாங்கள் போகமாட்டோம். தயவுசெய்யவேண்டு"மென்று பயத்தால் முகம் வாடி அரசனை ப்ரார்த்திப்பார்கள். அவர்கள் சொல்லும் உபாயப்படி வேச்யைகளை வனத்திற்கனுப்பி, அரசன் ரிஷிபுத்ரரைத் தருவிப்பான். உடனே மழை பெய்யும். ரோமபாதன் ஸந்தோஷமடைந்து சாந்தையை அவருக்கு மணஞ்செய்விப்பான். அந்த ரிஷியே தசரதருக்குப் புத்ரனுண்டாகும் உபாயத்தை செயவாரெ'ன்று ஸனத்குமாரர் சொன்னர். அதைத் தங்களுக்கு நான் தெரிவித்தே" னென்றார். தசரதர் அதற்கு ஸந்தோஷித்து "ரிஷ்யசிருங்கரைக் காட்டிலிருந்து அரசன் அழைத்து வந்ததை விரிவாய்ச் சொல்லு" மென்றார்.

## ஸர்க்கம் 10.

(தொடர்ச்சி.)

ஸுமந்த்ரர் "மஹாராஜ! புரோஹிதர்களும் மந்த்ரிகளும் அரசனை வணங்கி, 'நாங்கள் சொல்லுகிறபடி செய்தால் கார்யம் நிச்சயமாய்க் கைகூடும். அந்த முனி காட்டிலேயே பிறந்து வளர்ந்தவர். நித்ய கர்மங்களிலும் வேதாத்யயனத்திலும் பிதாவிற்குப் பணிவிடை செய்வதிலும் ஆசை வைத்தவர். ஸ்த்ரீகளின் ஸ்வரூபத்தையும் லக்ஷணங்களையும் இந்த்ரிய ஸுகங்களையும் கொஞ்சமும் அறியாதவர். ருசியுள்ள பக்ஷணங்களாலும் வாஸனை த்ரவ்யங்களாலும், மதுரமான பாட்டாலும், அழகுள்ள ஸ்த்ரீகளாலும் ப்ராணிகளின் மனதைக் கவரக்கூடிய இந்த்ரிய ஸுகங்களாலும், மிருதுவான தேஹ ஸ்பர்சத்தாலும் இப்படிப்பட்டவரை மயக்கி, இங்கே அழைத்து வருகிறோம். இப்படிச் செய்ய நிச்சயித்து அழகுள்ள வேசிகளுக்கு வேண்டிய வஸ்த்ரங்களையும் ஆபரணங்களையும் தனத்தையும் வெகுமானமாய்க் கொடுத்தனுப்புங்கள். அவர்கள் எப்படியாவது அந்த ரிஷியை அழைத்து வருவார்க' ளென்றார்கள்.

அரசன் "அவர்களுக்குத் தகுந்தபடி நீங்களே எச்சரிக்கை செய்தனுப்புங்க"ளென்றார். அவர்கள் வேச்யைகளுடன் நேரில் பேச மாட்டோமென்று மந்த்ரிகளுக்கு உத்திரவிட, அவர்கள் வேச்யைகளைத் தருவித்து வேண்டிய வரையில் வெகுமதி செய்தனுப்பினார்கள்.

அவர்கள் வனத்திற்குச் சென்று, விபண்டகருடைய ஆச்ரமத்திற்கருகில் மறைந்திருந்து, ரிஷி குமாரன் ஒண்டியாய் வெளியில் வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவரோ மஹா புத்திமான்; எப்பொழுதும் ஆச்ரமத்திலேயே இருப்பவர்; பிதாவின் பணிவிடையில் கவனமுள்ளவர்; பட்டணங்களையும் தேசங்களையும் அவைகளிலுள்ள ப்ராணிகளையும் பொருள்களையும் பிறந்தது முதல் பார்த்தவரல்ல. ஒருநாள் தைவச் செயலாய் அந்தப் பெண்களிருக்குமிடத்திற்கு வந்தார். அவர்கள் பார்ப்பவர்களின் மனதைக் கவரும்படி அலங்கரித்துக்கொண்டு, மதுரமாய்ப் பாடிக்கொண்டு அவரிடத்திற்கு வந்து "மஹர்ஷே! தாங்கள் யார்? ஜன ஸஞ்சாரமில்லாத இந்த க்ரூரமான வனத்தில் ஏன் ஒண்டியாய் வஸிக்கிறீ"ரென்றார்கள். தான் அதுவரையில் பார்க்காத ரூபமுள்ள அந்தப் பெண்களை நோக்கி ரிஷ்யசிருங்கர் "நான் விபண்டகருடைய புத்ரன். என் பெயர் ரிஷ்யசிருங்கன். அழகான கண்களையுடையவர்களே! தவம், ஜபம், ஹோமம், வேதாத்யயனம் முதலியவைகளில் கொஞ்சம் பயிற்சியுண்டு. எங்கள் ஆச்ரமம் ஸமீபத்திலிருக்கிறது. அங்கே வந்தால் விதிப்படி உங்களுக்குப் பூஜை செய்கிறே"னென்றார். அவர்கள் அதற்கிணங்கி அவருடன் செல்ல, அவர் அர்க்யம் பாத்யம் பழங்கள் கிழங்குகள் முதலியவைகளால் வேச்யைகளை மிகவும் உபசரித்தார். வெகு ஆதரவுடன் அவர்கள் அதை அங்கீகரித்து, மஹர்ஷி வருமுன் அங்கிருந்துபோக விரும்பி "ஸ்வாமி! நாங்கள் தங்களுக்காக கொண்டு வந்த பழங்களையும் கிழங்குகளையும் புஜிக்க வேண்டு"மென்று ருசியுள்ள மோதகங்களையும் பலவித பக்ஷணங்களையும் கொடுத்தார்கள். அபூர்வமான பழங்களென்றெண்ணி அவரும் அவைகளைத் தின்று மிகுந்த ஸந்தோஷத்தையும் ஆச்சர்யத்தையும் அடைந்தார். பிறகு அவர்கள் "ஸ்வாமி! எங்களுடைய அனுஷ்டான வேளை தாண்டி விடும்; ஆச்ரமத்திற்குப் போகவேண்டும்; உத்திரவு கொடுங்க"ளென்று அவரை இறுகத் தழுவி, அங்கிருந்து போய் விட்டார்கள். அவர்களுடைய ரூபத்தாலும், மிருதுவான தேஹ ஸ்பர்சத்தாலும், அதிலிருந்து வீசும் மணத்தாலும், மதுரமான தின்பண்டங்களாலும், இனிய பாட்டாலும் அந்த ரிஷி புத்ரன் மனங்

கலங்கி, அவர்களை விட்டுப் பிரிந்ததைத் தாங்காமல், அவர்களையே நினைத்துக்கொண்டு இனி எப்பொழுது பார்ப்போமென்றிருந்தார். அவர்களை முதலில் கண்டவிடத்திற்கு மறுநாள் வந்து, அந்த வழியையே பார்த்துக்கொண்டிருந்தார்.

அந்தப் பெண்களும் அங்கே வந்து அவரிருப்பதைக் கண்டு, இவர் நமது வலையில் அகப்பட்டாரென்று மகிழ்ந்து, "ஸ்வாமி! தாங்களும் எங்களுடைய ஆச்ரமத்திற்கு வர வேண்டாமா? போவோம். தாங்கள் நேற்று புஜித்த பழங்களைப்போல் அங்கே பல உண்டு. தங்களை விசேஷமாய் உபசரிக்க விரும்புகிறோம், வாருங்க"ளென்றழைத்தார்கள். அவர்களுடைய வார்த்தையால் மயங்கி, ரிஷி புத்ரர் கட்டுப்பட்டவுடன் வேச்யைகள் அவரை அங்க தேசத்திற்கு அழைத்துப் போனார்கள்.

அந்த ராஜ்யத்தில் அவர் அடிவைத்தவுடன் பெரும் மழை பெய்தது. ஸகல ப்ராணிகளும் ஸந்தோஷித்தன. எல்லோரும் வேண்டின மழையைக் கொண்டுவந்த அந்த ரிஷியை ரோமபாதர் மிகுந்த வணக்கமாக எதிர்கொண்டு நமஸ்கரித்து, விதிப்படி பூஜித்துக் கைகூப்பி, "ஸ்வாமி! தங்களை இப்படி ஏமாற்றி அழைத்து வந்தேனென்று தாங்களும் மஹர்ஷியும் கோபிக்காமல், என் குற்றத்தைப் பொறுக்கவேண்டு"மென்று ப்ரார்த்தித்தான்; அவரை அரண்மனைக்கு அழைத்துப் போய், சாந்தையென்ற தன் பெண்ணை அவருக்கு மணஞ் செய்வித்தான். ரிஷ்யசிருங்கர் அங்கே ஸகல ஸௌக்யங்களையும் அனுபவித்துக்கொண்டு சிலகாலம் தங்கியிருந்தார்.



## ஸர்க்கம் 11.

# தசரதர் ரிஷ்யசிருங்கரை அழைத்துவந்தது.

"ராஜச்ரேஷ்ட! கேளும், ஸனத்குமாரர் பின்வருவதையும் சொன்னார். 'இக்ஷ்வாகுவம்சத்தில் தசரதனென்ற ஓர் தர்மாத்மா உண்டாவான். அவன் ஸத்யம் தவறாத தன் பெண்ணான சாந்தையை ரோமபாதனென்ற நண்பனுக்கு மகளாகக் கொடுப்பான்; பிறகு ஒரு ஸமயத்தில் அவனிடத்திற்குப் போய் 'தர்மபுத்திபுள்ள மித்ர! வெகு காலமாய் எனக்குப் புத்ர பாக்யமில்லை. என் வம்சத்தை வளரச் செய்யும் குமாரன் பிறக்கும்படி ஒரு யாகத்தைச் செய்யவேண்டும். சாந்தையின் கணவனான ரிஷ்யசிருங்கரிடத்தில் இதைச் சொல்லி, அவர்களை நீ அயோத்யைக்கு அனுப்பவேண்டு'மென்று கேட்டுக் கொள்வான். தசரதருடைய இஷ்டத்தை நிறைவேற்றக்கூடியவர் ரிஷ்யசிருங்கரேயென்று அங்கராஜன் நிச்சயித்து, ஒருவருடனும் யோசிக்காமல் தன் பெண்ணையும் மருமகனையும் அயோத்யைக்கனுப்பு வான். கீர்த்தியில் ப்ரியமுள்ள தசரதன கவலையற்று மிகுந்த ஸந் தோஷத்துடன் அந்த ரிஷியை உபசரித்து "ஸ்வாமி! நான் புத்ர னைப் பெற்றுப் புண்ய லோகங்களையடையப் புத்ரகாமேஷ்டி செய் விக்கவேண்டு"மென்று கேட்டுக்கொள்வான். அந்த ரிஷி அதற் கிணங்கி இஷ்டியைச் செய்வார். அதனால் நான்கு புத்ரர்கள் பிறப் பார்கள். அவர்கள் அளவற்ற பராக்ரமசாலிகளாக, ஸகல லோகங் களிலும் கீர்த்திமான்களாக, ஸூர்ய வம்சத்தை வளரச் செய்கிறவர் களாக விளங்குவார்க"ளென்று, மூன்று காலங்களையுமறிந்த தேவ ச்ரேஷ்டரான ஸனத்குமாரர் சென்ற கிருதயுகத்தில் சொன்னார். ஆகையால் தாங்கள் பந்துக்களையும் ஸைன்யத்தையும் அழைத்துக் கொண்டு அங்கதேசத்திற்குப் போய், அந்த மஹர்ஷியை நன்றாகப் பூஜித்து, ஸகல மர்யாதையுடன் அழைத்து வரவேண்டு"மென்றார்.

தசரதர் அதை வஸிஷ்டருடன் ஆலோசித்து, அந்தப்புர ஸ்தரீ களையும் மந்த்ரிகளையும் அழைத்துக்கொண்டு, நாடு நகரம் வனம் மலை நதிகளைத் தாண்டி, அந்த முனிச்ரேஷ்டர் வஸிக்கும் தேசத்திற்கு

வந்து, ரோமபாதருடைய அரண்மனையில் ரிஷ்யசிருங்கர் அக்னியைப் போல் ஜ்வலிப்பதைக் கண்டார். ரோமபாதன் தன் ப்ரிய மித்ரன் வந்ததால் எல்லையற்ற மகிழ்ச்சியடைந்து, அவரை மிகவும் மர்யாதையாக உபசரித்து, அவர் தனக்குப் பரம மித்ரனென்பதையும் சாந்தையின் பிதாவென்பதையும் அம்முனிவருக்குத் தெரிவித்தார். அதை அறிந்து மஹர்ஷி, தன் மாமனாரை விசேஷமாக உபசரித்தார்.

இப்படி ஆதரவுடன் பூஜிக்கப்பட்டு ஏழெட்டு நாள்கள் வரையில் தசரதர் அங்கிருந்து, பிறகு "மித்ர! சாந்தையையும் ரிஷ்யசிருங்கரையும் என்னுடன் அனுப்பவேண்டும்; அவர்களால் ஒரு பெரிய கார்யம் எனக்கு ஆகவேண்டியிருக்கிற"தென்றார்.

ரோமபாதர் அதற்கு ஸம்மதித்து அம்முனிவரிடத்திற்குச் சென்று "ஸ்வாமி! தாங்களும் சாந்தையும் அயோத்யைக்குப் போய், தசரதருக்கு ஓர் பெரிய உபகாரஞ் செய்யவேண்டு"மென்று ப்ரார்த்தித்தார். அந்த ரிஷி புத்ரன் அதை ஒப்புக்கொண்டார். பிறகு அவ்வரசர்கள் ஆலிங்கனஞ் செய்து, ப்ரீதியுடன் கைகூப்பி உத்தரவு பெற்றுக்கொண்டார்கள்.

தசரதர் அதி வேகமாகச் செல்லக்கூடிய தூதர்களை அழைத்து "நீங்கள் அயோத்யைக்குப் போய் எங்களுடைய வரவைத் தெரிவித்து நகரத்தைச் சுத்தஞ் செய்து, ஜலந்தெளித்துத், தூபங்களாலும் மாலைகளாலும் த்வஜங்களாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கச் சொல்லுங்க"ளென்று அனுப்பினார். அயோத்யா வாஸிகள் அப்படியே செய்யத், தசரதர் மஹர்ஷியை முன்னிட்டுக்கொண்டு, சங்கம் துந்துபி பேரீ முதலிய வாத்ய கோஷங்களுடன் அதில் ப்ரவேசித்தார். முனிச்ரேஷ்டரை அழைத்துவந்த அரசனைக் கண்டு குடிகள் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்கள். தசரதர் மஹர்ஷிக்கு விதிப்படி பூஜைசெய்து அந்தப்புரத்தில் இருத்தித், தன் குறைகள் யாவும தீர்ந்து கோரிக்கைகள் யாவும நிறைவேறினதாக எண்ணி ஸந்தோஷித்தார். வெகுகாலங் கழித்து அயோத்யைக்கு வந்த சாந்தையைக் கண்டு, அந்தப்புர ஸ்த்ரீகள் எல்லையற்ற ஆனந்தங்கொண்டார்கள். அரசனாலும் ராஜபத்னிகளாலும் வெகு ப்ரியத்துடன் ஆதரிக்கப்பட்ட சாந்தையும் முனிவரும் சிலகாலம் அங்கே ஸுகமாய் வஸித்துக்கொண்டிருந்தார்கள்.

# ஸர்க்கம் 12.

## அச்வமேதம்.

வெகுகாலமான பிறகு, ஸகல ப்ராணிகளின் மனதைக் கவரும் வஸந்த ருது வந்தது. தசரதருக்கும் அச்வமேதம் செய்ய எண்ண முண்டாயிற்று. தேவர்களைப்போல் ப்ரகாசிக்கும் ரிஷியை அவர் நமஸ்கரித்து "என் குலத்தை வளரச்செய்யும் புத்ரனுண்டாகும்படி அச்வமேதத்தை நடப்பித்து, அதின் முன்பாகமான ஸாங்க்ரஹணி யென்ற இஷ்டியில் தாங்கள் ப்ரஹ்மாவாக விருக்கவேண்டு"மென்று கேட்டுக்கொண்டார். முனிவர் "அப்படியே ஆகட்டும். யாக ஸாமக்ரிகளைச் சேரும். யாகக்குதிரையைப் பூமி ப்ரதக்ஷிணஞ்செய்ய அனுப்பு"மென்றார். அரசன் "ஸுமந்த்ரரே! வேதவேதாங்கங்க ளில் நிபுணர்களான ஸுயக்ஞர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், வஸிஷ்டர் இன்னும் மற்ற ப்ராஹ்மண ச்ரேஷ்டர்களை இந்த யாகத் தில் ரித்விக்குகளாக வரித்து, வேதவிதிப்படி வாஹனங்களில் ஏற்றி அழைத்துவாரு"மென்றார். ஸுமந்த்ரர் அப்படிச் செய்யத், தர்மாத்மா வான அரசன் அவர்களை நன்றாகப் பூஜித்து "ப்ராஹ்மணோத்தமர் களே! புத்ரபாக்யமின்றி வருந்தும் எனக்கு இதர ஸுகங்களால் ப்ரயோஜனமென்ன? ஆகையால் அச்வமேதத்தை விதிப்படி செய்து, இடையூறான பாபங்களைப் போக்கி, ரிஷ்யசிருங்கருடைய மஹிமை யால் என் எண்ணங்களை அடையப்போகிறே"னென்று தர்மார்த்தங் களுக்கு அனுகூலமாக மதுரமாகச் சொன்னார்.

அந்த மஹர்ஷிகள் நல்லது நல்லதென்று அதைக் கொண்டாடி னார்கள். ரிஷ்யசிருங்கரும் மற்றப் ப்ராஹ்மணோத்தமர்களும் "மஹா ராஜா! புத்ரனை அடைவதற்கு அச்வமேதம் செய்யவேண்டுமென்று இந்தத் தர்மமான புத்தி உமக்கு உண்டானதால் பராக்ரமமுள்ள நான்கு புத்ரர்கள் உமக்கு நிச்சயமாகப் பிறப்பார்கள். ஆகையால் யாகஸாமக்ரிகளைச் சேர்த்து, யாகக் குதிரையைப் பூமி ப்ரதக்ஷி ணம் செய்யவிட்டு, மற்ற க்ரியைகளையும் நடத்தலா"மென்றார்கள்.

அதைக் கேட்டுத் தசரதர் மிகவும் ஸந்தோஷித்து "மந்த்ரி களே! வஸிஷ்ட மஹர்ஷியின் கட்டளைப்படி யாக ஸாமக்ரிகளைச்

சேருங்கள். தகுந்த சூரர்களோடும் உபாத்யாயர்களோடும் யாகக் குதிரையைப் பூமிப்ரதக்ஷிணஞ் செய்ய அனுப்புங்கள். ஸரயூ நதியின் வடகரையில் யாகசாலையைக் கட்டவேண்டும். விக்னங்களை விலக்கக்கூடிய சாந்தி முதலிய க்ரியைகள் கல்பஸூத்ரப்படி முறை தவறாமல் நடக்கட்டும். யாகத்தின் ஸ்வரூபத்தையும் லக்ஷணங்களையும் குணதோஷங்களையும் நன்றாகவறிந்த ப்ரஹ்மராக்ஷஸர்கள் இவ்விதமான யாகங்களைக் கெடுக்க ஸமயந் தேடிக்கொண்டிருப்பார்கள். யாதொரு குற்றமும் நேராமல் ஸாங்கமாக இந்த யாகத்தைச் செய்யக்கூடுமானால் எல்லா அரசர்களும் அடிக்கடி செய்வார்களே. ஆகையால் இந்த யாகம் யாதொரு குற்றமில்லாமல் சாஸ்த்ரப்படி நடப்பது உங்களுடைய பொறுப்பு. இந்த விஷயத்தில் உங்களுக்கு மிகுந்த திறமையிருப்பதால் இதை உங்களிடத்தில் ஒப்புவித்தே"னென்றார். மந்த்ரிகள் "தங்களுடைய ஆக்ஞைப்படி செய்யக் காத்திருக்கிறோ" மென்றார்கள். ஸாங்க்ரஹணி இஷ்டிமுதல், யாகக் குதிரையை அனுப்புவதுவரையில் நடந்தன.

பிறகு ப்ராஹ்மணர்கள் ஸகல தர்மங்களையும் அறிந்த தசரதரைக் கொண்டாடி அந்த ராஜச்ரேஷ்டரிடத்தில் அனுமதி பெற்றுக் கொண்டு தங்களுடைய விடுதிகளுக்குச் சென்றார்கள். அரசன் மந்திரிகளை அனுப்பிவிட்டுத் தன் அந்தப்புரத்திற்குப் போனார்.

---

## ஸர்க்கம் 13.

(தொடர்ச்சி)

அடுத்த வஸந்தருது வந்தவுடன் பௌர்ணமியில் அரசன் யாகசாலைக்குப் போக விரும்பி, வஸிஷ்டரை வணங்கி விதிப்படி பூஜித்து மிகுந்த வணக்கத்துடன் "மஹர்ஷே! தாங்கள் எனக்கு ஆசார்யர்; மேலும் பரமமித்ரர்; ஆகையால், த்ரவியம் தேவதை க்ரியை முதலிய யாகத்தின் அங்கங்களில் யாதொரு தோஷமும் நேராமல், ராக்ஷஸர்கள் விக்னஞ் செய்ய இடங்கொடாமல், சாஸ்த்ர விதிப்படி வெகு ஜாக்ரதையாக இதை முடிக்கவேண்டும். இந்தப் பாரத்தைத் தாங்களே பொறுத்து நடத்தவேண்டு"மென்று கேட்டுக் கொண்டார். முனிவர் அதை அங்கீகரித்து, யாகங்களை நடத்துவதில் நிபுணர்களாக ஞானத்தாலும் வயதாலும் முதிர்ந்த ப்ராஹ்மணர்களையும், யாகத்ரவ்யங்களைத் தருவிப்பதற்கு அரசனால் நியமிக்

கப்பட்ட அதிகாரிகளையும் மற்ற வேலைக்காரர்களையும், யாகத்தில் உபயோகப்படும் செங்கல்லுகளைச் செய்கிறவர்களையும், யாகபாத்ரங்களைச் செய்யும் தச்சர்களையும், குளம் கிணறு வெட்டுபவர்களையும், சித்திரமெழுதுவோர்களையும், ரஸாபினயம் பாவ அபிநயம் முதலியவைகளில் திறமையுள்ளவர்களையும், கணக்கர்களையும், யாகப்ரயோகங்களை நன்றாயறிந்து சுத்தமான நடத்தையும் படிப்பு முள்ளவர்களையும் தருவித்து, "ரித்விக்குகளே! அரசனுடைய உத்திரவுப்படி யாகத்தின் ஒவ்வொரு பாகத்தையும் வெகு ஜாக்ரதையாய் நடத்தவேண்டும். சில்பிகளே! யாகத்தில் உபயோகப்படும் அநேகமாயிரம் செங்கல்லுகளைச் சீக்ரமாய்ச் செய்யுங்கள். வேலைக்காரர்களே! அரசர்கள் வஸிக்கக் கூடிய பல விடுதிகளைக் கட்டுங்கள். அவை வெகு விசாலமாய்க் காற்று மழையைத் தாங்கக்கூடியவையாக இருக்கவேண்டும். அப்படியே ப்ராஹ்மணர்கள் தங்கக்கூடிய பல அழகான வீடுகளைக் கட்டி, அவைகளில் ஸகல போஜன ஸாமான்களைக் குறைவில்லாமல் வையுங்கள். பட்டணத்து ஜனங்களுக்கும் நாட்டிலுள்ள குடிகளுக்கும் ஸௌகமான விடுதிகளை அமையுங்கள். அதிகாரிகளே! எல்லோரையும் வெகு அன்புடன் பூஜித்து வேண்டிய வரையில் அன்னமிட்டும், சந்தனம் புஷ்பம் தாம்பூலங்களால் உபசரியுங்கள். எதையும் அலக்ஷ்யமாய் ஆதரவின்றிச் செய்யக்கூடாது. நான்கு வர்ணத்தாரையும் தகுந்தபடி மர்யாதை செய்யவேண்டும். ஸ்னேஹத்தாலாவது விரோதத்தாலாவது காமக்ரோதத்தாலாவது ஒருவரையும் அலக்ஷ்யஞ் செய்யக்கூடாது. யாக கார்யங்களில் முன்னின்று யாவற்றையும் நடத்தும் அதிகாரிகளையும் வேலைக்காரர்களையும் சில்பிகளையும் முறை தவறாமல் விசேஷமாய் உபசரிக்கவேண்டும். த்ரவ்யத்தையும் அன்னபானங்களையும் வேண்டியவரையில் கொடுத்து ஜனங்களைத் திருப்தி செய்யவேண்டும். என்னிடத்திலும் அரசனிடத்திலும் நீங்கள் வைத்திருக்கும் ப்ரீதிக்கு அடையாளமாய், நான் சொன்னவைகளில் யாதொரு குறைவின்றி நடக்கவேண்டு"மென்று ஆக்ஞாபித்தார். அவர்கள் "மஹர்ஷே! தாங்கள் சொன்னபடியே இதுவரையில் ஏற்பாடு செய்திருக்கிறோம். இனி நடக்கவேண்டிய கார்யங்களையும் குறைவின்றி நடத்துகிறோ"மென்றார்கள்.

பிறகு வஸிஷ்டர் "ஸுமந்த்ரரே! ஸகல தேசங்களிலிருந்தும் தர்ம சிந்தையுள்ள அரசர்களையும் நான்கு வர்ணத்தார்களில் ச்ரேஷ்டர்களையும் பூஜித்து வருவிக்கவேண்டும். விதேஹாதிபதியான ஜனகர் மஹாசூரர், வேதவேதாங்கங்களில் நிபுணர், ப்ரஹ்ம

ஞானி, தசரதருக்கு வெகுநாளாய் பரமமித்ரர்; அவரை நேரில் அழைக்கவேண்டும். நமது அரசனுக்கு நண்பனும் எப்பொழுதும் ப்ரியமாய்ப் பேசும் காசிராஜனையும், தசரதருடைய மாமனுரான கேகயராஜனையும், அவருடைய புத்ரன் யுதாஜித்தையும், மஹா கீர்த்தி சாலியும் மிகுந்த பாக்யவானும் தசரதருக்கு அந்தரங்க மித்ரனுமான ரோமபாதரையும் நன்ருய்ப் பூஜித்து நீரே அழைத்து வரவேண்டும். மேலும், கிழக்கு தேசத்தரசர்களையும் ஸிந்து ஸௌவீர ஸௌராஷ்ட்ர முதலிய மேற்கு தேசங்களின் அரசர்களையும் தெற்கிலுள்ளவர்களையும் நம்மரசனுக்கு நண்பர்களான மற்றப் பூபதிகளையும் புத்ரமித்ரபந்து வர்க்க பரிவார ஸைன்யங்களுடன் தூதர்களால் சீக்ரமாய் அழைத்து வாரு"மென்றார்.

ஸுமந்த்ரர் புத்திமான்களான தூதர்களை மற்ற விடங்களுக்கனுப்பி, நேரில் போய் அழைக்க வேண்டிய விடங்களுக்குத் தானே போனார். எல்லா வேலைக்காரர்களும் தங்களுக்கு நியமித்த கார்யங்களைக் குறைவின்றி முடித்ததாக வஸிஷ்டரிடத்தில் தெரிவித்தார்கள். அவர் வெகு ப்ரியத்துடன் "அதிகாரிகளே! பிறர்க்கு எதைக் கொடுத்தாலும் ஸந்தோஷமாய்க் கொடுக்கவேண்டும். அலக்ஷ்யமாய்க் கொடுத்தால் நமது யஜமானனுக்குக் கெடுதி வரும். ஆகையால் ஜாக்ரதையாய்க் கொடுங்க"ளென்று எச்சரித்தார்.

எல்லா அரசர்களும் ரத்னம் முதலிய உத்தம பதார்த்தங்களைக் காணிக்கையாக எடுத்துக்கொண்டு சில தினங்களுக்குள் வந்து சேர்ந்தார்கள். வஸிஷ்டர் "மஹாராஜ! தங்களுடைய உத்திரவுப்படி எல்லா அரசர்களும் வந்து விட்டார்கள். தகுந்த மர்யாதையுடன் அவர்களை உபசரித்து விடுதிகளை ஏற்படுத்தியிருக்கிறேன். யாக பதார்த்தங்கள் யாவும் ஸித்தமாயின. யாகசாலை ஸகல பதார்த்தங்களாலும் நிறைந்து, மனஸால் ஸிருஷ்டிக்கப்பட்டது போல் வெகு அழகாயிருக்கிறது. நேரில் பார்க்க வேண்டும். யாகஞ் செய்யப் புறப்படலா"மென்றார்.

பிறகு சுபநக்ஷத்ரங்கூடிய சுபதினத்தில் வஸிஷ்டர் ரிஷ்யசிருங்கர் முதலிய பெரியோர்களின் அனுமதிபெற்று அரசன் யாகசாலைக்குப் புறப்பட்டார். அங்கே ரிஷ்யசிருங்கரை முன்னிட்டுக் கொண்டு மற்ற ரிஷிகள் சாஸ்த்ரப்படி யாக கார்யங்களை ஆரம்பித்தார்கள்.

# ஸர்க்கம் 14.

(தொடர்ச்சி)

பூமி ப்ரதக்ஷிணஞ் செய்ய அனுப்பின குதிரை ஒரு வருஷம் ஸஞ்சரித்து இடையூறின்றித் திரும்பி வந்தது. அரசனுடைய உத்திரவுப்படி ஸரயூநதியின் வடகரையில் கட்டப்பட்ட யாகசாலையில் வேத வேதாங்க நிபுணர்களான ரித்விக்குகள், ச்ரௌதஸூத்ரத்தையும் மீமாம்ஸா ந்யாயத்தையும் அனுஸரித்து, ப்ரவர்க்யம் உபஸதம் முதலிய க்ரியைகளைச் செய்து, இன்னும் அதி தேசத்தால் நேர்ந்த ஹோமம் முதலிய மற்ற யாக க்ரியைகளையும் குறைவற நடத்தினார்கள். பிறகு, ஸகல யாக புருஷர்களும் வெகு ஸந்தோஷத்துடன் அந்தந்த க்ரியைகளுக்கு அதிஷ்டான தேவதைகளைப் பூஜித்து, காலை ஸவனத்தில் இந்த்ரனுக்கு யாக பாகத்தைக் கொடுத்தார்கள். பிறகு ஸகல பாபங்களையும் போக்கும் ஸோமராஜாவைத் துதித்து, மற்ற இரு ஸவனங்களையும் விதிப்படி செய்தார்கள். இந்த ஹோமங்களில் மறதியும் மாறுதலுமின்றி எல்லாம் க்ஷேமகரமாய்த், தகுந்த மந்த்ரங்களுடன் செய்யப்பட்டன.

அந்த யாகம் நடக்கும் வரையில் பசியால் வருந்துகிறவர்கள், வேலை செய்து களைத்தவர்கள், தாஹத்தால் ச்ரமப்பட்டவர்கள் ஒருவருமில்லை. எல்லோரும் பூர்ண வித்வான்கள்; நூறு சிஷ்யர்களுக்குக் குறையாதவர்கள். வேதியர்களும் தபஸ்விகளும் திகம்பரர்களும் கிழவர்களும் நோயாளிகளும் பெண்களும் சிறுவர்களும் எப்பொழுதும் இஷ்டப்படி போஜனஞ் செய்து கொண்டிருந்தார்கள். பதார்த்தங்களின் ருசியால், புஜித்து எழுந்தவுடன் மறுபடியும் புஜிக்க ஆசையுண்டாயிற்று; வயிற்றிலோ இடமில்லை. அன்னபானங்களையும் ஆடையாபரணங்களையும் எண்ணிறந்த ஜனங்களுக்கு இடைவிடாமல் கொடுத்துக் கொண்டிருந்தும், இன்னும் கொடுக்கவேண்டுமென்ற எண்ணம் அரசனுக்கு உண்டாய், "அன்னபானங்களையும் பக்ஷ்யங்களையும் வஸ்த்ரங்களையும் ஆபரணங்களையும் வேண்டிய வரையில் கொடுங்கள் கொடுங்க"ளென்று உத்திரவு செய்தார். அதிகாரிகள் அப்படியே பலவிடங்களில் கொடுத்து வந்தார்கள். சமையல் விதிப்படி நன்றாய்ச் சமைக்கப்பட்ட பதார்த்தங்கள் ஒவ்வொரு நாளும் மலைமலையாய்க் குவிக்கப்பட்டன. பல தேசங்களிலிருந்து கூட்டங் கூட்ட

மாய் வந்திருந்த பெண்டுகளும் புருஷர்களும் அன்னபானங்களையும் பக்ஷ்யங்களையும் புஜித்து அளவற்ற திருப்தியடைந்தார்கள்.

குண்டலம் முதலிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட பல ப்ராஹ்மணர்கள் தங்கள் இனத்தாருக்குப் பரிமாறினார்கள்; சிலர் அவர்களுக்கு உதவிசெய்தார்கள். ப்ராஹ்மணோத்தமர்கள் வேண்டியவரையில் புஜித்து "மஹாராஜா! பதார்த்தங்கள் சமைக்கப்பட்ட திறமையையும் அவைகளின் ருசியையும் குணத்தையும் சொல்லமுடியாது. பரிமாறுகிறவர்கள் எங்களுக்குச் செய்யும் உபசாரத்திற்கோ எல்லையில்லை. எங்களுடைய ஸந்தோஷத்தையும் திருப்தியையும் வர்ணிக்கமுடியாது. தங்களுக்கு ஸகல மங்களங்களு முண்டாகட்டு" மென்று ஆசீர்வதித்தார்கள். அரசன் மிகவும் ஸந்தோஷித்தார்.

புத்திமான்களும், வாதஞ்செய்வதில் ஸமர்த்தர்களுமான ப்ராஹ்மணர்கள், ஒருவரை யொருவர் ஜயிக்க விரும்பி, யாகக்ரியைகளுக்கு நடுவிலுள்ள ஓய்வுகாலத்தில் பலவித பூர்வபக்ஷ ஸித்தாந்தங்களடங்கிய சாஸ்த்ர வாதங்களைச் செய்தார்கள். தர்ப்பங்களைப் பரப்புவதில் தேர்ந்த ப்ராஹ்மணர்கள் ஒவ்வொருநாளும் மூன்று ஸவனங்களிலும் உமாமுதலிய தேவதைகளை அதிஷ்டானமாயுடைய கார்யங்களைப் பெரியோர்களின் உத்திரவுப்படி செய்தார்கள். வைதிகக்ரியைகளை நடத்தினவர்களில் வேதவேதாந்த நிபுணர்களாகச், சாந்த்ராயண முதலிய விரதங்களை அனுஷ்டிக்காதவர்களாகப், பல சாஸ்த்ரங்களைப் படிக்காதவர்களாக ஒருவருமில்லை. அரசனுடைய ஸபையிலிருப்பவர்களோ வாதத்தில் நிபுணர்கள்.

யூபங்களை நாட்டவேண்டிய ஸமயத்தில் அக்னி வேதிக்கருகில் நறுவலிமரத்தால் ஒரு யூபமும், தெற்கில் தேவதாரு யூபமும், வடக்கில் மற்றொரு அவ்வித யூபமும், அம்மூன்றிற்கும் தெற்கில் மூன்று பில்வயூபங்களும், வடக்கில் அவ்விதம் மூன்றும், அந்த ஒன்பதற்கும் தெற்கில் மூன்று கருங்காலி யூபங்களும், வடக்கில் அவ்வித மூன்றும், அந்தப் பதினைந்திற்கும் தெற்கில் மூன்று பலாச யூபங்களும், வடக்கில் அவ்விதம் மூன்றும் நாட்டப்பட்டன. இந்த இருபத்தொரு யூபங்கள் ஒவ்வொன்றும் ஒரு மார்பளவு தூரமுள்ளதாய், உறுதியாய்ச் சிற்பிகளால் பதிப்பிக்கப்பட்டன. போரை முதலிய தோஷங்களில்லாத கெட்டியான மரத்தால், எட்டுப் பட்டைகளுடன் 504 அங்குலம் உயரமுள்ளவைகளாக, வெகு வழ வழப்பாய் அவை இழைக்கப்பட்டன. யாக விதிகளையும் ப்ரயோகங்களையும் அறிந்த

ப்ராஹ்மணர்கள் அவைகளை ஆபரணங்களாலும் வஸ்த்ரங்களாலும் மாலைகளாலும் சந்தனம் முதலியவைகளாலும் தங்கப்பட்டங்களாலும் அலங்கரித்து, யாகசாலையை விளங்கச் செய்தார்கள். அவை எவ் வேழாய்ப் பார்க்கப்படும்பொழுது, ஆகாசத்தில் ஸப்தரிஷி மண்டலங் களைப்போல் விளங்கின.

யூபங்களை நடுவதற்கு முன், யாக ஸூத்ரத்தில் சொல்லியபடி செய்யப்பட்ட செங்கல்லுகளால் அக்னிவேதியை ப்ராஹ்மணர்கள் கட்டினார்கள். அது இறக்கைகளையும் வாலையும் விரித்துக்கொண்டு கிழக்கு முகமாய்ப் பூமியை நோக்கும் கருடனைப்போல பதினெட்டு அடுக்குகளுடன் அமைக்கப்பட்டது. இறக்கைகளின் நடுவில் சிறிய தங்கப் பாளங்கள் இணைக்கபபட்டிருநதன.

அந்த யூபங்களில் இந்த்ராதி தேவதைகளை உத்தேசித்து ஸர்ப்பங்களும் பக்ஷிகளும் விதிப்படி கட்டப்பட்டன. பின்பு பசுவை அடிக்கும் க்ரியையில் அசுவமேதக் குதிரையும், ஆமை முதலிய ஜல ஜந்துக்களும், ஆடு முதலிய கிராம பசுக்களும் உபயோகப்பட்டன. முக்யமாய் 300 பசுக்களும், ப்ரதான பசுவான குதிரையும் யூபங் களில் கட்டப்பட்டன. பசுவை அறுக்கும் சாமித்ர ப்ரதேசத்தில் இருந்த அந்தக் குதிரையை அரசனுடைய மஹிஷிகள் மந்த்ரங்க ளுடன் ப்ரோக்ஷண முதலிய ஸம்ஸ்காரங்களைச செய்து, இடமாக வும் வலமாகவும் சுற்றிவந்தார்கள். பட்டமஹிஷியான கௌஸல்யை அதின் வயிற்றிற்கு மேலாக மூன்று தங்க ஊசிகளால் ஆயுதம் நாட் டும் இடங்களைக் கீறினாள். . பின்பு அவள் புண்யமடைய விரும்பிப் பிணமென்று வெறுப்படையாமல், ஒரு ராத்ரி முழுவதும அதன் ஸமீபத்திலிருந்தாள்.

பிறகு ஹோதா அத்வர்யு உத்காதா ப்ரஹ்மாவென்ற ப்ரதான ரித்விக்குகள், அரசனால் தக்ஷிணையாகக் கொடுக்கப்பட்ட மஹிஷி, வாவாதை, பாலாகலி, பரிவிருத்தியென்ற ராஜபத்னிகளின் கைகளைப் பிடித்துக்கொண்டு அவர்களுக்குப் பதிலாய் அளவற்ற த்ரவியத் தைப் பெற்று, அவர்களை அரசனிடத்தில் கொடுத்தார்கள்.

அத்வர்யு வெகு ஜாக்ரதையாய்ப் பசுவின் வபைக்குப் பதிலாகக் குதிரையின் தேஜனியென்ற உள் அவயவத்தை எடுத்துச், சுத்த மான மனஸுடன், சீர் தொச்சிலின் இலைகளால் செய்த தடுக்கில் வைத்து, விதிப்படி மந்த்ரங்களுடன் ஹோமஞ் செய்தார். அரசன்

அந்தப் புகையை முகர்ந்து, ஸகல பாபங்களும் விலகிப் பரிசுத்த மானார். பிறகு பதினாறு ரித்விக்குகளும் அந்தப் பசுவின் அங்கங் களை விதிப்படி ஹோமஞ் செய்தார்கள்.

அந்த யாகத்தில் முக்ய தினங்கள் மூன்று. முதல் நாளில் நான்கு ஸ்தோமங்களுள்ள அக்னிஷ்டோமமும், இரண்டாவதில் உக்த்யமும், மூன்றாவதில் அதிராத்ரமும், மற்றநாள்களில் ஜ்யோதிஷ்டோமம் ஆயுஷ்டோமம் இரண்டு அதிராத்ரம் அபிஜித், விசுவஜித் அப்தோர்யாமமென்ற ஆறு க்ரதுக்களும் சாஸ்த்ரப்படி மிகவும் க்ஷேமகரமாய் நடந்தன.

ப்ரஹ்மாவால் கண்டு பிடிக்கப்பட்ட இந்த மஹா யாகத்தை அரசன் ஸாங்கோபாங்கமாய்ச் செய்து, அளவற்ற ஸந்தோஷத்து டன், ஹோதா அத்வர்யு ப்ரஹ்மா உத்காதா என்றவர்களுக்கு முறையே கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு தேசங்களையும் தக்ஷிணை யாகக் கொடுத்தார். அவர்கள் அவைகளைப் பெற்றுக்கொண்டு "மஹாராஜ! எப்பொழுதும் வேதாத்யயனத்தையும் தபஸையும் செய்துகொண்டிருக்கும் எங்களுக்கு இந்தத் தேசங்களால் பய னில்லை. அவைகளைக் காப்பாற்றவும் சக்தியில்லை. இந்தப் பூமியை ரக்ஷிக்கத் தகுந்தவர் தாங்களே. ஆகையால் ரத்னம் தங்கம் வெள்ளி பசு முதலியவைகளில் எதையாவது இதற்குப் பதிலாய்க் கொடுங்க" ளென்றார்கள். அரசன் பத்து லக்ஷம் பசுக்களையும் பத்து கோடி தங்கம் நாற்பது கோடி வெள்ளி நாணயங்களையும் அந்தத் தேசங் களுக்கு விலையாகக் கொடுத்தார்.

தங்களுடைய பாகங்களை ந்யாயமாய்ப் பிரிப்பதற்கு வஸிஷ் டரையும் ரிஷ்யசிருங்கரையும் அவர்கள் வேண்டி, வெகு ஸந்தோ ஷத்துடன் பாகங்களைப் பெற்று "அளவற்ற திருப்தியடைந்தோ" மென்று அரசனிடத்தில் சொன்னார்கள். பிறகு அவர் ஸபையி லிருந்து ப்ராஹ்மணர்களுக்குக் கோடி கோடியாய்த் தக்ஷிணை கொடுத் தார். தன்னருகில் வந்து தன்னைக் கேட்ட ஒரு ஏழை ப்ராஹ்மண னுக்குத் தன் கையிலுள்ள ஓர் விலையற்ற ரத்னகடகத்தைக் கொடுத்தார்.

இப்படி எல்லோரும் எல்லையற்ற திருப்தியடைந்தார்கள். அரசன் ஆனந்தக் கண்ணீர் பெருக யாவரையும் ஸாஷ்டாங்கமாய் வணங்கினார். ரித்விக்குகளும் மற்ற ப்ராஹ்மணோத்தமர்களும் வேதவாக்யங்களால் அவரை மனப்பூர்வமாய் ஆசீர்வதித்தார்கள்.

புத்ரோத்பத்திக்கு இடையூறான ஸகல பாபங்களையும் போக்கி ஸ்வர்க்கத்தைக் கொடுக்கக்கூடியதாய் ஸாமான்ய அரசர்களால் செய்யமுடியாத அச்வமேத மென்ற ஸர்வோத்தமமான யாகத்தை விதிப்படி செய்து தசரதர் பரமானந்த மடைந்தார்.

பிறகு அவர் ரிஷ்யசிருங்கரைக் கைகூப்பி வணங்கி, அளவற்ற திருப்தியுடன் "ஸ்வாமி! எனக்குப் புத்ரனுண்டாகும்படி அனுக்ர ஹிக்கவேண்டு"மென்று ப்ரார்த்தித்தார். அந்த முனிவர் "அரசனே! கவலை வேண்டாம். நான்கு புத்ரர்கள் பிறந்து உமது வம்சத்தை விளங்கச் செய்வார்கள். தகுந்த உபாயம் செய்கிறே"னென்று ஒப்புக்கொண்டார்.

## ஸர்க்கம் 15.

# தேவர்கள் மஹா விஷ்ணுவைப் பிரார்த்தித்தது.

அவதாரிகை.

ராவணாதி ராக்ஷஸர்களால் தங்களுக்கு நேர்ந்த கொடுமையை நீக்கி க்ஷேமத்தைச் செய்யத் தேவர்கள் விஷ்ணுவைவேண்டினதும், தசரதருடைய ப்ரார்த்தனையை வெளிக்காரணமாய்க் கொண்டு ஸாதுக்களைக் காத்துத், துஷ்டர்களை அழித்துத், தர்மத்தை ஸ்தாபிக்கப் பகவான் பூமியில் மனிதனாய்ப் பிறக்க உத்தேசித்ததும் சொல்லப் படுகின்றன.

ஸகல வேதசாகைகளையும் தரிக்கக்கூடிய புத்தியுள்ளவரும் வேதார்த்தயனாந் செய்து உட்கருத்தையும் ரஹஸ்யங்களையும் நன்று அறிந்தவருமான ரிஷ்யசிருங்கர், அரசனுடைய கோரிக்கையை நிறை வேற்ற எந்த க்ரியையைச் செய்யலாமென்று சற்று ஆலோசித்தார். பிறகு அதை நிச்சயித்துக்கொண்டு "பூபதே! புத்ரபாக்யத்தைக் கொடுக்கும் ஓர் இஷ்டி அதர்வ வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. உமக்காக அதைச் செய்விக்கிறே"னென்று புத்ரகாமேஷ்டியை ஆரம்பித்து, வேத விதிப்படி அக்னியில் ஓர் ஆஹுதி செய்தார்.

தசரதருடைய அசுவமேதத்தில் யாக பாகங்களைப் பெற வந்த ஸகல தேவர்களும் யாக ஸதஸில் க்ரமப்படி வீற்றிருந்து தங்களுக்குத் தலைவரான ப்ரஹ்மாவை "ஸ்வாமி! ராவணனென்ற ராக்ஷஸன் கடுந் தபஸால் தங்களை ஸந்தோஷப்படுத்தி அபூர்வமான வரங்களைப் பெற்று, அந்தப் பலத்தால் எங்களை உபத்ரவிக்கிறான். தேவர்களால் மரணமில்லையென்று அவனுக்கு வரங்கொடுத்திருக்கிறீர்கள். தங்களுடைய வார்த்தையைக் கௌரவித்து செய்து, அவனைச் சிக்ஷிக்காமல் அவனுடைய அக்ரமங்களைப் பொறுக்கிறோம். துர்ப்புத்தியுள்ள அந்த ராக்ஷஸன் மூன்று லோகத்து ப்ராணிகளை நடுங்கச் செய்கிறான். மேலும் லோக பாலர்களை எதிர்த்து, இந்த்ரனைத் துரத்திவிட்டு, தானே ஸ்வர்க்கத்தை ஆள நினைக்கிறான். வரங்களால் மோகமடைந்து எவரிடத்திலும் பயமற்று ரிஷிகளையும் வேதியர்களையும் யக்ஷர்களையும் கந்தர்வர்களையும் அஸுரர்களையும் மற்றவர்களையும் வாட்டுகிறான். அவனைக் கண்டவுடன் ஸூர்யன் கிரணங்களைச் சுருக்கிக் கொள்ளுகிறான். அவன் குன்றுகளில் விளையாடும் பொழுது மரம் கொடிகளிலுள்ள மலர்கள் உதிருமென்ற பயத்தால் வாயு இஷ்டப்படி வீசுவதில்லை. மலைபோன்ற அலைகளால் பயங்கரமாய்க் கர்ஜிக்கும் ஸமுத்ரமும் அவனைக் கண்டால் அசைவதில்லை. கோர ரூபமுள்ள ராவணனிடத்தில் நாங்கள் எப்பொழுதும் பயந்து படும் உபத்ரவங்களைச் சொல்லமுடியாது. ஆகையால் அவனைக் கொல்ல ஏதாவது உபாயம் செய்ய வேண்டு"மென்று வணக்கமாய் அந்தப் பெரிய கார்யத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

ப்ரஹ்மா "தேவர்களே! அவன் தேவ கந்தர்வ ராக்ஷஸர் முதலிய யாவராலும் மரணம் நேரக்கூடாதென்று என்னைக் கேட்டான். அப்படியே வரங்கொடுத்தேன். ஆனால் மனிதர்களை அலக்ஷ்யஞ் செய்து, அவர்களால் மரணம் கூடாதென்று கேட்கவில்லை. ஆகையால் அவனுக்கு மனிதனாலேயே மரணம் நேரும்; கவலை வேண்டா"மென்று ஸமாதானஞ் செய்தார். அமிருத தாரையைப்போல் இனிமையான அந்த வார்த்தையால் தேவர்களும் மஹர்ஷிகளும் அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள்.

அப்பொழுது ஸகல தேவர்களுக்கும் ப்ரபுவாய், ஸகல ப்ராணிகளிடத்தில் அந்தர்யாமியாய் விளங்கும் மஹா விஷ்ணு அவர்களுக்குத் தர்சனங் கொடுத்தார். துஷ்டர்களை அழித்து ஸாதுக்களை ரக்ஷிக்கத் தகுந்த காலத்தை எதிர்பார்த்திருப்பவராகையால், அந்த ஸமயம் வந்ததென்று அளவற்ற ஸந்தோஷமடைந்து அபார

தேஜஸுடன் விளங்கினார். அண்டினவர்களை ரக்ஷிக்கச், சங்கசக்ர கதை கட்கம் சார்ங்கமென்ற திவ்யாயுதங்களை எப்பொழுதும் தரிக்கிறவர்; பீதாம்பரதாரி. தான் செய்ய வேண்டிய கார்யத்தை யோசித்துக்கொண்டிருக்கையில் ப்ரஹ்மா அருகில் சென்றார்.

அப்பொழுது தேவர்களும் அவரை வணங்கிக் கைகூப்பி விநயத்துடன் துதித்து "லோகநாதா! ராவணனென்ற துஷ்டராக்ஷஸன் மூவுலகங்களையும் வருத்துகிறான். தேவர்களால் கொல்லமுடியாதவன். ஸ்வபாவத்தாலும் ப்ரஹ்மா கொடுத்த வரங்களாலும் வெகு கர்வங்கொண்டிருக்கிறான். தேவ கந்தர்வ யக்ஷ கின்னர மஹர்ஷிகளை ஹிம்ஸிப்பதுமல்லாமல் எங்கள் நந்தவனத்தில் விளையாடிக்கொண்டிருக்கும் அப்ஸரஸ்களைக் கதறவடிக்கிறான். அவனைக் கொல்லவேண்டுமென்று நாங்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் மற்றவர்களும் தங்களைச் சரணமடைகிறோம். தேவ சத்ருக்களான ராவணன், இந்த்ரஜித், கந்தர்வர்கள், லவணன் முதலியவர்களை அழிக்கத் தாங்களே தயவுசெய்து பூமியில் பிறக்கவேண்டும். தர்மங்களைப் பூர்ணமாயறிந்து, யாசகர்களுக்கு வேண்டியவரையில் கொடுக்கும் அயோத்யாதிபதியான தசரதர் மஹர்ஷிகளைப் போன்றவர்; ஹ்ரீ ஸ்ரீ கீர்த்தி தேவிகளைப்போன்ற அவருடைய மூன்று பத்னிகளிடத்தில் தாங்கள் நான்கு அம்சங்களாய் அவதரித்து, மனுஷ்ய ரூபத்துடன் துஷ்டராக்ஷஸர்களைக் கொல்லவேண்டும். தங்களைத்தவிர வேறுகதி எங்களுக்கில்லை"யென்றார்கள்.

ஸகல ப்ராணிகளால் நமஸ்கரிக்கப்பட்ட தேவதேவனான விஷ்ணு, தன்னைச் சரணமடைந்த ப்ரஹ்மாதி தேவர்களை நோக்கி, "நீங்கள் பயப்படவேண்டாம். உங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். நான் பூமியில் தசரத புத்ரனாய்ப் பிறந்து, தேவ கந்தர்வ ரிஷிகளையும் ஸகல லோகங்களையும் வாட்டும் துஷ்டனான ராவணனைப், புத்ர மித்ர பந்து பரிவார ஸைன்யங்களுடன் யுத்தத்தில் கொன்று, பதினோராயிர வருஷங்கள் வரையில் பூமியை ஆளுவே"னென்று அருளிச் செய்தார்.

இப்படித் தேவர்களுக்கு அபயங் கொடுத்து, அவர்கள் வேண்டினபடி நான்கு அம்சங்களாய்த், தான் தசரதருக்குப் புத்ரர்களாய்ப் பூமியில் அவதரிக்க உத்தேசித்தார். அவருடைய நல்ல குணங்களை நினைத்து நினைத்து ஸந்தோஷத்தால் மலர்ந்த கண்களுடன் மஹா விஷ்ணு, தேசகால வஸ்துக்களால் எல்லையற்றவரும், பிறப்

பிறப்பற்றவரும், யாவரும் விரும்பக்கூடிய வருமானாலும், தசரதரைப் பிதாவாய் அடைய நிச்சயித்தார்.

பிறகு தேவ கந்தர்வ ருத்ர யக்ஷ அப்ஸரகணங்கள் திவ்யமான ஸ்துதிகளால் அவரைக் கொண்டாடிப் "பகவானே! ராவணன் மஹா பராக்ரமசாலி; இயற்கையாய் எல்லையற்ற கர்வமுள்ளவன்; ப்ரஹ்மாவின் வரத்தால் மிகுந்த கொழுப்புள்ளவன்; லோகங்களைக் கதறச் செய்கிறவன்; ஸாதுக்களையும் ரிஷிகளையும்வருத்திச்,சொல்லமுடியாத பயத்தை உண்டாக்குகிறவன்; வெகு ப்ரஸித்தன்; அவனைப் பந்து பரிவார ஸைன்யங்களுடன் அழித்துத்,தங்களை அண்டின எங்களை ரக்ஷிக்க வேண்டும். எங்களுடைய கவலையை நீக்கினபிறகு, நாங்கள் அடைய முடியாததும் அழிவில்லாததும் காமக்ரோதங்களற்றதுமான தங்களுடைய ஸ்ரீ வைகுண்டத்திற்கு மறுபடியும் எழுந்தருளவேண்டு" மென்று ப்ரார்த்தித்தார்கள்.

## ஸர்க்கம் 16.

# புத்ரகாமேஷ்டி.

பிறகு விஷ்ணு மேற்செய்யவேண்டிய கார்யத்தை நன்றுயறிந்தும் அறியாதவரைப்போல், "தேவர்களே! ராவணனைக்கொல்ல உபாயமென்ன? என் நிஜஸ்வரூபத்தோடு அவதாரம் செய்யவேண்டுமா? வேறு வழியுண்டா"வென்று கேட்டார். பிறப்பிறப்பற்ற பகவான் அப்படிச்சொல்லத் தேவர்கள் "லோகநாதா! அவன் வெகுகாலமாய்க் கடுந்தவஞ்செய்து தேவச்ரேஷ்டரான ப்ரஹ்மாவை ஸந்தோஷப்படுத்தித், தனக்கு ஒருவராலும் மரணம் நேரக்கூடாதென்று வரங்கேட்டான். ஆனால் மனுஷ்யர்களை அலக்ஷ்யஞ்செய்து வரத்தில் சேர்த்துக் கேட்கவில்லை. ஆகையால் அவர்களைத் தவிர மற்றவர்களால் மரணமில்லையென்று வரமடைந்து வெகுகொழுப்புடன் ஸகல லோகங்களையும் வருத்திப், பரஸ்த்ரீகளைப் பலவந்தஞ் செய்கிறான். மனுஷ்யனால் அவனுக்கு மரணமென்று விதித்திருக்கிறபடியால் தாங்கள் நரரூபத்துடன் அவனை யுத்தஞ்செய்து கொல்லுங்க" ளென்றார்கள்.

அந்த ஸமயத்தில் புத்ரகாமேஷ்டி செய்துகொண்டிருந்த தசரதருக்குக் குமாரனைப் பிறக்க நிச்சயித்து, மஹாவிஷ்ணு ப்ரஹ்மாவி

டத்தில் சொல்லிக்கொண்டு, தேவர்கள் பூஜிக்க, அங்கேயே மறைந்தார்.

அந்த இஷ்டியில் ரிஷ்யசிருங்கர் ப்ரதான ஆஹுதி செய்தவுடன், ஆஹவனீய அக்னியிலிருந்து ஓர் பூதம் ஒப்பற்ற காந்தியுடன் ஜ்வலிக்கும் பெரிய சரீரத்துடன் கிளம்பிற்று. கறுப்பும் சிவப்பும் கலந்த நிறமுள்ள வஸ்த்ரத்தால் அலங்கரிக்கப்பட்டுச், சிவந்த முகமும், துந்துபியைப் போன்ற கம்பீரமான த்வனியும், ஸிம்ஹத்தின் மயிரைப்போன்ற மீசை தாடியும், பர்வதத்தைப்போன்ற உருவமும், கொழுத்த புலியின் பராக்ரமமும், ஸூர்ய மண்டலத்தையும் அக்னி ஜ்வாலையும்போன்ற கூசும்படியான ப்ரகாசமுடையதாய், உத்தம லக்ஷணங்கள் பொருந்தித் திவ்யாபரணங்களால் விளங்கி, அந்த மஹா புருஷன், வெள்ளிமூடியுடன் பக்கங்களில் விசித்திரவேலைகளால் அலங்கரிக்கப்பட்ட ஒரு தங்கப் பாத்ரம் நிறைய திவ்ய பாயஸத்தை இருகைகளால் பார்யையைப்போல் ப்ரியமாய் அணைத்துக்கொண்டு, "மஹாராஜ! நான் ப்ரஹ்மாவால் உம்மிடம் அனுப்பப்பட்ட நரனென்று அறியு"மென்றது.

தசரதர் கைகூப்பி வணங்கி "ஸ்வாமி! நல்வரவா? என்னால் ஆக வேண்டியதென்ன" வென்றார். அந்தப் ப்ரஹ்மதூதன், "அச்வமேதத்தாலும் புத்ரகாமேஷ்டியாலும் தேவதைகளையே நீர் பூஜித்தபடியால் இந்தத் திவ்யபாயஸம் உமக்குக் கிடைத்தது. பெருமையையும் ஆரோக்யத்தையும் நீர் நெடுநாளாய் வேண்டும் புத்ரபாக்யத்தையும் இது கொடுக்கும். ஆகையால், இதை வாங்கி உமது பத்னிகளுக்குப் புஜிக்கக்கொடும். நீர் செய்யும் முயற்சிகளின் பயனை இதனால் அடையலா"மென்றது.

அரசன் "உத்திரவுப்படி செய்கிறே"னென்று தேவர்களால் அனுப்பப்பட்ட திவ்ய பாயஸம் நிறைந்த தங்கப் பாத்ரத்தை வெகு ப்ரியத்துடன் வாங்கி, தலைமேல் வைத்து, ஆச்சர்யமான ரூபமுள்ள அந்தப் பூதத்தை நமஸ்கரித்து ப்ரதக்ஷிணஞ் செய்தார். மஹா தரித்ரனுக்கு நவநிதி கிடைத்ததுபோல் அவருக்கு அது கிடைத்தவுடன் பரமானந்தமுண்டாயிற்று. தன் கார்யத்தை நிறைவேற்றி அந்தப் பூதம் அக்னியில் மறைந்தது.

தசரதர் புத்ரகாமேஷ்டியை முடித்து, அந்தப்புரத்திற்குப் போய்க், கௌஸல்யை முதலிய பார்யைகளை அழைத்து "இந்தப்பாயஸம் தேவர்களால் அனுப்பப்பட்டது. புத்ர பாக்யத்தைக் கொடுக்கும்

இதைப் புஜியுங்க"ளென்றார். சரத்கால சந்த்ர கிரணங்களால் ஆகாசம் விளங்குவதுபோல், ஸந்தோஷ ஸமாசாரத்தைக் கேட்ட ராஜஸ்த்ரீகளின் காந்தியால் அந்தப்புரம் விளங்கிற்று. மஹாராஜா, தனக்கு நான்கு புத்ரர்கள் பிறக்க வேண்டுமென்று, அந்தப் பாயஸத்தில் பாதியைக் கௌஸல்யைக்கும் நாலிலொரு பாகத்தை ஸுமித்ரைக்கும் எட்டிலொரு பாகத்தைக் கைகேயியிக்கும் கொடுத்தார். மிகுந்த எட்டிலொன்றைத் தன் ப்ரிய பார்யையான அவளுக்கே கொடுக்கலாமென்று நினைத்தார். ஆனால் அவளுக்கும் மூத்தவளான ஸுமித்ரைக்கும் பேதமிருக்காது. அப்படிச் செய்வது ந்யாயமல்லவென்று யோசித்து ஸுமித்ரைக்கே அதைக் கொடுத்தார். இப்படி அவர் விபாகஞ் செய்ததை மஹிஷிகள் மெச்சிப், பாயஸத்தை வெகு ப்ரீதியுடன் பெற்றுக்கொண்டு புஜித்து, அக்னியையும் ஸூர்ய... போல் காந்தியுள்ள கர்ப்பங்களைத் தரித்தார்கள். அ... அரசன் கவலை தீர்ந்து, தேவலோகத்தில் ஸித்தர்களாலு... லும் பூஜிக்கப்பட்ட மஹேந்த்ரனைப்போல் எல்லையற்ற ஆ... தார்.

## ஸர்க்கம் 17.

# தேவர்களுடைய அவதாரம்

இப்படிப் பகவான் மஹாத்மாவான தசரதருக்குப் புத... பிறக்க நிச்சயித்த பிறகு, யாவுமறிந்த ப்ரஹ்மா தேவ... அழைத்து "நம்மெல்லோருக்கும் ப... க்ஷேமத்தைச் செ... விரும்பிப் பகவான் பூமியில் மனுஷ்யா...ரம் செய்யப்போகிறா... ராவணாதி ராக்ஷஸர்களுடன் அவர் ... செய்யும்பொழுது அவருக்கு உதவிசெய்ய நீங்கள் ட... அப்ஸரஸ் களாலும் கந்தர்வ ஸ்த்ரீகளாலும் புத்ர... அவர்கள் நினைத்த ரூபங்களை எடுக்கக்... களை அறிந்தவர்களும், வாயுவேகமுள்... களும், அளவற்ற பல சாலிகளும், எ... சக்தியுள்ளவர்களும், அமிருத பானஞ்... மற்றவர்களும், நீதி சாஸ்த்ரங்களையும் ... ளும், விஷ்ணுவிற்கு ஸமமான ப...

வேண்டும். இந்தக் கார்யத்தை உத்தேசித்தே வெகு காலத்திற்கு முன் என் கொட்டாவியிலிருந்து ஜாம்பவா னென்ற கரடியை ஸ்ருஷ்டித்திருக்கிறேன். அவன் நிகரற்ற பலசாலி''யென்றார்.

அவருடைய ஆக்ஞைப்படி அதுவரையில் புத்ரர்களை உண்டு பண்ணாத வானரர்கள், தேவ கந்தர்வ ஸித்த வித்யாதர உரகசாரண ரிஷி கணங்களிலும் மற்ற தேவர்களிலும் தங்களுடைய அம்சங்களால் வானர ரூபமுடைய புத்ரர்களைப் பெற்றார்கள்.

வானராதிபதியாக மஹேந்த்ர மலையைப்போல் பெரிய தேஹத்தையுமுடைய வாலியை இந்த்ரனும், ஸுக்ரீவனை ஸூர்யனும், ... ச்ரேஷ்டனும் மஹா புத்திமானுமான தாரனைத்தேவகுருவும், ...ஸம்பத்துகளும் பொருந்தின கந்தமாதனனைக் குபேரனும், ...ச்வகர்மாவும், பிதாவுக்கு ஸமமான தேஜஸுள்ளவ...யாலும் காந்தியாலும் பராக்ரமத்தாலும் வானரர்களை ... அக்னியும், மிகவும் அழகுவாய்ந்த மைந்த த்விதர்களை ...ளும், ஸுஷேணனை வருணனும், சரபனை மழைக்கு ...தயான பர்ஜன்யனும், வேகத்தில் கருடனைப் ... பெற் ... தங்களாலும் பிளக்கமுடியாத வஜ்ரதேஹம் ...யையும், எல்லை ... வாயுவும் பெற்றார்கள். ...ற்று மிகவ...

... ற பலமுடன் மேரு மந்த்ர மலைகளைப்போல் ... புஷ்ய ... தாவிற்கு ஸமமான ரூபமும் பராக்ரமமும் ...தி, ...னைத்த ...ங்களை எடுக்கக்கூடிய எண்ணிறந்த கரடி குரங்குகளும் கொண்டை முஸுருகளும் நீண்ட வாலுள்ள ...ங்குகளும் ராவணாதி ராக்ஷஸர்களை அழிக்கப்பிறந்தன.

அவர்களில் சில ... கோலாங்கூலங்களும், கரடிகளும், கின் ...ர ஸ்திரீகள் ... களும் வித்யாதரீகளும் நாக கன்யைகளும் ...ந்தர் ... கள். சிலருக்கு தேவர்களும் ரிஷிகளும் ஸுபர்ணர்களும் நாகங்களும் ஸித்தர்களும் பிதாக்கள்.

...வத்திலும் ஸிம்ஹத்தையும் புலியையும் ...கம் பல் முதலியவைகளை ஆயுதமாய்க் ...ர் அஸ்த்ரங்களைத் தடுக்கும் உபாய ...ளையும் அசைத்துப் பிடுங்குவார்கள்;

உறுதியான மஹா விருக்ஷங்களையும் முறிப்பார்கள்; வேகத்தால் கடலைக் கலக்குவார்கள்; பூமியைக் காலாலுதைத்துப் பிளப்பார்கள்; ஏழு கடல்களையும் தாண்டுவார்கள்; ஆகாசத்தில் பறப்பார்கள்; மேகங்களைத் தாவிப் பிடிப்பார்கள்; மதங்கொண்டு திரியும் யானைகளை விளையாட்டாய்ப் பிடித்து எறிவார்கள்; ஸிம்ஹநாதஞ்செய்து பறவைகளை ப்ரக்ஞை தப்பிச் சுருண்டுவிழச் செய்வார்கள். இவ்வித மஹிமையுள்ள பல ஸேனாபதிகள் எண்ணிறந்த புத்ரர்களை உண்டாக்கினார்கள். அவர்களும் பல ஸேனாபதிகளைப் படைத்தார்கள்; சிலர் ரிக்ஷவான் முதலிய மலைதாழ்வரைகளிலும் காடுகளிலும் நதிக்கரைகளிலும் வஸித்தார்கள்.

இந்த்ரனுக்கும் ஸூர்யனுக்கும் பிறந்த வாலி ஸுக்ரீவர்கள் ஸஹோதரர்கள், வானராதிபதிகள்; நளன் நீலன் மாருதி முதலியவர்கள் ஸேனைத்தலைவர்கள்; அவர்களின் ஆக்ஞைக்குள் வஸித்து கொண்டிருந்த வானரர்களையும் கரடிகளையும் கொண்டை முதலிய ... யும் வாலி புஜபலத்தால் காப்பாற்றிவந்தான்.

இப்படி மேகக்கூட்டங்களையும் மலைச்சிகரங்களையும் போல பயங்கரமான சரீரங்களுடன் பல ரூபங்களும் லக்ஷ... பொருந்தி, ராமனுக்கு உதவிசெய்யப் பூமியில் வளர்ந்த ... ரர்களால், காடு மலை கடல் த்வீபம் நதி நகரங்களுள் முழுவதும் வ்யாபிக்கப்பட்டது.

## ஸர்க்கம் 18.

## ராம ஜனனம்.

தசரத சக்ரவர்த்தி செய்த அச்வமேதப் ... முடிந்தது. தேவர்கள் பாகங்களைப் பெற்று ... சென்றார்கள். அரசன் பார்யைகளுடன் யா... ருந்த அரசர்களுக்குத் தகுந்தபடி மர்யாதை ... கள் வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளை வணங்... சன் கொடுத்த வஸ்த்ராபரணங்களால் விளங்... ஸந்தோஷமாய்த் தங்களுடைய தேசங்களுக்... தசரதர் ஸைன்ய பரிவார வாஹனங்க... வஸிஷ்டர் முதலிய பெரியோர்களை முன் ... யைக்கு வந்தார். ரிஷ்யசிருங்கரும் சாந்... தேசத்திற்குப் போனார்கள். இப்படி ... தனுப்பித், தன் எண்ணங்கள் யாவும் நி... கும் புத்ரபாக்யத்தைப்பற்றி வே... அயோத்யையில் ஸுகமாய் வஸித்த...

இப்படி யக்ஞம் முடிந்து, ஆறு ருதுக்கள் கடந்து, பனிரண்டாவதான சித்ரமாஸம் நவமி திதி அதிதி தேவதாகமான புனர்வஸு நக்ஷத்ரம் கூடிய சுப தினத்தில், கடக லக்னத்தில், கௌஸல்யா தேவி, ஸகல லோகங்களுக்கு நாதனும், ஸகல சுப லக்ஷணங்கள் பொருந்தினவரும், ஸர்வ லோகங்களால் நமஸ்கரிக்கப் படுகிறவரும், மஹாவிஷ்ணுவின் பாதி அம்சமுள்ள ம், இக்ஷ்வாகு குலத்தைப் பெருமைப் படுத்தப் பேட கிறவருமான ராமனென்ற புத்ர ரத்னத்தைப் பெற்றாள்.

அப்பொழுது ஸூர்யனும் அங்காரகனும் குருவும் னும் சனியும் முறையே தங்களுடைய உச்ச ஸ்தானமாகிய மேஷம் மகரம் கடகம் மீனம் துலா ராசிகளிலிருந்தார்கள். குருவும் சந்த்ரனும் ரசித்தார்கள் வஜ்ரபாணியான தேவேந்த்ர ற அதிதி தேவியைப்போல், கௌஸல் ற்ற தேஜஸுள்ள அந்தப் புத்ரனைப் ளங்கினாள்.

க்ஷத்ரத்தில் மீன லக்னத்தில், விஷ் மமுள்ளவரும் தெளிந்த புத்தியுள்ள நற்குணங்களும் பொருந்தினவரும் எட்டிலொரு அம்சமுமான பரதன் தில் பிறந்தார்.

ஷ்ய நக்ஷத்ரத்தில் ஸூர்யோதயத் வீரர்களாய், ஸகல அஸ்த்ரசஸ்த்ர ர்களாய் விளங்கும் லக்ஷ்மணனும் மித்ரையிடத்தில் பிறந்தார்கள். ரு அம்சம் லக்ஷ்மணனிடத்தி

லும் எட்டிலொரு அம்சம் சத்ருக்னனிடத்திலும் விளங்கிற்று. அவர்கள் இரட்டைப் பிள்ளைகள்.

நற்குணங்கள் பொருந்தி, ஒருவர்க்கொருவர் ஸமானமாய்ப், பூரட்டாதி உத்திரட்டாதி நக்ஷத்ரங்களைப் போல் காந்தியுடைய அந்த நான்கு புத்ரர்கள் அவதாரம் செய்த பொழுது, கந்தர்வர்கள் மதுரமாய்ப் பாடினார்கள்; அப்ஸரஸ்கள் ஆடினார்கள்; தேவதுந்துபி முழங்கிற்று; ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி பொழிந்தது. அயோத்யா வாஸிகள் மஹோத்ஸவங் கொண்டாடினார்கள். ஜனங்களாலும் நாட்யமாடுகிறவர்களாலும் ஆட்டுவிப்பவர்களாலும் பாட்டாலும் வாத்ய கோஷங்களாலும் ஸூத மாகத வந்திகளாலும் ராஜ வீதிகள் நிறைந்தன.

அப்பொழுது தசரதர் ப்ராஹ்மணர்களுக்குக் கணக்கில்லாமல் பசுக்களையும் த்ரவியங்களையும் தானங் கொடுத்தார். ஸூத மாகத வந்திகளுக்கு விசேஷ வெகுமானம் செய்தார்.

திருக்குமாரர்கள் பிறந்த பதின்மூன்றாவது நாளில், வஸிஷ்ட மஹர்ஷி வெகு ஸந்தோஷத்துடன், கௌஸல்யையின் புத்ரனுக்கு ராமனென்றும், கைகேயியின் புத்ரனுக்குப் பரதனென்றும், ஸுமித்ரையின் புத்ரர்களுக்கு லக்ஷ்மணனென்றும் சத்ருக்னனென்றும் பெயர் வைத்தார். அப்பொழுது தசரதர் நகரத்திலும் நாட்டிலுமுள்ள ப்ராஹ்மணர்களுக்குத் திருப்தியாய் அன்னமிட்டு அளவற்ற ரத்னங்களைத் தக்ஷிணையாகக் கொடுத்தார்.

அந்த ராஜ குமாரர்களுக்கு அன்னப்ராசனம் சௌளம் உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்கள் காலந்தவறாமல் விதிப்படி செய்யப்பட்டன.

அவர்களுக்குள் த்வஜத்தைப்போல் விளங்கும் மூத்தவரான ஸ்ரீராமன், தன் பிதாவிற்கு அளவற்ற ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறவராய், ப்ரஹ்மாவைப் போல் எல்லா ப்ராணிகளுக்கும் இஷ்டமுள்ளவராயிருந்தார். அந்தக் குமாரர்கள் வேத வேதாங்கங்களைப் பூர்ணமாகக் கற்றார்கள். சூரர்களாக, ஞானவான்களாக, ஸகல நற்குணங்களும் பொருந்தினவர்களாக, ஜனங்களுக்கு அனுகூலத்தைச் செய்வதிலேயே நோக்கமுள்ளவர்களாக வளர்ந்தார்கள். அவர்களில் ஸ்ரீராமன் அபாரமான காந்தியும் வீணாகாத பராக்ரமமுமுள்ளவர்: சந்த்ரனைப் போல் ஸகல லோகங்களுக்கும் ப்ரியமானவர்; யானையேற்றம், குதிரை யேற்றம், ரதம் ஓட்டுதல், வில்வித்யை முதலியவைகளில் நிபுணர். பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்வதில் மிகவும் முயற்சியுள்ளவர்.

விசேஷ லக்ஷ்மீ பொருந்தின லக்ஷ்மணன், குழந்தைப் பருவம் முதல் அனைவர்க்கும் ப்ரியமானவன்; தன் தமயனை ராமனிடத்தில் மனோவாக்கு காயங்களால் அளவற்ற ப்ரியம் வைத்தவர். லக்ஷ்மணன் ஸமீபத்திலில்லாவிட்டால் புருஷோத்தமனை ராமனுக்குத் தூக்கம் வராது; ருசியுள்ள அன்னத்தையும் அவரின்றிப் புஜிப்பதில்லை. தன் வலது கையும் வெளியில் ஸஞ்சரிக்கும் ப்ராணனுமாய் அவரை நினைத்திருந்தார். ராகவன் குதிரைமேலேறி வேட்டைக்குப் போகும்பொழுது, இளையாழ்வார் வில்லுங்கையுமாய் அவரை ரக்ஷித்துக்கொண்டு பின்தொடர்வார்.

அவருக்குத் தம்பியான சத்ருக்னன் அப்படியே பரதனிடத்தில் எல்லையற்ற ப்ரியம் வைத்தான். தன் ப்ராணனைக் காட்டிலும் அவனிடத்தில் பரதனுக்கு அதிக ப்ரேமையுண்டு.

மிகுந்த அதிருஷ்ட சாலிகளும் ப்ரீதியை வைக்கத் தகுந்தவர்களுமான நான்கு குமாரர்களையுடைய தசரதர் தேவர்களால் சூழப்பட்ட ப்ரஹ்மாவைப்போல் வெகு ப்ரீதியடைந்தார். அவர்கள் சாஸ்த்ரங்களைக் கற்று ஞானத்தையடைந்ததால் நற்குணங்கள் பொருந்தி, ஒரு வேளை அஜ்ஞதையால் கெட்ட கார்யங்களில் மனது சென்றாலும் அதினால் வெட்கமடைந்து, எல்லா விஷயங்களையும் அறிந்தவர்களென்ற கீர்த்தியையும் லௌகிக கார்யங்களில் திறமையையும், வருங் காலத்தை அறியும் [illegible]ம், கண்ணைப் பறிக்கும் தேஜ

லையுமுடையவர்களாயிருந்ததால், தசரதர் லோகாதிபதியான சதுர் முகனைப்போல் பரம ஸந்தோஷமடைந்தார். அவர்களும் மஹாராஜா தங்களிடத்தில் வைத்திருக்கும் ப்ரீதியைப் பார்த்து, வேதமோது வதிலும் வில்வித்தையிலும் பிதிரு சுச்ரூஷையிலும் கவலை வைத்து வெகு திறமையடைந்தார்கள்.

பிறகு தசரதர் ஒரு நாள் உபாத்யாயரையும் பந்துக்களையும் மந் த்ரிகளையும் வருவித்துத் தன் புத்ரர்களுக்கு மணம் செய்ய வேண் டியதைப்பற்றி ஆலோசித்துக்கொண் டிருக்கையில், மஹா தேஜஸ்வி யான விச்வாமித்ர மஹா முனி, அவரைப் பார்க்க விரும்பி அங்கே வந்து "காதியின் புத்ரனான விச்வாமித்ரன் தங்களைப் பார்க்க வந் திருக்கிறுனென்று அரசனிடத்தில் சீக்ரமாய்த் தெரிவியுங்க ளென்"று காவலாளிகளுக்குச் சொன்னார். அவர்கள் பய பக்தியுடன் பரபரப்படைந்து அரண்மனைக்குள் ஓடி, விச்வாமித்ரர் வந்திருப்பதை ராஜாவிற்குத் தெரிவித்தார்கள். அவர் பரமானந்தமடைந்து வெகு ஜாக்ரதையுடன் புரோஹிதரை முன்னிட்டுக்கொண்டு, இந்த்ரன் ப்ரஹ்மாவை உபசரிப்பதைப்போல் மஹர்ஷியை எதிர்கொண் டழைத்தார். கடுமையான வ்ரதங்களை அநுஷ்டிக்கும் அந்த முனி வர் தேஜஸால் ஜ்வலிப்பதைக் கண்டு முகமலர்ந்து, அரசன் புரோ ஹிதரால் அவருக்கு அர்க்ய பாத்யங்களைக் கொடுத்தார்.

விதிப்படி செய்யப்பட்ட அந்தப் பூஜையைக் கௌசிகர் அங்கி கரித்து, அரசனையும் நகரத்தையும் பொக்கிஷத்தையும் தேசங்களையும் பந்துக்களையும் மித்ரர்களையும் பற்றி க்ஷேமம் விசாரித்தார். "மஹா ராஜ! உம்மால் ஜயிக்கப்பட்டவர்கள் கீழ்ப்படிந்து நடக்கிறார்களா? யாகங்களால் தேவர்களையும் அதிதிபூஜை ராஜநீதி நான்குவித உபா யம் முதலியவைகளால் மனிதர்களையும் நன்றாய்த் திருப்தி செய் கிறீரா"வென்று கேட்டு, வஸிஷ்ட வாமதேவ ஜாபாலி முதலி யவர்களையும் விதிப்படி உபசரித்து க்ஷேமம் விசாரித்தார். அதனால் அவர்கள் வெகு ஸந்தோஷமடைந்து, ராஜஸபைக்கு வந்து பூஜிக்கப்பட்டு உசிதமான ஆஸனங்களில் அமர்ந்தார்கள்.

பிறகு எல்லையற்ற உதார ஸ்வபாவமுள்ள தசரதர் ஸந்தோஷ த்தால் தேஹம் புளகித்துக், கௌசிகரைத் துதித்து "ஜனன மரணங் களால் பீடிக்கப்படும் மனிதர்களுக்கு அவைகளைப் போக்கும் அமிரு தம் கிடைத்தால் எப்படியோ (அல்லது, மரண மடைந்தவன் பிழைத்து வந்தால் எப்படியோ); பல வர்ஷங்களாய் மழையில்

லாமல் வாடினவிடத்தில் மேகங்கள் ஓயாமல் பெய்தால் ஜனங்களுக்கு எப்படி யிருக்குமோ; எவ்விதத்திலும் தனக்குத் தகுந்த பத்னியிடத்தில் வெகுகாலமாய்ப் புத்ரன் பிறக்காமல், அந்த ஆசையை விட்டவனுக்குத் திடீரென்று அந்தப் பாக்யம் கிடைத்தால் எப்படியோ; கெட்டுப்போன நிதிகள் தானுய்க் கிடைத்தால் எப்படியோ; ப்ரியமான புத்ரன் முதலியவர்களுக்கு விவாஹ மஹோத்ஸவம் நேர்ந்தால் நமக்கு எப்படியோ; அவ்விதமான ஸந்தோஷத்தை, ஒருநாளும் எதிர்பாராத தங்களுடைய வரவால் அடைந்திருக்கிறேன். (அமிருதத்திற்கு ஸமமான திவ்ய பாயஸம் தனக்கு எதிர்பாராமல் கிடைத்தது; தன் மித்ரனை ரோமபாதனுடைய ராஜ்யத்தில் வெகு காலம் மழைபெய்யாமல் ரிஷ்ய சிருங்கர் அடிவைத்தவுடன் பெய்தது; தனக்கும் பார்யைகளுக்கும் புத்ரோத்பத்தியின் காலம் தாண்டின பிறகும் எதிர்பாராமல் நான்கு பிள்ளைகள் உண்டாயின; இந்த ஆச்சர்யங்களை நினைத்து இப்படிச் சொன்னார்.) க்ஷேமமாய் வந்தீர்களா? என் ஸந்தோஷத்திற்கோ எல்லையில்லை. தங்களுடைய இஷ்டத்தை எப்படி நிறைவேற்ற வேண்டும்? தங்களைவிட உத்தமமான பாத்ரம் எனக்குக் கிடைக்குமோ? என் யத்னமில்லாமல் நான் எதிர்பாராமல் என்னைத் தேடி வந்தீர்களே. என் ஜன்மம் இன்றுதான் கடைத்தேரிற்று; என் வாழ்நாள் இன்றுதான் பயனடைந்தது. தாங்கள் முதலில் அரசனாய் ஸகல போகங்களையும் அனுபவித்தீர்கள். பிறகு கடுந்தவத்தால் ராஜர்ஷியாய் ப்ரஹ்மர்ஷி பதவியை அடைந்தீர்கள், எவ்விதத்திலும் தங்களை நான் பூஜிக்க வேண்டியவன்; யாதொன்றிலும் தங்களுக்கு ஆசையில்லை. தாங்கள் இங்கே வந்ததை நினைத்து நினைத்து எனக்கு ஆச்சர்யம் பொங்குகிறது. தங்களுடைய வரவால் நான் மிகவும் பரிசுத்தனானேன். தங்களைத் தர்சித்ததால் புண்ய க்ஷேத்ரங்களை அடைந்தவனானேன்; தாங்கள் எதையும் கொடுக்கக்கூடிய ப்ரபுவல்லவா? என்னை உத்தேசித்து இங்கே வந்த கார்யத்தைச் சொல்லவேண்டும். தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றித் தங்களால் அனுக்ரஹம் பெற விரும்புகிறேன். தாங்கள் எண்ணிவந்த கார்யம் எதானாலும் யோசிக்கக் கூடாது; குறைவில்லாமல் முடிக்கிறேன். தாங்கள் எனக்குத் தைவமல்லவா? தங்களுடைய வரவால் எனக்கு விசேஷ க்ஷேமமும் நிகரற்ற தர்மமும் கிடைத்திருக்கின்றன"வென்றார்.

பெருந்தன்மையுள்ள தசரதர் வணக்கமாய்ச் சொன்ன வார்த்தைகள், உத்தமகுணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஒப்பில்லாத

கீர்த்தி யடைந்த கௌசிகருடைய மனதிற்கும் காதிற்கும் அபார மான ஸுகத்தைக் கொடுத்தன.

## ஸர்க்கம் 19.

### "ராமனை அனுப்பும்"

ராஜச்ரேஷ்டரான தசரதர் சொன்ன ஆச்சர்யகரமான வார்த்தைகளைக் கேட்டு எல்லையற்ற தேஜஸையுடைய விச்வாமித்ரர் ஸந்தோஷத்தால் தேஹம் புளகித்து, "மஹாராஜ! இக்ஷ்வாகுவம்சத் தரசர்களின் மஹா குலத்தில் பிறந்து வஸிஷ்டரால் ஒவ்வொரு கார்யத்திலும் உபதேசிக்கப்பெற்ற உமக்கே இந்த வார்த்தைகள் தகும்; வேறொருவர்க்கும் தகாது. நான் எண்ணியிருப்பதை முடிப்ப தாய் நிச்சயஞ் செய்யும். ராஜச்ரேஷ்ட! பிறகு தவறக்கூடாது. சில பலன்களை உத்தேசித்து நான் ஒரு யாகஞ் செய்ய ஆரம்பித் தேன். அது முடியும் ஸமயத்தில் ஸுபாஹு மாரீசனென்ற இரண்டு ராக்ஷஸர்கள் அங்கேவந்து மாம்ஸத்தையும் ரக்தத்தையும் அக்னி குண்டத்தில் வர்ஷித்து யாகத்தைக் கெடுத்து விட்டார்கள். அவர்களோ மஹா வீரர்கள்; யுத்தங்களில் தேர்ந்தவர்கள்; நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள். இப்படிப் பலதடவை நேர்ந்து என ச்ரமமெல்லாம் வீணாகி, உத்ஸாஹம் குறைந்து அவ்விடத்தை விட்டு வந்தேன். யாக காலத்தில் சபிக்கக் கூடாதென்று ஏற்பட்டிருப்பதால் அவர்களை நானே சிக்ஷிக்கமுடியவில்லை. மறுபடியும் யாகஞ் செய்யப் போகிறேன். அதை ரக்ஷிக்க உமது மூத்தபுத்ரனை ராமனை என்னுடன் அனுப்பும். அவன் ஜில்பா தரிக்கும் சிறு வயஸுள்ளவனானாலும் மஹா சூரன், வீணாகாத பராக்ரமமுடைய வன். இயற்கையாயுள்ள திவ்ய தேஜஸாலும் என்னால் ரக்ஷிக்கப்படுவ தாலும் அந்த ராக்ஷஸர்களைக் கொல்வானென்பதில் கொஞ்சமேனும் ஸந்தேஹமில்லை. மேலும், மூவுலகிலும் கீர்த்தி பெறும்படி அவ னுக்குப் பலவிதமான க்ஷேமத்தைச் செய்வேனென்று நிச்சயமாய் நம்பும். இந்தச் சிறுவன் கோர ராக்ஷஸர்களைக் கொல்லமுடியுமா வென்று ஸந்தேஹம் வேண்டாம். அவர்கள் ராமனுக்கெதிரில் க்ஷணங்கூட நிற்கமுடியுமா? ராமனைத்தவிர வேறொருவரும் அவர் களைக் கொல்லமுடியாது. அந்தப் பாபிகள் வீர்யத்தால் கொழுப் படைந்தவர்கள். ஆனாலும் காலபாசம் அவர்களைக் கழுத்தில் கட்டி

இருக்கிறது. ராஜச்ரேஷ்டனும் மஹாத்மாவுமான ராமனுக்குமுன் அவர்கள் எம்மாத்ரம்? 'ஐயோ! அறுபதாயிரம் வருஷங்களுக்குப் பிறகு அபூர்வமாய்ப் பிறந்த அருமைக் குழந்தையை ராக்ஷஸர்களுடைய கையில் எப்படிக் காட்டிக்கொடுப்பே'னென்று புத்ரவாத்ஸல்யத்தால் தயங்கவேண்டாம்; அந்த ராக்ஷஸர்கள் இறந்தார்களென்றே நம்பும். அப்படி ப்ரதிக்ஞை செய்கிறேன். ஸாமான்யமான குழந்தையென்று லோகத்தார்கள் ராமனை நினைத்திருக்கிறார்கள். அவனுடைய மஹிமை உமக்குத் தெரியாது. ராமன் மஹாத்மாவென்றும், வீணாகாத பராக்ரமமுள்ளவனென்றும் ஞான பலத்தால் அறிவேன். என் வார்த்தையில் நம்பிக்கையில்லாவிட்டால் இதோவிருக்கும் வஸிஷ்டரைக் கேளும். உமக்குப் புரோஹிதர், மஹா தேஜஸ்வி, ஸத்யவான், ஹிதத்தையே உபதேசிக்கிறவர்; அதுவும் போதாவிட்டால் இதோவிருக்கும் மற்ற ரிஷிகளைக் கேளும். இவர்கள் கடுந்தவத்திலேயே ஆயுளைப் போக்குகிறவர்கள். செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்றுவதாலுண்டாகும் தர்மமும் கீர்த்தியும் என்றும் அழியாமலிருக்க வேண்டுமானால் ராமனை என்னுடன் அனுப்பும். உமது மந்த்ரிகளும் வஸிஷ்டர் முதலிய மற்றவர்களும் இப்படிச் செய்ய அனுமதித்தால் ராமனை என்னுடன் அனுப்பும். அவனிடத்தில் உமக்கு எல்லையற்ற ப்ரீதியுண்டென்பதை அறிவேன். ஆனால் அவனுக்கு யாதொன்றிலும் பற்றில்லையென்பதையும் அறிவேன். என் யாகத்திற்காக பத்துத் தினங்கள் மாத்ரம் செந்தாமரைக் கண்ணனான ராமனை என்னுடன் அனுப்பும். அதற்குமேல் அவனை வைத்துக் கொள்வதில்லை. யாக காலம் தாண்டுவதற்கு முன் ராமனை என்னுடன் அனுப்பும். உமக்கு ஸகல க்ஷேமமுமுண்டாகட்டும். கவலைக்கு இடம் வேண்டா"மென்றார்.

தர்மாத்மாவான விச்வாமித்ரர் தர்மத்திற்கும் அர்த்தத்திற்கும் ஒத்து இப்படிச் சொன்னார். தனக்கும் ராமனுக்கும் சுபத்தைக் கொடுக்கும் அந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் தசரதர் "ஐயோ! ராமனை விட்டுப் பிரிய வேண்டுமே; இல்லாவிட்டால் ப்ரதிக்ஞை தவறின பாபம் நேருமே; விச்வாமித்ரருடைய கொடிய சாபத்திற்குட்படவேண்டுமே"யென்று தீவ்ரமான துக்கத்தில் மூழ்கிப் பயந்தார். கௌசிகருடைய சொற்கள் அயோத்யாதிபதியின் ஹ்ருதயத்தைப் பிளந்து மனதைக் கலக்கிப் புண்ணாக்கின. ஆஸனத்தில் உட்கார்ந்திருந்தவர் கிடுகிடென்று நடுங்கினார்

## ஸர்க்கம் 20.

### "ராமனை அனுப்பமாட்டேன்"

ராஜ ச்ரேஷ்டரான தசரதர் விச்வாமித்ரருடைய வார்த்தையைக் கேட்டு ஒரு முஹூர்த்தம் வரையில் மூர்ச்சையடைந்தார். பிறகு ப்ரக்ஞை வந்து "மஹர்ஷே! மலர்ந்த செந்தாமரையைப் போன்ற திருக்கண்களுள்ள என் ராமனுக்கு இன்னும் பதினாறு வயஸ் முடியவில்லையே. ராத்ரியில் கபட யுத்தஞ் செய்யும் ராக்ஷஸர்களுடன் யுத்தஞ் செய்ய இவனுக்குத் திறமை எங்கே? மிகுந்த சூரர்களும் அஸ்த்ர வித்யையில் நிபுணர்களும் ராக்ஷஸர்களுடன் யுத்தஞ் செய்யக்கூடியவர்களும் பலர் என்னிடத்திலிருக்கிறார்கள். மேலும், என் அக்ஷௌஹிணி ஸைன்யம் தயாராயிருக்கிறது. இவைகளுடன் நானே வந்து வில்லுங்கையுமாய் ராக்ஷஸர்களுடன் உயிருள்ளவரையில் யுத்தஞ் செய்கிறேன். தங்களுடைய யாகம் விக்னமின்றி நிறைவேறும், கவலை வேண்டாம். ராமனோ குழந்தை; அஸ்த்ர வித்யையைப் பூர்ணமாயறியாதவன். சத்ரு பலத்தையும் தனக்கும் பிறர்க்குமுள்ள பேதத்தையும் அறிய முடியாதவன். இதுவரையில் சண்டை செய்து வழக்கமில்லாதவன்; அஸ்த்ர பலமில்லாதவன்; கபட யுத்தஞ் செய்வதே ஸ்வபாவமாகவுள்ள ராக்ஷஸர்களுடன் இவனை யுத்தத்திற்கு அனுப்புவது ந்யாயமா?

இதிருக்கட்டும். தாங்கள் கேவலம் ரிஷியல்லவே. என்னைப்போல் அரசனாயிருந்து குடும்பத்தின் கஷ்ட ஸுகங்களை அறிந்தவரல்லவா? அறுபதாயிரம் வர்ஷங்கள் வரையில் புத்ர பாக்யமின்றி மிகவும் வருந்தினேன். பல வ்ரதங்களையும் நியமங்களையும் யாகயக்ஞங்களையும் செய்து என் ராமனைக் குழந்தையாக அடைந்தேன். நால்வரில் மூத்தவன்; தர்மமே அவனுக்கு ப்ரதானம்; மற்றவர்களைவிட அவனிடத்தில் எனக்கு விசேஷப்ரேமை. அவனை விட்டுப் பிரிந்தால் ஒரு முஹூர்த்தமாவது என்னுயிர் தாங்காது. ஆகையால் ராமனை அழைத்துப்போவது உசிதமல்ல. அப்படித் தாங்கள் பிடிவாதஞ் செய்தால் என்னையும் ஸைன்யத்தையும் அழைத்துப் போகலாம். நான் வந்தாலும் ராமன் வந்தாலும் ராக்ஷஸர்களுடன் எப்படி யுத்தஞ் செய்ய வேண்டும்? அவர்கள் யாருடைய புத்ரர்கள்?

பெயர் என்ன? ஸ்வரூபமும் பராக்ரமும் எவ்விதமானது? அவர் களுக்கு யார் உதவி? ராக்ஷஸர்களென்றால் பலத்திலும் கர்வத்திலும் நிகரற்றவர்களல்லவா? அவர்களைப்பற்றி விஸ்தாரமாய்ச் சொல்லுங்க''ளென்றார்.

கௌசிகர் ''மஹாராஜ! ராக்ஷஸாதிபதியான ராவணன் மூவுலகத்திலுள்ள ப்ராணிகளை ஹிம்ஸிக்கிறனென்று கேட்டிருக்கலாமே. புலஸ்த்ய ப்ரஜாபதியின் வம்சத்தில் பிறந்தவன், விச்ரவஸின புத்ரன், குபேரனுக்குத் தம்பி, ப்ரஹ்மாவிடத்தில் அபூர்வமான வரங்களைப் பெற்றவன். அவன் அறியாமலாவது அலக்ஷ்யத்தாலாவது கெடுக்காத யாகங்களை ஸுபாஹு மாரீசனென்ற அவனுடைய உறவினர் உத்திரவுபெற்று அழித்து, அந்தக் கார்யத்தை வெகு ஜாக்ரதையாய் நடத்தி வருகிறார்க''ளென்றார்.

அதைக் கேட்ட தசரதர் இடிவிழுந்ததுபோல் நடுங்கி, ''மஹர்ஷே! அந்தத் துஷ்டனுடன் யுத்தஞ்செய்ய என்னால் முடியாது. ஸகல தர்மங்களையும் அறிந்த தாங்கள் என் குழந்தையிடத்தில் கிருபைசெய்யவேண்டும். பாக்யமற்ற எனக்குத் தாங்களே குரு, தாங்களே தைவம். தேவ தானவ கந்தர்வ யக்ஷ பதக பன்னகர்கள் அவனுக் கெதிரில் நிற்கமுடியாதே. மனுஷ்யர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? அவனை எதிர்க்கும் வீரர்களின் வீர்யத்தை அபஹரிக்கிறனே. அவனோடாவது அவனுடைய ஸைன்யங்களோடாவது யுத்தஞ்செய்ய என்னால் முடியாது. என் புத்ரர்கள் எனக்கு உதவியாயிருந்தாலும், என் ஸைன்யம் கூடவிருந்தாலும் என்னால் முடியாது. ராமன் தேவர்களைப்போல் அழகும் காந்தியுமுள்ளவன், பாலன், என் அருமைக் குழந்தை, யுத்தப்பயிற்சி யில்லாதவன்; அவனைக் கொடுக்கவேமாட்டேன். அவ் விரு ராக்ஷஸர்கள் ஸுந்தோபஸுந்தர்களின் புத்ரர்களல்லவா? யக்ஷகன்யைக்குப் பிறந்த தைத்யர்களல்லவா? யுத்தத்தில் யமனை எதிர்த்தாலும் எதிர்க்கலாம், அவர்களை எதிர்க்க முடியுமோ? வீர்யசாலிகள், யுத்தங்களில் நன்றாய்ப் பழகினவர்கள்; அவர்களே தங்களுடைய யக்ஞங்களைக் கெடுக்க வந்தால் ராமனைத் தங்களுடன் அனுப்பவேமாட்டேன். ஆனால் அவர்களில் ஒருவனுடன் நானும் என் மித்ரர்களும் யுத்தஞ்செய்யத் தயாராயிருக்கிறே''னென்றார்.

அதைக் கேட்டவுடன் விச்வாமித்ரருக்கு மஹா கோபமுண்டாயிற்று. யாகத்தில் நெய்த்தாரைகளால் அக்னி வளர்ந்து ப்ரகாசிப்பதுபோல் அவருடைய கோபம் ஜ்வலித்தது.

## ஸர்க்கம் 21.

### தசரதர் ஸம்மதித்தது.

இப்படிப் புத்ர ஸ்னேஹத்தால் மனந்தளர்ந்து தசரதர் பிரலா பிப்பதைக் கேட்டு விச்வாமித்திரர் கோபமடைந்து "ஓய்! நான் உம்மை ஏதாவது வலுவில் வேண்டினேனே? எதைக் கேட்டாலும் உடனே கொடுப்பதாய் அடிக்கடி ப்ரதிக்ஞைசெய்தது நீரே. கேட் டும்படி கட்டாயப்படுத்தி என்னைக் கேட்கச்சொன்னதும் நீரே. செய்த ப்ரதிக்ஞையை இப்பொழுது தவறப்பார்க்கிறவரும் நீரே. ரகுகுலத்தில் பிறந்த அரசர்களுக்கு இது அழகல்ல. அந்த வம்சத் திற்கு ஏதோ அனர்த்தம் நேரிடப்போகிறது. பொய்யர்களைத் தண் டிக்கவேண்டிய நீரே பொய்சொன்னால் நான் என்ன செய்யக்கூடும்? இது உமக்கு நன்றாயிருந்தால் நான் திரும்பிப்போகிறேன். இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவனென்று பெரிய பெயர் வைத்துக்கொண்டி ருக்கிறவரே! செய்த ப்ரதிக்ஞையைப் பொய்யாக்கிப், பந்துக்களுடன் ஸுகமாய் வஸித்துக்கொண்டிரு"மென்று அங்கிருந்து போகப் புறப்பட்டார்.

மஹாஞானியான விசுவாமித்ரர் கோபங்கொண்டதைக் கண்டு பூமி முழுதும் நடுங்கிற்று. தேவர்களுடைய மனதில் பயம் குடி கொண்டது. இப்படி ஸகல ஜகத்தும் பயத்தால் தத்தளிப்பதைக் கண்ட வஸிஷ்டர், மஹா புத்திமானும் நிகரற்ற தபஸ்வியுமானதால் "மஹாராஜ! இதென்ன? நீரும் இப்படிச் செய்யலாமோ? அண் டினவர்களைக் கைவிடாமல், செய்த ப்ரதிக்ஞையை உயிரைக் கொடுத்தாவது நிறைவேற்றின சிபி ஹரிச்சந்திரன் முதலிய அரசர்களால் அலங்கரிக்கப்பட்ட இக்ஷ்வாகு வம்சத்தில் பிறக்கும் பாக்யத்தைப் பெற்றிருக்கிறீர்; தர்மமே ரூபமெடுத்து வந்ததைப் போல் விளங்குகிறீர்; மஹா தைர்யசாலி; சுத்தமான ஆசாரமுள்ளவர்; ஸ்ரீமான்; குலதர்மத்தை நீரே கைவிடலாமோ? ரகுகுலத்தில் பிறந்த தசரதர் தர்மாத்மாவென்று மூவுலகிலும் ப்ரஸித்தியல்லவா? உமது க்ஷத்ரிய தர்மத்தை அனுஷ்டியும். அதர்மத்தில் மனதைச் செலுத்த லாமோ? இப்படிச் செய்கிறேனென்று ஒருவன் சொல்லி, அதை முடிக்காவிட்டால், அவன் செய்யும் தானதர்மங்களும் யாகயக்ஞங்க

ளும் ஜபஹோம தர்ப்பணங்களும் தபஸும் நாசமடையுமே. ஆகையால் ராமனை-இவருடன் அனுப்பும்.

"அவனுக்கு அஸ்த்ரப் பயிற்சி இருந்தாலும் இல்லாவிட்டாலும் ராக்ஷஸர்களால் கொஞ்சமேனும் பயமில்லை. ஜ்வலிக்கும் அக்னி தேவாமிருதத்தை ரக்ஷிப்பது போல், விசுவாமித்ரர் அவனை ரக்ஷிக்கும் பொழுது குறையென்ன ?

"இவர் ஸாதாரணமானவரா ? தர்மமே உருவெடுத்து வந்ததென்று இவரைச் சொல்லலாம். வீரசிகாமணி; புத்தியில் யாரையும் மிஞ்சினவர்; தபஸிற்கு எல்லை இவரே, மூவுலகிலுமுள்ள சராசரங்களில் பலவகையான அஸ்த்ரங்களை அறிந்தவர் இவரே; வேறொருவர்க்குந் தெரியாததும், தேவாஸுர யக்ஷ ராக்ஷ கந்தர்வ கின்னர உரக கணங்களுக்கும் தெரியாததுமான அஸ்த்ரங்கள் யாவும் இவருக்கு நன்றாய்த்தெரியும். முன்பு இவர் அரசனாயிருந்து ஆண்டபொழுது பிருசாச்வருடைய புத்ரர்களான ஸகல அஸ்த்ர தேவதைகளையும் சங்கரனிடத்திலிருந்து பெற்றார். பிருசாச்வருக்கு ஜயையென்ற தக்ஷப்ரஜாபதியின் புத்ரியிடத்தில் ஐந்நூறு அஸ்த்ர தேவதைகளும், வேறொரு பெண்ணான ஸுப்ரபையிடத்தில் ஐந்நூறு அஸ்த்ர தேவதைகளும் பிறந்தார்கள். அவர்கள் அஸுரர்களை அழிக்க ஸிருஷ்டிக்கப்பட்டவர்கள்; நானா ரூபமுள்ளவர்கள்; நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள்; மஹாதேஜஸ்விகள்; ஜயத்தைக் கொடுக்கக் கூடியவர்கள்; ஸுப்ரபையின் புத்ரர்களுக்கு வைத்த ஸம்ஹாரர்களென்ற பெயர் தகும். எல்லையற்ற பலசாலிகள்; அவர்களை அண்டமுடியாது. அனைவரும் இவருக்கு வசப்பட்டிருக்கிறார்கள். அவைகளின் ரஹஸ்யத்தை இவரே நன்றாயறிந்தவர்; இதுவரையிலுமில்லாத அஸ்த்ரங்களையும் இவர் ஸிருஷ்டிப்பார். மூன்று காலங்களையும் நன்றாயறிந்தவர்; இவருக்குத் தெரியாததில்லை. கௌசிகருடைய வீர்யமும் தேஜஸும் கீர்த்தியும் இவ்விதமென்று நீர் கேட்டபிறகும் ராமனை இவருடன் அனுப்புவதில் ஸந்தேஹிப்பது ந்யாயமல்ல. அந்தத் துஷ்ட ராக்ஷஸர்களை அழிப்பது இவருக்கு ஒரு பொருட்டல்ல; ஆனால், உமது புத்ரனுடைய விசேஷ க்ஷேமத்தையும் கீர்த்தியையும் கோறியே உம்மைத் தேடி வந்து இப்படி யாசிக்கிறா"ரென்றார்.

வஸிஷ்டருடைய வார்த்தைகளால் அரசனுடைய சித்தம் தெளிந்தது; முகம் மலர்ந்தது; கௌசிகருடன் ராமனை அனுப்ப நிச்சயித்தார்.

ஸர்க்கம் 22.

## பலே. அதிபலே.

---

வஸிஷ்டர் இப்படிச் சொன்னவுடன் தசரதர் ஸந்தோஷத்தால் முகமலர்ந்து ராமலக்ஷ்மணர்களை வருவித்தார். கௌஸல்யையும் தசரதரும் வஸிஷ்டரும் அவர்களுக்கு ஸகல மங்களங்களுண்டாகும்படி வேதமந்த்ரங்களை ஜபித்து ரக்ஷைகளைக் கட்டி ஆசீர்வாதம் செய்தார்கள். பிறகு தன் அருமைக் குழந்தையான ராமனைத் தசரதர் இறுகத் தழுவி, உச்சி முகர்ந்து, ஸந்தோஷமாய் விசுவாமித்ரரிடம் ஒப்புவித்தார். செந்தாமரைக் கண்ணனான ராமன் கௌசிகருடன் புறப்பட்டுப்போனபொழுது ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி பொழிந்தது; தேவதுந்துபி முழங்கிற்று. நகரத்திலும் சங்க துந்துபி முதலிய மங்கள வாத்யங்கள் கோஷித்தன.

கௌசிகர் முன்னே சென்றார்; ஜில்பாவைத் தரிக்கும் பாலகனும் அபார கீர்த்தி வாய்ந்த ஸ்ரீராமன் அவருக்குப் பின் சென்றார். லக்ஷ்மணன் வில்லுங் கையுமாய் அவரைப் பின்தொடர்ந்தார். மயில்தோகையால் அலங்கரிக்கப்பட்ட சிகைகளுடன் கோதண்டத்தைக் கையில் பிடித்துப் பத்து திக்குகளையும் ப்ரகாசிக்கச் செய்துகொண்டு அந்த ராஜகுமாரர்கள், மூன்று தலைகளுள்ள இரண்டு ஸர்ப்பங்களைப்போல் மஹாமுனியைப் பின்தொடர்ந்தார்கள். கையில் வில்லும், முதுகில் அம்பறைகளும், விரல்களைக் காப்பதற்கு உடும்புத்தோலால் செய்த கூடுகளும் விளங்க, மஹா காந்தி பொருந்தி, ஒப்பற்ற ஸௌந்தர்யமுடன் ராம லக்ஷ்மணர்கள் அந்த ரிஷியுடன் போகையில், ப்ரஹ்மாவை அச்வினீ தேவதைகளும், பரமசிவனை ஸ்கந்தரும் விசாகரும் பின்தொடர்வதுபோல் தோன்றிற்று.

ஒன்றரை யோஜனை தூரம் சென்று ஸரயூவின் தென்கரைக்கு வந்தவுடன் கௌசிகர் "இந்த ராஜகுமாரர்கள் வெகுதூரம் நடந்து வழக்கமில்லாதவர்கள்; காலந்தவறாமல் புஜிப்பவர்கள், சிறுவர்கள், வெகு தூரம் நடந்திருக்கிறார்கள்; போஜன வேளை நெருங்கிவிட்டது. பசி தாஹம் ச்ரமம் தாபம் முதலியவையில்லாமல் இவர்களைச் செய்யு

வேண்டு''மென்று இனிமையான குரலுடன் "ராம! குழந்தாய்! தர்ம சிந்தையுள்ளவனே! தாமஸமில்லாமல் ஆசமனஞ் செய். பலே அதி பலே யென்ற வித்யைகளைப் பெற்றுக்கொள். அவைகளை ஜபித்தால் பசிதாஹம் தேஹச்ரமம் தாபம் ரூபவிகாரம் முதலிய கெடுதிகள் நேராது. அஜாக்ரதையா யிருந்தாலும், அயர்த்தனு யிருந்தாலும், தூங்கினுலும் ராக்ஷஸர்களாலும் உபத்ரவம் நேராது. புஜபலம் ஸாமர்த்யம் அழகு ஸௌபாக்யம் திறமை வஸ்துக்களின் உண்மையை அறிவது நிச்சயிப்பது தடையில்லாமல் பதில் சொல்வது முதலிய உத்தம குணங்களில் மூவுலகத்திலும் உனக்கு இணையிராது. இந்த வித்யைகள் ப்ரஹ்மாவால் ஸிருஷ்டிக்கப்பட்டவை. ஸகல ஞானத்திற்கும்உண்டாகுமிடம்; அழியாதகீர்த்தியைக் கொடுக்கக்கூடியவை; தபோபலத்தால் ஸம்பாதிக்கப்பட்டவை. இவைகளைத் தரிக்கக்கூடிய பல குணங்கள் உன்னிடத்தில் விளங்குகின்றன. உண்மையாய் உன்னுலேயே உண்டாக்கப்பட்டவை. இவைகளை நீயே பெறத்தகுந்தவன்; நீ என்னிடத்திலிருந்து இவைகளைப் பெற்ற பிறகு பலவிதமாய் வளரும். ஆகையால் சீக்ரமாய் இவைகளைப் பெற்றுக்கொள்''ளென்றூர்.

மஹா பராக்ரமசாலியான ராமன் ஆசமனஞ் செய்து சுத்தராய் மலர்ந்த முகத்துடன், ப்ரஹ்ம ஞானியான விச்வாமித்ரரிடமிருந்து அந்த வித்யைகளை உபதேசம் பெற்று, ஆயிரம் கிரணங்களுள்ள ஸூர்யன் சரத் காலத்தில் விளங்குவதுபோல் ப்ரகாசித்தார்.

ராஜகுமாரர்கள் மஹர்ஷியை ஆசார்யராய் எண்ணி, விதிப்படி பூஜித்தார்கள். அன்றிரவில் ஸரயூநதிக் கரையில் அவர்கள் ஸுகமாய்த் தூங்கினூர்கள். இலைகளால் செய்யப்பட்ட படுக்கையில் படுத்தாலும், கௌசிகருடைய வார்த்தைகளால் அவர்களுக்கு அஸௌக்யமாவது ச்ரமமாவது கொஞ்சமேனும் தோன்றவில்லை.

ஸர்க்கம் 23.

# காமாச்ரமம்

விடியற்காலையில் கௌசிகர் எழுந்து, ராஜகுமாரர்களை எழுப்ப அவர்கள் தூங்குமிடத்திற்கு வந்தார். ஸுகமாய் நித்ரை செய்யும் ராமனுடைய திருமுகமண்டலத்தின் காந்தியைப் பார்த்து, "இந்தப் புத்ர ரத்னத்தைப் பெற்ற கௌஸல்யை என்ன பாக்யம் செய்தாளோ; என்ன தபஸ் செய்தாளோ!"வென்று பார்த்துப் பார்த்து ஆச்சர்யமடைந்தார். பிறகு "கௌஸல்யை பல ஜன்மங்களில் செய்த புண்யமே ரூபமெடுத்தது போன்ற புருஷோத்தம, ராம! காலை ஸந்த்யை நடக்கிறது. ஸூர்யன் இருட்டை அழிப்பதுபோல் சத்ருக்களை அழிக்கும் காலம் உனக்கும் ஸமீபித்தது. அக்ஞான மென்ற இருள் நீங்கி உன் ஸ்வரூப ஞானம் எனக்குக் கிடைத்தது. உன் திவ்ய மங்கள விக்ரஹத்தைத தர்சிக்கப் பெற்றேன், நித்ரா ஸமயத்தில் உன் ஸௌந்தர்யத்தைப் பார்த்து மகிழ்ந்தேன். விழித்தபிறகு விளங்கும் லாவண்யத்தைப் பார்க்க விரும்புகிறேன். மேலும், ஸர்வேச்வரனை நீ ஸகல தர்மங்களையும் ஏற்படுத்தி, ஜீவ கோடிகளை அனுஷ்டிக்கச் செய்கிறாய். நீயும் செய்து காட்டவேண்டு மல்லவா? அவைகளை காலத்தில் நீயே செய்யாவிட்டால் பிறர்க்கு ச்ரத்தையிராது. காலை ஸந்த்யாவந்தன முதலிய நித்ய கர்மங்களைச் செய்ய எழுந்திருக்க வேண்டு"மென்றார்.

வெகு கம்பீரமாய் முனிவர் இப்படிச் சொல்ல, ராஜகுமாரர்கள் நித்ரை தெளிந்து ஸ்நானஞ் செய்து அர்க்யம் தர்ப்பணம் காயத்ரீ ஜபம் முதலிய காலைக்ரியைகளை முடித்தார்கள். அளவற்ற பராக்ரம சாலிகளாலும் தபோநிதியான கௌசிகரைப் பக்தியுடன் நமஸ் கரித்து அப்படிப்பட்ட ஸத்குரு கிடைத்ததைப்பற்றி மிகுந்த ஸந் தோஷமடைந்து ப்ரயாணம் செய்யத் தயாரானார்கள்.

வெகுதூரம் சென்று, கங்கையும் ஸரயூவும் சேருமிடத்தில் ஒரு புண்யமான ஆச்ரமத்தையும் அங்கே வெகுகாலமாய்க் கடுந்தபஸ் செய்துகொண்டிருக்கும் மஹா தேஜஸ்விகளான ரிஷிகளையும் பார்த்து ராமன் மிகவும் ஸந்தோஷித்து; "ஸ்வாமி! இது யாருடைய

ஆச்ரமம்? இங்கே யார் வஸிக்கிறார்கள்? க்ருபைசெய்து சொல்ல வேண்டு"மென்றார்.

கௌசிகர் "ராகவ! முன்காலத்தில் சங்கரன் இங்கே இடைவிடாமல் வெகு நியமத்துடன் கடுந்தபஸ் செய்துகொண்டிருந்தார். பார்வதி அவருக்குப் பணிவிடை செய்தாள். அவளிடத்தில் அவருக்கு ஆசையுண்டாகும்படி மன்மதன் முயற்சிசெய்ய, அவர் அதை அறிந்து அவனைக் கோபப் பார்வையால் எரித்தார். அதுமுதல் அவன் சரீரமின்றி அனங்கனென்று பெயர்பெற்றான். இங்கே அவனுடைய அங்கங்கள் அழிந்தபடியால் இவ்விடத்திற்கு அங்கதேசமென்று பெயர் வந்தது. ஸதாசிவன் தபஸ்செய்த ஸ்தலம் இதே. இவர்கள் அவருடைய சிஷ்யர்களே. பாபலேசமின்றித் தர்மஸ்வரூபிகளாய் இங்கேயே வஸிக்கிறார்கள். இந்தப் புண்ய நதிகளுக்கு நடுவிலுள்ள இந்த க்ஷேத்ரத்தில் இன்றிரவு தங்கி காலையில் கங்கையைத் தாண்டுவோம், ஸ்நானஞ்செய்து சுத்தர்களாய், ஜபம் ஹோமம் அக்னிஹோத்ரம் முதலிய க்ரியைகளை முடித்து, இந்தப் புண்யாச்ரமத்திற்குப் போவோ"மென்றார்.

அதற்குள் அங்குள்ள ரிஷிகள் தபோபலத்தால் இவர்களுடைய வரவையும் இனி நடக்கும் விஷயங்களையும் அறிந்து பரமானந்தமடைந்து கௌசிகரை அர்க்யபாத்யங்களால் விதிப்படி பூஜித்து ராஜ குமாரர்களைத் தகுந்தபடி உபசரித்தார்கள். ஒருவர்க்கொருவர் க்ஷேமம் விசாரித்துக்கொண்டு மதுரமான வார்த்தைகளைப் பேசிக்கொண்டு எல்லோரும் ஸாயங்கால ஸந்த்யாவந்தனம் ஜபம் முதலிய க்ரியைகளை வெகு ஸாவதானமாய்ச் செய்தார்கள். பிறகு காமாச்ரமத்திலிருக்கும் ரிஷிகள் கௌசிகரையும் ராஜபுத்ரர்களையும் அங்கே அழைத்துப்போனார்கள். வெகு மனோஹரமான அந்த ஆச்ரமத்தைப் பற்றின கதைகளை கௌசிகர் சொல்ல, ராம லக்ஷ்மணர்கள் கேட்டு ஸந்தோஷமடைந்து அன்றிரவை ஸுகமாய்க் கழித்தார்கள்.

## ஸர்க்கம் 24.

## தாடகா வனம்.

---

ஸூர்யோதயமானவுடன் சத்ருகுல காலர்களான ராம லக்ஷ்மணர்கள் நித்ய கர்மங்களை முடித்து, விச்வாமித்ரரை முன்னிட்டுக்கொண்டு கங்கைக் கரைக்கு வந்தார்கள். அதற்குள் அங்குள்ள மஹர்ஷிகள் ஸகல ஸௌக்யங்களும் பொருந்தி, அழகுள்ள ஓடத்தைக் கொண்டு வந்து "மஹர்ஷே! ராஜ புத்ரர்களுடன் இதில் ஏறவேண்டும்; தாமஸம் செய்ய வேண்டாம்; யாதொரு கெடுதியுமின்றி ஸுகமாய்ப் போய்வாருங்க" ளென்று இனி நடக்கும் தாடகாவத முதலியவைகளை மனதில் வைத்துக்கொண்டு வழியனுப்பினார்கள். கௌசிகர் அவர்களிடத்தில் உத்திரவு பெற்றுக் கங்கையைத் தாண்டினார். ஆற்றின் நடுவில் அலைகள் ஒன்றோடொன்று மோதுவதால் அதிக சப்தமுண்டானதைக் கண்டு ராம லக்ஷ்மணர்கள், "ஸ்வாமி! இந்தப் பயங்கரமான சப்தத்தின் காரணமென்ன"வென்றார்கள். கௌசிகர் "குபேரனுக் கிருப்பிடமான கைலாஸத்தில் மானஸமென்ற ஏரியை ப்ரஹ்மா மனஸால் ஸிருஷ்டித்தார். அதிலிருந்து பெருகினதால் இதற்கு ஸரயூ வென்று பெயர். இந்த நதி அயோத்யைக்கு மேற்கில் ஆரம்பித்து வட கிழக்காய் ஓடி, அங்கதேசத்தைக் கடந்து இங்கே கங்கையில் விழுகிறது. இரண்டு நதிகளின் ஜலங்கள் மோதுவதால் இந்த ஓசையுண்டாகிறது. பக்தியுடன் இந்தப் புண்ய நதிகளை வணங்குங்க"ளென்றார்.

ராஜகுமாரர்கள் அப்படிச் செய்து, கங்கையைத் தாண்டி அப்புறம் போகும்பொழுது ஒரு பயங்கரமான காட்டைக் கண்டார்கள். கருங்காலி, அச்வகர்ணம், பில்வம், பாதிரி, இலந்தை முதலிய பல மரங்களடர்ந்து அது நுழைய முடியாமலிருந்தது. பலவிதமான பக்ஷிகளும், பூமிக்குள்ளிருந்து கத்தும் புழுக்களும், யானை சிங்கம் புலி காட்டுப்பன்றி முதலிய துஷ்டமிருகங்களும், காதிற்குக் கடுமையாயும் மனஸ் நடுங்கும்படியாயும் சப்தஞ் செய்தன. அதைக் கேட்டு அந்த ராஜகுமாரர்கள், "ஸ்வாமி! இது யாருடைய வன"மென்றார்கள்.

மஹாபராக்ரமிகளான தசரத புத்ரர்கள் இப்படிக் கேட்க அபாரமான தேஜஸுள்ள கௌசிகர், "ககுத்ஸ குலதிலகனான ராம! குழந்தாய்! மலதம் கரூஷமென்ற இவ்விரு தேசங்களும் தேவர்களால் உண்டாக்கப்பட்டு தனதான்யங்கள் நிறைந்திருந்தன. முன்பு இந்த்ரன் விருத்ராஸுரனைக் கொன்ற பொழுது ப்ரஹ்மஹத்யா தோஷமும் கோரமான பசியும் அவனைப் பிடித்தன. அந்தத் தோஷத்தைப் போக்கத் தேவர்கள் கங்கை முதலிய புண்ய ஜலங்களாலும், மந்த்ரங்களால் பரிசுத்தமான கடங்களிலுள்ள நீராலும் அவனை ஸ்நானஞ் செய்வித்தார்கள். உடனே அந்த உபத்ரவங்கள் விலகின. அப்பொழுது இந்த்ரன் "என் சரீரத்திலுள்ள மலத்தை இவ்விரு தேசங்களும் போக்கினபடியால் மலதமென்றும், பசியைப் போக்கின படியால் கரூஷமென்றும் விளங்கட்டு"மென்று அனுக்ரஹித்தான். தேவராஜன் சுத்தமானதைக் கண்டு தேவர்கள் மகிழ்ந்து, அவனுடைய வார்த்தையை நல்லது நல்லதென்று கொண்டாடினார்கள். அவர்களுடைய அனுக்ரஹம் பெற்ற அந்தத் தேசங்கள் தன தான்யங்களால் நிறைந்து எண்ணிறந்த ஜனங்கள் வெகுகாலம் ஸுகமாய் வஸிக்கப்பெற்றன.

பிறகு ஸுந்தனென்ற யக்ஷன் தாடகையை விவாஹஞ் செய்தான். அவள் ஆயிரம் யானைகளின் பலத்தையுடையவள். அவளுடைய புத்ரனான மாரீசன் இந்த்ரனைப் போன்ற பலவானாய்ப் பெரிய வாயையும் மலைபோன்ற தேஹத்தையும் விகாரமான கைகளையும், நிகரற்ற பராக்ரமத்தையும் படைத்து, இவ்விரண்டு தேசங்களிலுமுள்ள ஜனங்களைப் பயமுறுத்தி, இதை வனமாக அடித்தான். இங்கிருந்து மூன்றரை யோஜனை தூரத்திற்கப்பால் நாம் போகும் வழியில் அவனும் தாடகையும் வஸிக்கிறார்கள். ஆகையால் இதற்குத் தாடகாவனமென்று பெயர். ராம! உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். கோரரூபியான அந்த யக்ஷஸ்த்ரீயால் அழிக்கப்பட்டுப், பிறர் நெருங்க முடியாத இந்தத் தேசங்களுக்கு ஒருவரும் வருவதில்லை. இந்த உபத்ரவமும் இன்னும் தீரவில்லை. ஆகையால், என் ஆக்ஞையை முன்னிட்டுக்கொண்டு இந்தக் கொடியவளை உன்பலத்தால் கொன்று, இங்கே எல்லோரும் உபத்ரவமின்றி ஸஞ்சரிக்கும்படி செய். இவ்விடம் கோரமான காடானதை உனக்குச் சொன்னே"னென்றார்.

## ஸர்க்கம் 25.

### தாடகை.

---

எண்ணமுடியாத மஹிமையுள்ள கௌசிகர் இப்படிச் சொல்ல நரச்ரேஷ்டனை ராகவன், "ஸ்வாமி! யக்ஷர்கள் அல்பவீர்யமுள்ளவர்களென்று கேள்வி. அந்த ஜாதியில் பிறந்த ஒரு கேவல ஸ்த்ரீக்கு ஆயிரம் யானைபலம் எப்படிக்கிடைத்த"தென்றார். மட்டில்லாத தேஜஸுள்ள ரகுவீரன் ஒன்றுமறியாதவரைப்போல் இப்படிக் கேட்க முனிவர், "ராம! இந்த அபூர்வபலம் அவளுக்கு வரத்தால் கிடைத்தது. ஸுகேதுவென்ற யக்ஷன் வெகுகாலம் புத்ரனில்லாமல் வருந்திக், கடுந் தபஸாலும் சுத்தமான நடத்தையாலும் பக்தியாலும் வீர்யத்தாலும் ப்ரஹ்மாவைத் திருப்தி செய்து, அவருடைய அனுக்ரஹத்தால் தாடகையென்ற பெண்மணியையும் அவளுக்கு ஆயிரம் யானை பலத்தையும் வரமாகப்பெற்றான். ஆனால் புத்ரனை அளிக்கவில்லை. அவளுக்கு யௌவனம் வந்து ரூபலாவண்யத்தில் நிகரற்று விளங்க, ஜம்பனுடைய மகனான ஸுந்தனுக்கு அவளைப் பார்யையாய் ஸுகேது கொடுத்தான். அவளுக்குப் பிறந்த மாரீசன் ஒருவராலும் எதிர்க்கமுடியாதவன்; பிற்காலத்தில் சாபத்தால் ராக்ஷஸத் தன்மையை அடைந்தான். அகஸ்த்யருடைய சாபத்தால் ஸுந்தன் கொல்லப்பட்டபொழுது தாடகையும் மாரீசனும் பழிவாங்க விரும்பிக், கர்ஜித்துக்கொண்டு அவரை விழுங்க அதிவேகமாய் ஓடிவந்தார்கள். அதைக் கண்ட அகஸ்த்யர் கோபத்துடன் "நீ இந்த யக்ஷ தேஹத்தை விட்டு ராக்ஷஸர்களின் விகாரமான சரீரத்தை எடுக்கக் கடவாய்; நீயும் உன் மகனும் மனுஷ்யர்களைத் தின்றுகொண்டு ராக்ஷஸர்களாவீர்க"ளென்றார். உடனே அவர்களுக்கு அந்தப் பயங்கரமான ரூபம் கிடைத்தது. அகஸ்த்யரை ஒன்றும் செய்ய முடியாமல் அவர் வஸிக்கும் தேசத்தை மாத்திரம் அழித்து, அங்குள்ள ப்ராணிகளிடத்தில் தன் கோபத்தைச் செலுத்துகிறாள்.

இந்த யக்ஷஸ்த்ரீ வெகு கொடியவள், துஷ்டை; பலபராக்ரமத்தால் பிறரைக்கெடுப்பதே நோக்கமுள்ளவள்; பசுக்களும்ப்ராஹ்மணர்களும்க்ஷேமமடையவேண்டி இவளைக் கொல். சாபத்தால் ராக்ஷஸியான இவளைக் கொல்ல உன்னைத்தவிர மூவுலகத்திலும் வேறொருவரில்லை. 'அஸ்த்ர சஸ்த்ரங்களைக் கற்று, தகுந்த சூரனிடத்தில் முதல் முதல்

அவைகளை உபயோகிக்காமல், கேவலம் ஒருஸ்த்ரீயிடத்தில் உபயோ கிப்பதில் என்ன கீர்த்தி? மேலும் க்ஷத்ரியன் ஸ்த்ரீயைக் கொல்வது மஹா பாபமல்லவாவென்று தயங்காதே. நான்கு வர்ணத்தார்களின் க்ஷேமத்திற்காக அரசர் இவ்விதமான கார்யங்களைச் செய்யவேண்டி யிருக்கும். ப்ரஜைகளையும் ஸாதுக்களையும் ரக்ஷிக்க அவர்கள் கொடிய கார்யங்களையும் அபவாதம் வரக்கூடிய செய்கைகளையும் பாபங்களையும் செய்தே தீரவேண்டும். ராஜ்யபாரத்தை ஒப்புக்கொண்டவர்கள் இப் பழைமையான தர்மத்தையே நடத்தி வருகிறார்கள். மேலும், இவ ளைக் கொல்வது அதர்மமல்ல. இவளிடத்தில் தர்மமே கிடையாது. முன்பு தானவராஜனான விரோசனனுடைய புத்ரி மந்தரை, பூமியை அழிக்க ஆரம்பித்தார்கள். அதற்காக இந்த்ரன் அவளைக் கொல்ல வில்லையா? ப்ருகு மஹார்ஷியின் பார்யையும் சுக்ராசார்யருடைய தாயு மான க்யாதி இந்த்ரனைக் கொல்ல முயன்றபொழுது, விஷ்ணு அவ ளைச் சக்ரத்தால் நாசஞ் செய்யவில்லையா? இன்னும் பல மஹாத் மாக்களும் புருஷ ச்ரேஷ்டர்களுமான ராஜபுத்ரர்கள், அதர்மத் தையே செய்துவந்த ஸ்த்ரீகளைக் கொன்றிருக்கிறார்க''ளென்றார்.

---

## ஸர்க்கம் 26.

## தாடகாவதம்.

இப்படி ஆழ்ந்த அர்த்தங்களுடன் விசேஷ தைர்யத்தைக் கொடுக்கும் வார்த்தைகளைக் கௌசிகர் சொல்லத், தாசரதி அவரைக் கைகூப்பி வணங்கி "குருநாத! என்னைத் தங்களுடன் அனுப்பின பொழுது 'முனி ச்ரேஷ்டருடைய ஆக்ஞையைத் தடை சொல்லாமல் ஸந்தேஹப்படாமல் உடனே கீழ்ப்படிய வேண்டுமெ'ன்று வஸிஷ்டர் முதலியவர்களுக்கு முன்பாக என் பிதா உத்திரவு செய்திருக்கிறார். அது எனக்கு ப்ரமாணம். மேலும், குசிக வம்சத்தில் பிறந்த ப்ரஹ்ம ஞானியான தாங்கள் சொல்லும் வார்த்தையும் பாப ஸம்பந்தமுண் டோ? கேவலம் புண்யமாயும் ஸகல புருஷார்த்தங்களுக்கும் ஒத்து மிருக்கும். பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் இந்தத் தேசங்களுக் கும் பரமக்ஷேமத்தை உண்டுபண்ணவேண்டி ஸ்த்ரீ வதம்செய்யமிச்ச யித்தே''னென்று கோதண்டத்தை வளைத்து நாணொலி செய்தார். அது பத்துத் திக்குகளிலும் பரவி எதிரொலியுண்டாயிற்று. அவ் வனத்திலுள்ள ஜந்துக்களெல்லாம் நடுங்கின.

மஹா கோபியான தாடகை அதுவரையில் கேட்காத அந்தச் சப்தத்தைக் கேட்டுக், கோபம் இன்னும் அதிகரித்து, இன்னது செய்வதென்று அறியாமல், ஓசை கேட்ட இடத்தை நோக்கி ஓடிவந்தாள். ராகவன் "லக்ஷ்மணா ! இவளுடைய சரீரமும் முகமும் எவ்வளவு விகாரமாயும் அளவுக்கு மிஞ்சியுமிருக்கின்றன ! மாயா பலத்திற்கோ எல்லையில்லை. தைர்யமில்லாதவர்கள் இவளைப் பார்த்தவுடன் ஹிருதயம் வெடித்து இறப்பார்கள். இவளை ஜயிப்பது எளிதல்ல. துஷ்டையானாலும் பெண்ணாகையால் இவளைக் கொல்ல மனம் வரவில்லை. காது மூக்குகளை அறுத்துக், கைகால்களை வெட்டி, ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் சக்தியையும் பிறரை ஜயிக்கும் பலத்தையும் அழித்து, இங்கே வராமல் திருப்பி விடுகிறேன். இந்தத் தேசங்களுக்கு நேர்ந்த கஷ்டமும் நீங்கும்; குருவின் ஆக்ஞையும் நிறைவேறும்; ஸ்த்ரீயைக் கொன்ற தோஷமும் தொடராது. அந்தக் கார்யம் சூரர்களுக்குத் தகா"தென்றார்.

அதற்குள் தாடகை மஹாகோபத்துடன் பேரிடிபோல் கர்ஜித்துக் கைகளை உயரத் தூக்கி ராமனுக்கு நேரில் ஓடிவந்தாள். கடுந்தபஸால் ப்ரஹ்மரிஷியான கௌசிகருக்கு ராமனுடைய அபாரசக்தியும் மஹிமையும் நன்றாகத் தெரியும். ஆனாலும் அவளுடைய பரபரப்பைப் பார்த்து 'ஹூம்' என்று அதட்டி, ராமலக்ஷ்மணர்களுக்கு க்ஷேமமும் ஜயமும் உண்டாகட்டுமென்று ஆசீர்வதித்தார். தாடகை அவர்களின் மேல் புழுதியை வாரியிறைத்து, மண்மாரி பெய்து, ஒரு முஹூர்த்தம் வரையில் ப்ரமிக்கச் செய்தாள். பிறகு மாயாபலத்தால் ஆகாசத்திலிருந்து கல்லுகளையும் பாறைகளையும் பொழிந்தாள். ராமனுக்குக் கோபமுண்டாயிற்று. சரமாரியால் கல்மாரியைத் தடுத்துத், தன்னை நோக்கி ஓடிவரும் தாடகையின் கைகளை அறுத்துத் தள்ளினார். கர்ஜித்துக்கொண்டு சற்றுக் களைத்துக், கைகளற்று, வெகு ஸமீபத்தில் வந்த அவளுடைய காது மூக்குகளை லக்ஷ்மணன் அறுத்தார். நினைத்த ரூபங்களை எடுக்கக் கூடியவளாகையால் அவள், பலவிதமாகத் தோன்றித் திடீரென்று மறைந்து, மாயையால் அவர்களை மயக்கிக், கல்மாரி பொழிந்து கோரமாய் இரைந்துகொண்டு எங்கும் ஸஞ்சரித்தாள். எப்புறத்திலும் கல் மழை பெய்யக்கண்டு, கௌசிகர் இவளைக் கொல்லத் தகுந்த காரணம் இப்பொழுதே நேர்ந்ததென்று "ராம ! இந்தப் பாபியிடத்தில் நீ இரக்கம் வைத்தது போதும். இவளோ பரமதுஷ்டை; யாகங்களைக் கெடுக்கிறவள்; ஸந்த்யா காலத்தில் ராக்ஷஸர்களை ஜயிக்க முடியாது. இவளுடைய பலம் மாயையால் வரவர வளருகிறது

ஸந்த்யாகாலத்திற்கு முன் இவளைக் கொல்லவேண்டு''மென்று எச்சரித்தார்.

கண்ணுக்குத் தெரியாமலிருந்துகொண்டு கல் மழை பெய்யும் அவளுடைய சப்தமுண்டான விடத்தைக் குறிவைத்து ராமன் அம்புகளை எய்து அவளைத் தடுத்தார். தன் மாயாபலம் வீணானதைக் கண்டு பயங்கரமாகக் கத்திக்கொண்டு, இடி விழுவதுபோல் ராஜ குமாரர்களை நோக்கி அவள் ஓடிவந்தாள். ஓர் திவ்யாஸ்த்ரத்தால் ராமன் அவளை மார்பில் துளைக்க, அவள் கீழே விழுந்து உயிரை விட்டாள். பயங்கரமான தாடகை கொல்லப்பட்டவுடன் இந்த்ராதி தேவர்கள், 'நல்லது நல்ல'தென்று ராமனைக் கொண்டாடி, ஸந்தோஷம் அடங்காமல் ''மஹர்ஷே ! உமக்குப் பரம மங்களமுண்டாகட்டும். ராமனை இங்கே அழைத்து வந்து, தேவ சத்ருவான தாடகையை அழித்து, எங்களுக்குச் செய்த பரமோபகாரத்தால் நாங்கள் அடைந்த திருப்திக்கு எல்லையில்லை. ராகவனிடத்தில் தங்களுடைய அன்பிற்கு அடையாளமாகத் திவ்யாஸ்த்ரங்களை உபதேசியும். பிருசாச்வரென்ற ப்ரஜாபதியின் புத்ரர்களும், வீணாகாத பராக்ரமிகளும், நிகரற்ற தங்களுடைய தபோபலத்தால் ஸம்பாதிக்கப்பட்டவர்களுமான அந்தத் தேவதைகளைத் தரிப்பதற்குத் தகுந்தவன் ராமனே. தங்களைப் பரமகுருவாய் நினைத்துப் பணிவிடை செய்வதில் அவனுக்கு வெகு திருப்தி. குருமுகமாக் கிடைத்த வித்யையே விசேஷ வீர்யமுள்ளது. தேவர்களுக்கு ஒரு பெரிய கார்யம் இவனால் நடக்கவேண்டியதென்று உமக்குத் தெரியாதா''வென்று அவரிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு திரும்பிச் சென்றார்கள்.

ஸந்த்யா காலமாயிற்று. தாடகாவதத்தால் மிகவும் ஸந்தோஷமடைந்த விச்வாமித்ரர் ராமனை உச்சி முகர்ந்து ''குழந்தாய் ! உன்னைப் பார்த்தவர்களுக்குப் பாபம் நீங்கி ஸகல மங்களங்களும் கிடைக்குமே; ஸகல தாபங்களும் தீருமே; ஆனந்த வெள்ளம் பெருகுமே; இந்த ராத்ரி இங்கே தங்கிக், காலையில் என்னிடத்திற்குப் போகலா''மென்றார். அப்படியே அவர்கள் அவ்வனத்தில் வஸித்தார்கள். அது சாபம் நீங்கிக், குபேரனுடைய சைத்ர ரதமென்ற தோட்டத்தைப் போல் வெகு ரமணீயமாய் விளங்கிற்று.

யக்ஷ புத்ரியான தாடகையை ஸம்ஹரித்துத், தேவகணங்களால் கொண்டாடப்பட்டு, ரகுவீரன் அன்றுராத்ரி விச்வாமித்ரருடன் அங்கே வஸித்தார். காலையில் அந்த முனிவர் ராஜபுத்ரர்களை எழுப்பினார்.

# ஸர்க்கம் 27.

## அஸ்த்ரோபதேசம்.

மஹா கீர்த்திமானான விச்வாமித்ரர் "என்ன ஆச்சர்யம்! ஸகல லோகநாதனும் ஸகல சக்திகளுக்கும் பிறப்பிடமுமான ராமனுக்கு, அல்பஞானமும் அல்ப சக்தியுமுள்ள நான் குருவாகி, அஸ்த்ரங்களை உபதேசிப்பது என்ன பரிஹாஸம்! ஆனால் இதுவும் அவனுடைய திருவுளமே. அவருடைய லீலா விசித்ரத்தை யாரறிவார்" என்று, தன்க்குள் சிரித்துக்கொண்டு, ராமனை மதுரமாய் அழைத்துத் "தாசரதி! உன்னிடத்தில் எனக்குள்ள ப்ரீதிக்கு அளவில்லை. ஸகல மங்களங்களு முண்டாகட்டும். ஒப்புற்ற கீர்த்தியை அடைவாய். எனக்குத் தெரிந்த ஸகல அஸ்த்ரங்களையும் வெகு ப்ரீதியுடன் மனப்பூர்வமாய் உபதேசிக்கிறேன். தேவாஸுர கந்தர்வ உரக தைத்ய கணங்களையும் ஸகல சத்ருக்களையும் எதிர்த்து வசப்படுத்தி ஜயிக்கும் திவ்யாஸ்த்ரங்களை ஒன்று விடாமல் உபதேசிக்கிறேன். தண்ட சக்ரம், கால சக்ரம், தர்ம சக்ரம், விஷ்ணு சக்ரம்; ஐந்த்ரம், வஜ்ரம், சிவசூலம், ப்ராஹ்மம், ஐஷீகம், ப்ரஹ்மசிரஸ் என்ற அஸ்த்ரங்கள்; மோதகி சிகரீயென்ற காந்தியுள்ள கதாயுதங்கள், தர்மபாசம் காலபாசம் வருணபாசம், வருணாஸ்த்ரம், சீரிடி, நெருப்பிடி; பிநாகாஸ்த்ரம், நாராயணாஸ்த்ரம், சிகரமென்ற ஆக்னேயாஸ்த்ரம், பரதமென்ற வாயவ்யாஸ்த்ரம்; ஹயசிரஸென்ற அஸ்த்ரம், க்ரௌஞ்ச சாஸ்த்ரம், விஷ்ணு சக்தி, ருத்ர சக்தி, கங்காளாஸ்த்ரம், முஸலாஸ்த்ரம், காபாலாஸ்த்ரம், கங்கணாஸ்த்ரம் (இவை அஸுரர்களுடையவை); நந்தனமென்ற கத்தியின் ரூபமுள்ள வித்யாதராஸ்த்ரம், மானவம் ப்ரஸ்வாபனம் ப்ரசமனமென்ற கந்தர்வாஸ்த்ரம், ஸௌர்யாஸ்த்ரம்; தர்ப்பணம், சோஷணம், ஸந்தாபனம், விலாபனம், மதனமென்ற மன்மதாஸ்த்ரங்கள், மோஹனமென்ற பைசாசாஸ்த்ரம், தாமஸாஸ்த்ரம், ஸௌமனாஸ்த்ரம், ஸம்வர்த்தாஸ்த்ரம், மௌஸலாஸ்த்ரம், ஸத்யாஸ்த்ரம், மாயாதராஸ்த்ரம், தேஜப்ரபம் (பிறருடைய தேஜஸை அபஹரிக்கும்) சிசிரமென்ற சந்த்ராஸ்த்ரம், ஸுதாமனமென்ற த்வஷ்டாவின் அஸ்த்ரம், சீதேஷு வென்ற பகதேவதையின் அஸ்த்ரம், மானவாஸ்த்ரமென்றுவைகளை என்னிடத்தி லிருந்து சீக்ரமாய்ப் பெற்றுக்கொள்." மஹா

னுபாவ! இவை நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவை: மஹாபலமுள்ளவை, உதார ஸ்வபாவமுள்ளவை" யென்றார். பிறகு அவர் ஆசமனஞ் செய்து, சுத்தராகக் கிழக்குமுகமாக விருந்து, ராமனுக்கு ஒவ்வொரு அஸ்த்ரத்தின் மந்த்ரங்களையும் உபதேசித்தார். அவை யாவையும் தரிப்பது தேவர்களாலும் முடியாது. அவைகளைக் கொடுத்து, ஒவ்வொரு மந்த்ரத்தையும் உச்சரித்தவுடன், அந்தத் தேவதை ரூபமெடுத்து ராமனிடத்தில் வந்து நின்று, கைகூப்பி வணக்கமாய் ஸந்தோஷத்துடன் "ரகுவீர! நாங்கள் உன் ஆக்ஞையை நிறைவேற்றக் கடமைப்பட்டவர்கள். உன்னிடத்தில் உதாரமான புத்தியை வைத்திருக்கிறோம்" மென்றன. ராமன் அவைகளின் கைங்கர்யத்தை அங்கீகரித்து, ஸ்வாதீனப்படுத்திக்கொண்டதற்கு அடையாளமாய் அவைகளைத் தொட்டு, "நான் நினைத்தபொழுது வரவேண்டு"மென்று உத்திரவு செய்தனுப்பினார். பிறகு ஆசார்யனை மஹர்ஷியை ப்ரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து விதிப்படி பூஜித்துத், திவ்யாஸ்த்ரங்களைப் பெற்றதால் அதிகமான தேஜஸுடன், அங்கிருந்து போகப் புறப்பட்டார்.

---

## ஸர்க்கம் 28

### உபஸம்ஹாரங்களை உபதேசித்தது.

ரகுவீரன் கௌசிகரிடத்திலிருந்து அஸ்த்ரங்களைப் பெற்றுக் கொண்டு சுத்தராய், ஸந்தோஷத்தால் முகமலர்ந்து போய்க்கொண்டிருக்கையில் "ஸ்வாமி! தாங்கள் உபதேசித்த அஸ்த்ரங்களின் மஹிமையால் தேவாஸுரர்களாலும் எதிர்க்கக் கூடாதவனானேன். ஆனால் இவைகளை ப்ரயோகித்த பிறகு மறுபடியும் உபஸம்ஹாரஞ் செய்யும் விதத்தை உபதேசிக்க வேண்டுமென்று ப்ரார்த்தித்தார். உடனே அந்த முனிவர் சுத்தராய், ப்ரீதியுடன் உபஸம்ஹார மந்த்ரங்களைத் தெரிவித்து, ஸத்யவான், ஸத்யகீர்த்தி, திருஷ்டம், ரபஸம், ப்ரதிஹாரதரம், பராங்முகம், அவாங்முகம், லக்ஷாக்ஷம், விஷமம், திருடநாபம், ஸுநாபகம், ஜ்யோதிஷம், கிருசனம், நைராச்யம், விமலம், போகந்தரம், ஹரித்ரம், தைத்யம், ப்ரசமனம், சுசிர்பாஹு, மஹாபாஹு, நிஷ்குலி, விருசி, ஸார்ச்சிமாலி, திருதிமாலி, விருத்திமான், ருசிரம், பித்ருஸௌமனஸம், விதூதம், மகரம், கரவீரகரம், தனம், தான்யம், காமரூபம், காமருசி, மோஹம், ஆவரணம், ஜிரும்பணம், ஸர்வநாபம், ஸந்தானம், வரணமென்ற தேஜஸ்விகளான பிருசாச்வ

புத்ரர்களைப் பெற்றுக்கொள். காமரூபிகளான இந்த மந்த்ரதேவதைகளைத் தரிக்க நீயே தகுந்தவ"னென்றார். ராமன், அப்படிச் செய்கிறேனென்று மனமகிழ்ந்து, அவைகளைப் பெற்றுக்கொண்டார். அவை ராமனை அடைந்து, காந்தியுள்ள திவ்ய தேஹங்களுடன் மனுஷ்யரூப மெடுத்து, ஸுகத்தைக் கொடுக்கக்கூடியவைகளாய்த் தோன்றின. சில நெருப்புத் தணல்களைப் போலும், சில புகையைப்போலும், சில ஸூர்ய சந்த்ரர்களைப் போலும் காணப்பட்டன. யாவும் கைகூப்பி வணக்கமாய் மதுரமான குரலுடன் "நரச்ரேஷ்ட! இதோ வந்திருக்கிறோம். என்ன ஆக்ஞை? நாங்கள் என்ன செய்ய வேண்டு"மென்று தெரிவித்தன. ராகவன் "என் ஞாபகத்திலிருங்கள். நான் நினைத்த பொழுது வந்து எனக்கு உதவி செய்யுங்கள். அதுவரையில் உங்களிஷ்டப்படி யிருங்க"ளென்று விடைகொடுத்தனுப்பினார். அவை ராகவனை ப்ரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து, அப்படிச் செய்கிறோமென்று அவரிடத்தில் விடைபெற்று மறைந்தன. பிறகு கௌசிகருடைய அனுமதியால் அந்த அஸ்த்ரங்களையும் உபஸம்ஹாரங்களையும் ராமன் லக்ஷ்மணனுக்கு உபதேசித்தார்.

இப்படி உபஸம்ஹார மந்த்ரங்களை மஹர்ஷியிடத்திலிருந்து பெற்றுக்கொண்டு, ப்ரயாணஞ் செய்கையில், ராமன் "ஸத்குருவே! அந்த மலைக்கு ஸமீபத்தில் கறுத்த நீருண்ட மேகம்போல் காணப்படும் மரச்சோலை காட்டைச் சேர்ந்ததா? ஆச்ரமத்தைச் சேர்ந்ததா? பார்வைக்கு மிகவும் அழகாயிருக்கிறது. மான்களால் நிறைந்திருக்கிறது. நானாவிதமான பக்ஷிகள் மதுரமாய்க் கூவுகின்றன. பயங்கரமான தாடகாவனத்தைத் தாண்டி விட்டோமென்று எண்ணுகிறேன். இந்த ப்ரதேசம் வெகு அழகாயும் ஸுகமாயுமிருப்பதால் ஆச்ரம பூமியாகிறது. இது யாருடைய ஆச்ரமம்? ப்ராஹ்மணர்களைக் கொன்று தங்களுடைய யக்ஞத்தை நாசஞ்செய்யும் அந்தத் துஷ்ட ராக்ஷஸர்கள் வலிக்கு மிடத்திற்கு வந்துவிட்டோமா? தங்களுடைய யாகம் நடக்கும் இடம் எது? அந்த ராக்ஷஸர்களைக் கொன்று தங்களுடைய யாகத்தை ரக்ஷிக்க வேண்டிய இடம் எது? ஸகல விஷயங்களையும் அறிந்த தாங்கள் சொல்ல வேண்டும். கேட்க ஆவலாயிருக்கிறே"னென்றார்.

## ஸர்க்கம் 29.

## ஸித்தாச்ரமம்.

### அவதாரிகை

ஸித்தாச்ரமத்தில் பகவான் எப்பொழுதும் விளங்குவதால், அங்கே செய்யும் தபஸெல்லாம் ஸித்தி யடையுமென்றும், பகவா னிருந்த திவ்ய க்ஷேத்ரத்திலேயே நாமும் வஸிக்க வேண்டுமென்றும் சொல்லப்படுகிறது.

---

மனுஷ்ய பாவனையால் ஒன்றும் தெரியாதவரைப்போல் தன்னைப்பற்றியே இப்படிக் கேட்ட ராமனுடைய அளவற்ற மஹிமையை அறிந்த விச்வாமித்ரர், இதுவும் ஒரு லீலையோ வென்று ஆச்சர்யப்பட்டு "மஹா பராக்ரமியான ராம! தேவாதி தேவனும் லோகநாதனுமான மஹாவிஷ்ணு, ஜகத்தை ரக்ஷிக்க இங்கே பல யுகங்கள் வரையில் ஒருவராலும் பார்க்கப்படாமல் தபஸ் செய்துகொண் டிருந்தார். வாமன ரூப மெடுத்த மஹாவிஷ்ணு இவ்விடத்தில் தபஸ் செய்து ஸித்தி யடைந்ததால் இதற்கு ஸித்தாச்ரமமென்று பெயர்.

அதை அறிந்த காச்யபர் அவரைப் புத்ரனுக அடைய விரும்பித் தன் பார்யையான அதிதியுடன் ஆயிரம் தேவ வர்ஷங்களாக வ்ரதத்தை அனுஷ்டித்து அவரை ப்ரார்த்தித்தார். அதன் முடிவில் பகவான் ப்ரஸன்னராகி, வரங்கொடுக்க அங்கே வநதார். காச்யபர் அவரை ப்ரதக்ஷிண நமஸ்காரங்களால் உபசரித்து "ஸ்வாமி! என் புண்ய விசேஷத்தால் தங்களைக் காணப்பெற்றேன். புருஷோத்தம! தாங்கள் தபஸால் ஆராதிக்கப்படுகிறீர்கள்; தபஸின் பயனைக் கொடுக்கிறீர்கள்; ஞானஸ்வரூபி; தபஸே தங்களுடைய ஸ்வபாவம்; இதர ப்ரயோஜனங்களை விரும்பாமல் தங்களை ஆராதித்ததால், தங்களுடைய தர்சனம் கிடைத்தது. ஸர்வ கர்மங்களாலும் பூஜிக்கப்படுகிறவர்; அவைகளின் பலன்களைக் கொடுப்பவர், ஞானஸ்வரூபி; ஆகையால் ப்ராக்ருத குணங்களுக்கு எதிரான ஸத்யம் ஞானம் ஆனந்தமென்ற கல்யாண குணங்களால் விளங்குகிறவர்; இதே எனக்குப் பரம ப்ரயோஜனம். சேதனு சேதன ப்ரபஞ்சம் யாவையும் தங்களுடைய சரீரத்தில் காண்கிறேன். உத்பத்தியற்றவரும் அளவிடக்

கூடாதவருமான தங்களையே சரணமடைகிறேன்'' என்றார். பாப லேசமுமற்ற காச்யபருடைய ஸ்தோத்ரத்தால் ஹரி ஸந்தோஷித்து ''உனக்கு மங்கள முண்டாகட்டும். உத்தமமான வரங்களைப் பெறத் தகுந்தவனுகையால் வேண்டியதைக் கேளெ''ன்று அனுக்ரஹித்தார்.

அப்பொழுது விரோசனனுடைய புத்ரனன பலியென்ற அஸுரராஜன் இந்த்ராதி தேவர்களை ஜயித்து ஸ்வர்க்கத்தைக் கைப்பற்றி மூவுலகிலும் ப்ரஸித்தியுடன் ஆண்டுவந்தான். பிறகு ஓர் யாகஞ் செய்ய ஆரம்பித்தான். அப்பொழுது தேவதைகள் இங்கே வந்து விஷ்ணுவை நமஸ்கரித்து "ஸ்வாமி விரோசன புத்ரனன பலி உத்தமமான யாகத்தைச் செய்கிறான். அது முடிவதற்குள் எங்களுடைய ப்ரார்த்தனையைத் தாங்கள் நிறைவேற்ற வேண்டும். எப்பொழுது எதை எவர் கேட்டாலும் தடையில்லாமல் உடனே கொடுத்துவருகிறான். எங்களுடைய க்ஷேமத்தைக் கோறி, வாமனராய் மாயாரூப மெடுத்து, எங்களுக்குப் பரம மங்களத்தைச் செய்யவேண்டு''மென்று ப்ரார்த்தித்தார்கள்.

அப்பொழுது காசயபர் "ஸ்வாமி! நானும் அதிதியும் தேவர்களும் ஒரே விஷயத்தை வேண்டுகிறோம். எனக்கும் அதிதிக்கும் புத்ரனய் இந்த்ரனுக்குத் தம்பியாய் அவதரித்துச், சோகத்தால் வாடும் தேவர்களுக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும். தங்களுடைய உத்தேசமும் என் ப்ரார்த்தனையும் நிறைவேறினதால், இவ்விடத்திற்கு ஸித்தாச்ரம மென்று பெயருண்டாகும். எங்களை ரக்ஷிக்க அவதாரஞ் செய்யப் புறப்படுங்க''ளென்றார்.

அப்படியே ஹரி அதிதியிடத்தில் வாமனராகப் பிறந்து, பலி யாகஞ் செய்யுமிடத்திற்குப் போய், மூன்றடி நிலத்தை வேண்டிப் பெற்றார். இரண்டடிகளால் மூவுலகையும் அளந்து, மூன்றாவதற்கு இடமில்லாமல் அவனைச் சிறையில் வைத்து த்ரிலோகங்களையும் இந்த்ரனுடைய வசத்தில் ஒப்புவித்து, ஸகல ப்ராணிகளுக்கும் பரம மங்களத்தைச் செய்தார். ஸம்ஸார பாபங்களைப் போக்கும் இந்த ஆச்ரமத்தில் அவர் வஸித்தார். எனக்கு அவரிடத்திலுள்ள பக்தியால் அவருடைய திருவடிகள் பட்ட இவ்விடத்தில் வஸித்து வருகிறேன். என் யாகத்தைக் கெடுக்கும் ராக்ஷஸர்கள் இங்கே வருகிறார்கள். நீ அவர்களை இங்கே கொல்லவேண்டும். இன்று ஸித்தாச்ரமத்திற்குப் போவோம். என்னைப்போல் உனக்கும் அங்கே அவ்வளவு ஸ்வாதீனமுண்''டென்று பேசிக்கொண்டே அவ்

விடம் சேர்ந்தார்கள். தன் வாஸஸ்தானத்திற்கு வந்தவுடன், பனி நீங்கிப் புனர்வஸுவுடன் கூடின சந்த்ரனைப் போல் கௌசிகர் விளங்கினார். அங்குள்ள தபஸ்விகள் அவரை எதிர்கொண்டழைத்து உபசரித்து விதிப்படி பூஜித்து, ராம லக்ஷ்மணர்களுக்கு அதிதி பூஜை செய்தார்கள். ராஜகுமாரர்கள் சற்று நேரம் இளைப்பாறிப் பிறகு, "மஹர்ஷே! தங்களுக்கு ஸகல மங்களங்களு முண்டாகட்டும். இன்றைக்கு யாகதீக்ஷை செய்துகொள்ளுங்கள். தங்களுடைய யாகம் விக்னமின்றி நிறைவேறுவதால் இதற்கு ஸித்தாச்ரமமென்ற பெயர் உண்மையாயிருக்கு"மென்றார்கள். கௌசிகர் அப்படியே இந்த்ரியங்களை அடக்கிக் கொண்டு யாகதீக்ஷை பெற்றார்.

ராஜகுமாரர்கள் அன்று ராத்திரி முழுதும் வெகு ஜாக்ரதையாயிருந்து, அதிகாலையில் விழித்துக் கொண்டு, ஸந்த்யாவந்தனம் ஜபம் முதலியவைகளை முடித்து, அக்னி ஹோத்ரஞ் செய்து ஸுகமாய் உட்கார்ந்திருக்கும் தங்களுடைய குருவை நமஸ்கரித்தார்கள்.

## ஸர்க்கம் 30.

### யாக ஸம்ரக்ஷணம்.

உசிதமான காலத்திலும் இடத்திலும் பேசும் திறமையுள்ள அந்த வீரர்கள் "முனி ச்ரேஷ்ட! ராக்ஷஸர்கள் எப்பொழுது வருவார்கள்? எப்பொழுது நாங்கள் ஜாக்ரதையாய் ரக்ஷிக்கவேண்டும்? அந்தக் காலம் தாண்டக்கூடா தல்லவா" வென்றார்கள். யுத்தாவேசத்தால் பரபரப்புள்ள ராஜகுமாரர்களைப் பார்த்து அங்கிருந்த ரிஷிகள் மகிழ்ந்து கொண்டாடி, "இன்று முதல் ஆறு இரவும் பகலும் நீங்கள் யாகத்தை ரக்ஷிக்கவேண்டும். உங்களுடைய குரு யாக தீக்ஷை பெற்றதால் பேசமாட்டா" ரென்றார்கள். பிறகு ராம லக்ஷ்மணர்கள் வெகு ஜாக்ரதையாய் விழித்துக்கொண்டிருந்து, அந்த ஆச்ரமத்தையும் கௌசிகரையும் ரிஷிகளையும் வில்லுங் கையுமாய்ப் பாதுகாத்தார்கள்.

ஆறாவது நாளில் ராமன் "தம்பி! இன்று ஸுத்யாஹஸ் என்ற முக்யமான தினம். ராக்ஷஸர்கள் வரும் காலமாயிற்று; வெகு ஜாக்ரதையா யிருக்கவேண்டு" மென்றார். யுத்தஞ்செய்ய ஆவலுள்ள ராமன் இப்படிச் சொல்லி முடிக்குமுன் அக்னிகுண்டம் ஜ்வலித்தது. ராக்ஷஸர்கள் வந்ததற்கு அதே அடையாளம். தர்ப்பம் சமஸம்

ஸ்ருக் ஸ்ருவம் ஸமித்துகள் புஷ்பங்கள் முதலியவை [illegible] பக்கங்களிலும் வைக்கப்பட்டிருந்தன. யஜமானனுன கௌசிகர் மற்ற ரித்விக்குகளுடன் யாகத்தை நடத்தினர். ராஜ புத்ரர்கள் ரக்ஷிக்கிறார்களென்ற தைர்யத்தால் ரிஷிகள் பயமின்றி ஆஹுதிகளைக் கொடுத்து, ராக்ஷஸர்கள் நெருங்காமலிருக்க, ரக்ஷோக்ன மந்த்ரங்களை ஜபித்தார்கள். அதனல் ஸுபாஹு மாரீசர்கள் யாகசாலைக்குள் வர முடியாமல், ஆகாசத்தில் நின்று பெரிய மேகங்களைப் போல் கர்ஜித்து மாயா பலத்தால் கொழுப்படைந்து ரக்தமாரி பொழிந்தார்கள். யாகவேதி ரக்தத்தால் சிவந்தது. ராஜபுத்ரர்களின் கண்களும் கோபத்தால் சிவந்தன. ராமன் அதிவேகமாய் ஓடி வந்து பார்த்தார். ராக்ஷஸர்கள் ஆகாசத்திலிருந்து பூமிக்கு வந்துகொண்டிருந்தார்கள். "லக்ஷ்மணு! மாம்ஸத்தைத் தின்று ரக்தத்தைக் குடிக்கும் இந்தத் துஷ்டர்களின் மேல் மான வாஸ்த்ரத்தை விட்டுப் பெருங்காற்று மேகங்களைச் சிதற வடிப்பது போல் துரத்துகிறேன், பா"ரென்று வெகு ப்ரகாசமுள்ள மானவாஸ்த்ரத்தை மாரீசனுடைய மார்பை நோக்கி விட்டார். அது அவனை நூறு யோசனைக்கப்பால் தள்ளிக்கொண்டு போய் ஸமுத்ரத்தில் அழுத்திற்று. ப்ரக்ஞையற்று மூச்சுத் திணறி அஸ்த்ரத்தால் அடிபட்டு பலமிழந்து அவன் தத்தளிப்பதைக் கண்டு ராமன் "தம்பி! மானவாஸ்த்ரத்தின் மஹிமையைப் பார். என் எண்ணத்தை அறிந்து, இது மாரீசனைக் கொல்லாமல் மயக்கி இழுத்துக் கொண்டு போகிறது. யாகங்களை அழித்து, ரிஷிகளைக் கொன்று ரக்தத்தைக் குடிக்கும் இந்தத் துஷ்டராக்ஷஸர்கள் மாத்ரம் மிகுந்திருக்கிறார்கள். இவர்களை உயிருடன் விடக்கூடா"தென்று ஆக்னேயமான ஆக்னேயாஸ்திரத்தை எடுத்து ஸுபாஹுவை மார்பில் அடித்தார். அவன் உடனே பூமியில் விழுந்திறந்தான். மற்றவர்களை வாயவ்யாஸ்த்ரத்தால் கொன்றார். இப்படி இரண்டு சிறுவர்கள் மலைபோன்ற ராக்ஷஸர்களை வெகு சீக்ரத்தில் அழித்ததைப் பார்த்துக்கொண்டிருந்த மஹார்ஷிகள் ஆச்சர்யமும் ஸந்தோஷமும் தாங்காமல், தேவராஜன் அஸுரர்களை ஜயித்தபொழுது முனிவர்கள் பூஜித்ததுபோல் அவர்களைக் கொண்டாடினார்கள்.

தன் யாகம் விக்னமின்றி முடிந்ததையும், திக்குகள் உபத்ரவமின்றி விளங்குவதையும் கண்டு கௌசிகர், உடனே "ராம! மஹாபராக்ரமசாலி! மஹா கீர்த்திமானே! என் எண்ணங்களை நிறைவேற்றினய். உன் பிதாவின் உத்திரவுப்படி நடந்தாய். உன்னிடத்தில் எனக்குள்ள ப்ரீதிக்குக் கரையில்லை. ஸித்தாச்ரமமென்ற பெயர் இவ்விடத்திற்கு உன்னல் உறுதியாயிற்"றென்றார்.

## ஸர்க்கம் 31.

## மிதிலேக்கு ப்ரயாணம்.

அவதாரிகை

தாடகாதிராக்ஷஸர்களை ஸுலபமாய்க் கொல்லும் சக்தி விசுவாமித்ரருக்குண்டு. ஆனால் ராமனுடைய மஹிமையை லோகத்திற்கு வெளிப்படுத்தவும், அந்த ராக்ஷஸர்களுக்கு நேர்ந்த சாபத்தைத் தீர்த்து உத்தம கதியைக் கொடுக்கவும், ராமனை அழைத்து வந்து யாகத்தை ரக்ஷிப்பதென்ற வெளிப்படையான காரணத்தால் அவர்களைக் கொல்லுவித்தார். மேலும், ராவணாதி ராக்ஷஸர்களைக் கொன்று பூபாரத்தைத் தீர்க்க ஸகல அஸ்த்ரங்களையும் ராமனுக் குபதேசித்தார். பராசக்தியின் சேர்க்கையின்றித் துஷ்டநிக்ரஹம் முடியாது; அவதார கார்யம் நிறைவேறாது. ஜனககுமாரியாய்ப் பிறந்த லக்ஷ்மியை ராமனுடன் சேர்த்துவைக்க அவரை மிதிலேக்கு அழைத்துப் போனார். குருவால் உபதேசிக்கப்பட்ட வித்யையே பயன் பெறுமென்ற தர்மத்தை நடத்திக் காட்ட, ஸர்வக்ஞனும் ஸர்வ சக்தனுமான ராமன் கௌசிகரைக் குருவாயடைந்து ஸகல சுச்ரூஷையும் செய்து அஸ்த்ரங்களைப் பெற்றார்.

ராமலக்ஷ்மணர்கள் தங்களுடைய கார்யம் நிறைவேறினதால் ஸந்தோஷித்து, அன்றிரவில் அங்கே தங்கிக் காலையில் எழுந்து நித்ய கர்மங்களை முடித்துக், கௌசிகரும் மற்ற ரிஷிகளும் இருக்கு மிடத்திற்கு வந்தார்கள். கொழுந்து விட்டெரியும் அக்னியைப் போல் ஜ்வலிக்கும் அம்முனிவரை வணங்கி "ஸ்வாமி! இதோ தங்களுடைய வேலைக்காரர்கள் வந்திருக்கிறோம். வேண்டியதைச் செய்யும்படி கட்டளையிடலாம். என்ன உத்திர"வென்று மதுரமாயும் பெருந்தன்மையாயும் சொன்னார்கள். (உமது பக்திக்கு நாங்கள் அடிமைப் பட்டோம். உம்மைவிட்டு ஒரு க்ஷணமாவது பிரிந்திருக்க மனமில்லை. ராஜபுத்ரர்களை அடிக்கடி வேலையிடலாமாவென்று தயங்கவேண்டாம். பஞ்சகாலத்தில் கூடைநெல்லைக் கொடுத்து வாங்கின ராஜகுமாரனைப் பஞ்சம் தெளிந்தபிறகு அதே விலைக்குக் கேட்டால் கொடுப்பார்களா ? வாங்கினவர்கள் எந்த வேலையைச் சொன்னாலும் தடையின்றி ஸந்தோஷத்துடன் செய்யவேண்டுமல்லவா ?)

அங்குள்ள ரிஷிகள் கௌசிகருடைய அனுமதிபெற்று "பரம தர்மவானான ஜனகர் ஓர் யாகம் செய்கிறார். பகவத் கைங்கர்யமாயும் பலாபேக்ஷையின்றியும் அது செய்யப்படுவதால் பலத்தை விரும்பின நித்யகர்மங்களைக் காட்டிலும் மேலானது. ஆகையால் அதைப் பார்க்கப் போகிறோம். நரச்ரேஷ்ட! நீயும் எங்களுடன் வந்தால் அவ்விடத்திலுள்ள அத்புதமான வில்லைப் பார்க்கலாம். ஜனகருடைய முன்னோர்களில் ஒருவருக்கு யாகத்தில் தேவர்களால் அது கொடுக்கப்பட்டது; வெகு ப்ரகாசமுள்ளது; அளவற்ற பலமுள்ளது. பார்க்கப் பயங்கரமானது. தேவ கந்தர்வ அஸுர ராக்ஷஸர்களும் அதை நாணேற்ற முடியவில்லை. மனுஷ்யர்களைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? அதன் வீர்யத்தை அறிய வந்த மஹா பலவான்களான ராஜபுத்ரர்களும் அதை வளைக்க முடியவில்லை. அங்கே போனால் ஜனகருடைய அத்புதமான யாகத்தையும் உத்தமமான வில்லையும் நீ பார்க்கலாம். தேவர்களால் யாகபலமாய்க் கொடுக்கப்பட்ட அந்த வில், கந்த புஷ்ப தூப தீப நைவேத்யங்களால் விசேஷமாய்ப் பூஜிக்கப்படுகிறதென்"றார்கள்."

பிறகு கௌசிகர் ராமலக்ஷ்மணர்களையும் மற்ற ரிஷிகளையும் அழைத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டார். அங்குள்ள வனதேவதைகளை நோக்கி "உங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். இங்கிருந்து கங்கைக்கரையிலுள்ள இமயமலைச் சாரலுக்குப் போகிறேன்; இங்கே வந்த கார்யம் நிறைவேறிற்"றென்று அவைகளிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு, ஸித்தாச்ரமத்தை ப்ரதக்ஷிணஞ் செய்து வடக்கில் சென்றார். மற்ற ரிஷிகள் அக்னிஹோத்ர ஸாமான்களை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு போனார்கள். கௌசிகரிடத்திலுள்ள பக்தியால் அங்கிருந்த மிருகங்களும் பக்ஷிகளும் வெகு தூரம் அவருடன் போயின. அவர் அவைகளைநிறுத்தித், திரும்பிப்போகச்சொல்லி, அஸ்தமனம் வரையில் நடந்து சோணநதிக் கரையில் தங்கினார்கள். ஸ்நானம் ஸந்த்யாவந்தனம் ஜபம் அக்னிஹோத்ரம் முதலிய நித்யகர்மங்களை முடித்துக், கௌசிகரை முன்னிட்டு நதிக்கரையில் உட்கார்ந்தார்கள். ராஜபுத்ரர்கள் அவர்களை வணங்கிக் கௌசிகருக் கெதிரில் உட்கார்ந்தார்கள். அப்பொழுது ராமன் "ஸ்வாமி! வனங்களால் மிகவும் செழிப்பாய் விளங்கும் இந்தத் தேசம் யாருடையதென்று அறிய ஆவல்கொண்டிருக்கிறே"னென்றார். அந்த மஹாதபஸ்வி மற்றரிஷிகள் கேட்டுக்கொண்டிருக்க அந்தத் தேசத்தின் வரலாறு முழுவதையும் சொல்ல ஆரம்பித்தார்.

## ஸர்க்கம் 32.

### குசநாபர்

ப்ரஹ்மாவின் மனதால் உண்டாக்கப்பட்ட புத்ரர்களில் ஒருவருக்குக் குசரென்று பெயர். மற்ற ப்ரஹ்ம புத்ரர்களைவிட ஞானம் சௌர்யம் முதலிய நற்குணங்களில் மேலானவர். நாரதர் முதலியவர்களைப்போல் ப்ரஹ்மலோகத்திலிராமல், ப்ரஜைகளை ஆள விரும்பிப் பூமியில் வஸித்தபடியால் அவருக்குக் குசரென்று பெயர். மஹாதபஸ்வி; ஸகல நியமங்களையும் வ்ரதங்களையும் அநுஷ்டித்தவர்; தர்மரஹஸ்யங்களை அறிந்தவர். விதர்ப்ப ராஜ புத்ரியை மணஞ்செய்து, எவ்விதத்திலும் தன்னைப்போன்ற நான்கு புத்ரர்களைப் பெற்றார். குசாம்பர், குசநாபர், ஆதூர்த்தரஜஸ், வஸுவென்ற அவர்கள் தர்மாத்மாக்களாய், ஸத்யவான்களாய், உத்ஸாஹமுள்ளவர்களாய், தேஜஸால் ஜ்வலிப்பதைக் கண்ட பிதா, "ப்ரஜைகளை ரக்ஷியுங்கள், விசேஷ தர்மமுண்டாகு"மென்றார். அவர்களில் குசாம்பர் கௌசாம்பியையும், குசநாபர் மஹோதயத்தையும், ஆதூர்த்தரஜஸ் தர்மாரண்யத்தையும், வஸு வென்பவர் கிரிவ்ரஜத்தையும் ராஜதானிகளாய் அமைத்துக்கொண்டார்கள். சோணநதிக்கரையிலுள்ள இந்தத் தேசம் வஸுவின் ராஜ்யம். அதோ தெரியும் ஐந்து மலைகளால் இந்த ராஜதானிக்கு கிரிவ்ரஜமென்று பெயர். மகத தேசத்திலிருந்து ஓடிவரும் இந்தச்சோணவென்ற நதம் (கிழக்கிலிருந்து மேற்கே போகும் ஆறு) மலைகளுக்கு நடுவில் மாலையைப்போல் விளங்குகிறது. இதன் இருகரைகளிலுமுள்ள நிலங்கள் மிகுந்த செழிப்புள்ளவை; புண்ய க்ஷேத்ரங்கள்.

குசநாபரென்ற ராஜர்ஷி க்ருதாசியென்ற அப்ஸரஸிடத்தில் நூறு பெண்களைப் பெற்றார். அவர்கள் நிகரற்ற ரூபலாவண்யத்துடன் யௌவனமடைந்து, வஸ்த்ரங்களாலும் ஆபரணங்களாலும் புஷ்பங்களாலும் பரிமள த்ரவியங்களாலும் அலங்கரித்துக்கொண்டு, மழைகாலத்து மின்னல்களைப் போல் தோட்டங்களில் சென்று, பாடியும் ஆடியும் வாத்யங்களை வாசித்தும் ஆனந்தமாய்க் காலங் கழித்தார்கள். மேகங்களுக்கு நடுவிலுள்ள நக்ஷத்ரங்களைப் போல் ப்ரகாசிக்கும் அந்த ரூபவதிகளை ஒருநாள் ஸர்வ வ்யாபியான வாயுபகவான் கண்டு, அவர்களுடைய அழகாலும் உத்தமகுண[illegible]

னும் வசப்பட்டு "ராஜகுமாரிகளே! உங்களிடத்தில் ஆசைவைத்தேன். என்னை விவாஹம் செய்து கொள்ளுங்கள். மனுஷ்யத் தன்மையை விட்டு எனக்குப் பார்யைகளாய்த் தீர்க்காயுஸை அடையுங்கள். யௌவனம் நீடித்ததல்ல. மனுஷ்யர்களுடைய யௌவனம் அதி சீக்ரமாய்க் கழிந்துவிடும். ஆகையால் நீங்கள் தீர்க்காயுஸையும் அழிவற்ற யௌவனத்தையும் அடைந்து தேவகன்யைகளாயிருங்க"ளென்றார்.

தங்களைக் கேட்பவரின் மஹிமையும் பலமும் செய்கையும் வீர்யமும் தடையற்றவை யென்று அந்தப் பெண்களுக்குத் தெரியும். ஆனாலும் அவர் சொன்னதைக் கேட்டு, எல்லோரும் கைகொட்டிச் சிரித்துத், "தேவச்ரேஷ்ட! ஸகல பூதங்களுக்குள் ஸஞ்சரிக்கிறீர். உமது ப்ரபாவத்தை நன்றாயறிவோம். எங்களை இப்படி அவமதிக்கலாமா? நாங்கள் ஸாதாரண ஸ்த்ரீகளல்ல; குசநாபருடைய புத்ரிகள். உம்மை உமது அதிகாரத்திலிருந்து நீக்கக்கூடியவர்களென்று அறியும். ஆனால் அப்படிச் செய்தால் எங்களுடைய தபஸ் வீணாகுமென்றிருக்கிறோம். எங்களுடைய பிதா உமக்கு மிருத்யுவாகாமல் பார்த்துக்கொள்ளும், துர்ப்புத்தி பிடித்தவரே! அவரை அவமதிக்க வேண்டாம். அவர் எங்களை யாருக்குக் கொடுக்கிறாரோ அவரே எங்களுக்குப் பர்த்தா. பிதாவைத் தவிர எங்களுக்கு வேறு யஜமானனில்லை; வேறு தைவமில்லை"யென்றார்கள்.

அதைக் கேட்டு வாயுபகவான் பரம கோபங்கொண்டு, தன் தடையற்ற சக்தியை அவர்களிடத்தில் ப்ரயோகித்து, அவர்களுடைய அங்கங்களில் ப்ரவேசித்து, அவைகளை ஒடித்தார். உடனே அவர்களுடைய தேஹங்கள் குன்றி விகாரமாயின. அவர்கள் மனம் நொந்து, கர்வமழிந்து, பயம் பிடித்து, வெட்கத்தால் தலை குனிந்து, கண்ணீர்ப் பெருகக் குசநாபரிடத்திற்குச்சென்று, பூமியில் விழுந்து கோவென்றலறினார்கள். தன் உயிர்க்குயிரான பெண்கள் இப்படிக் கூனிக் குறுகிக் கோணலாய் விகாரமடைந்து தீனமாய்ப் புலம்புவதைப் பார்த்து அரசன் மனம் பதறி, "குழந்தைகளே! இதென்ன? சொல்லுங்கள். தர்மத்தை இப்படி அவமானம் செய்தவர்கள் யார்? உங்களைப் பலாத்காரம் செய்தவர்கள் யார்? அங்கங்கள் கோணலாய் ஒன்றும் சொல்லாமல் பூமியில் விழுந்து புரளுகிறீர்களே. உங்களை இப்படி அலங்கோலப் படுத்தினவன் யாரெ"ன்று கேட்டு அவர்கள் பதில் சொல்வதை ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண்டிருந்தார்.

# ஸர்க்கம் 33.

## ப்ரஹ்மதத்தர்.

குசநாபர் இப்படிச் சொல்ல, அந்தப் பெண்கள் அவருடைய பாதங்களில் தலை வைத்து நமஸ்கரித்து, "ஸ்வாமி! ஸர்வ பூதங்களி லும் ஸஞ்சரிக்கும் வாயு எங்களை விவாஹம் செய்ய விரும்பிக் கேட் டார். நாங்கள் ஸம்மதிக்காததால் எங்களைப் பலாத்காரம் செய்தார். இது அதர்மமென்பதைக் கவனிக்கவில்லை. 'நாங்கள் பிதாவிற்குக் கீழ்ப்பட்டவர்கள்; இஷ்டப்படி நடக்கக்கூடாது. எங்களிடத்தில் விருப்பமிருந்தால் எங்களுடைய பிதாவைக் கேளும். அவர் உமக்கு எங்களைக் கொடுத்தால் எங்களுக்கு ஆக்ஷேபமில்லை'யென்றோம். எங்களுடைய வார்த்தையைக் கொஞ்சங்கூட லக்ஷ்யம் செய்யாமல், அந்தப் பாபபுத்தியுள்ளவர் எங்களை இப்படி உபத்ரவித்தா"ரென்று தெரிவித்தார்கள்.

பரம தார்மிகரான குசநாபர் அதைக் கேட்டுக், "குழந்தைகளே! உங்கள் நடத்தையை மெச்சினேன். ரூப யௌவன பல பராக்ரம ஐச்வர்யங்களில் குறைவில்லாத புருஷன் ஸ்த்ரீகளை வலுவில் பிரார்த்திக்கும்பொழுது அவர்கள் உட்படாமலிருப்பது ஆச்சர்யம். மேலும், தேவச்ரேஷ்டனான வாயு பகவானே அப்படி பிரார்த்திக் கும்பொழுது அதற்கு உட்படாமலிருப்பது இன்னும் ஆச்சர்யம். தன் னைப்போல் உங்களையும் ஜனன மரணமில்லாமல் நித்ய யௌவன முள்ளவர்களாய்ச் செய்கிறேனென்று சொல்லியும் அவருக்குஉட்படா திருந்தது இன்னும் ஆச்சர்யம். நூறு பெண்கள் ஒரே மனஸாய் கலஹம் பொறாமை அஸூயையின்றி அப்படிச் செய்வது இன்னும் ஆச்சர்யம். பொறுக்கக்கூடாத அவமானத்தையும் கெடுதியையு மடைந்தும், இந்த்ராதி தேவதைகளை அழிக்கும் சக்தியிருந்தும் கோபிக்காமல், குற்றவாளியை க்ரூரமாய்த் தண்டிக்காமல், எல் லோரும் பொறுத்திருப்பது இன்னும் ஆச்சர்யம். அபூர்வமான கார் யத்தைச் செய்தீர்கள். நம்து குல தர்மத்தையும் கீர்த்தியையும் காப் பாற்றினீர்கள். ஸ்த்ரீ புருஷர்களுக்குப் பொறுமையைவிட மேலான ஆபரணமில்லை. மனுஷ்யர்கள் செய்த அபராதங்களைப் பொறுக் கவே மனம் வராது. தேவர்கள் மனிதர்களுக்குக் கெடுதிசெய்து தண்டிக்கக்கூடிய நிலைமையிலிருந்தால் அவர்களை மன்னிக்க மனம்

வருவது மிகவும் கஷ்டம். பொறுமையே தானம்; பொறுமையே யக்ஞம்; பொறுமையே ஸத்யம்; பொறுமையே கீர்த்தி; பொறுமையே தர்மம்; பொறுமையே ஜகத்தைக் காப்பாற்றுகிற"தென்று அவர்களைப் புகழ்ந்து அனுப்பி, அவர்களுக்கு விவாஹம் செய்யத் தகுந்த தேசகாலத்தையும் பர்த்தாக்களையும்பற்றி மந்த்ரிகளுடன் ஆலோசித்துக்கொண்டிருந்தார்.

அக்காலத்தில் சூளியென்ற மஹர்ஷி ப்ரஹ்மசாரியாய், பலாபேக்ஷையின்றித் தபஸ் செய்துகொண்டிருந்தார். ஊர்மிளையின் மகளான ஸோமதையென்ற கந்தர்வ ஸ்த்ரீ அவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தாள். அவர் அதற்கு உகந்து "பெண்ணே! மங்களமுண்டாகட்டும். நான் உனக்கு என்ன செய்யவேண்டு"மென, அவள், "ஸ்வாமி! தாங்கள் மஹா தபஸ்வி; ப்ரஹ்மாவிற்கு ஸமானர்; ப்ரஹ்ம தேஜஸால் ஜ்வலிக்கிறீர்கள்; தங்களைப்போன்ற தேஜஸ்வியான புத்ரனை அடைய விரும்புகிறேன். எனக்கு இதுவரையில் விவாஹமில்லை; ஒருவருடைய பார்வையுமல்ல"வென்று ப்ரார்த்தித்தாள். அவர் ப்ரஹ்மதத்தனென்ற புத்ரனை மனதால் ஸ்ருஷ்டித்து அவளுக்குக் கொடுத்தார். அவர் தேவராஜன் ஸ்வர்க்கத்தை ஆள்வதுபோல் காம்பீல்யா நகரத்தில் அரசுபுரிந்தார். அவருக்குத் தன் நூறு பெண்களையும் கன்யாதானம் செய்யத் தர்மவானுன குசநாபர் நிச்சயித்து, அவரை உபசாரத்துடன் அழைத்துத், தன் புத்ரிகளை அவருக்குப் பார்யைகளாகக் கொடுத்தார். ப்ரஹ்மதத்தர் அவர்களை விதிப்படி பாணிக்ரஹணம் செய்தார். மஹேந்த்ரனை ஒத்த ஐச்வர்யமுடைய அந்த ராஜச்ரேஷ்டர் அவர்களைத் தொட்டவுடன் தேஹவிகாரம் நீங்கி உபத்ரவமின்றி அவர்கள் அளவற்ற காந்தியுடன் விளங்கினுர்கள். வாயுவால் அவர்களுக்கு நேர்ந்த பீடை நீங்கினதாலும், ஸர்வோத்தமமான வரன் தனக்குக் கிடைத்ததாலும் குசநாபர் பரமானந்த மடைந்தார். தன் உபாத்யாயர்களுடன் ப்ரஹ்மதத்தரையும் தன் பெண்களையும் விசேஷ கௌரவத்துடன் காம்பில்யைக்கு அனுப்பினுர். ஸோமதை தன் மகனுக்குத் தகுந்தவிடத்தில் விவாஹமானதையும், தன் நாட்டுப் பெண்களின் ரூபலாவண்யத்தையும் செல்வத்தையும் குணங்களையும் நினைத்து நினைத்து அளவற்ற ஸந்தோஷமடைந்தாள். அதிப்ரீதியுடன் அவர்களை ஆலிங்கனம்செய்து அடிக்கடி தடவிக்கொடுத்து அவர்களின் பிதாவான குசநாபரைக் கொண்டாடினுள்.

# ஸர்க்கம் 34.

## விசுவாமித்ர வம்சம்.

இப்படி ப்ரஹ்மதத்தருக்குத் தன் புத்ரிகளை விவாஹஞ்செய்து கொடுத்த பிறகு குசநாபர், புத்ரனை அடையவிரும்பிப் புத்ரகாமேஷ்டி செய்தார். அவருடைய பிதா குசர் வந்து "எவ்விதத்திலும் உனக்கு ஸமமான புத்ரனுண்டாவான். தர்மாத்மாவான அந்தக் காதியால் லோகத்தில் அழியாத கீர்த்தியடைவா"யென்று ஆசீர் வதித்து ப்ரஹ்மலோகம் சென்றார். சிலகாலத்திற்குப் பிறகு குசநாபருக்குக் காதியென்ற புத்ரன் பிறந்தார். அந்தப் பரம தர்மாத்மாவே என் பிதா. குச வம்சத்தில் பிறந்ததால் கௌசிகனென்று எனக்குப் பெயர். ஸத்யவதியென்று எனக்குத் தமக்கையுண்டு. அவள் ரிசீகருக்குப் பார்யை. அரிய வ்ரதங்களின் மஹிமையாலும் பர்த்தாவிற்கு அநுகூலமாகச் செய்த பணிவிடையாலும் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போனாள். பிறகு ஸகல ப்ராணிகளின் க்ஷேமத்தை உத்தேசித்து ஹிமயமலையில் நதியாய்த் தோன்றினாள். அதின் ஜலம் புண்ய தீர்த்தம். அவளிடத்திலுள்ள பரமப்ரீதியால் அங்கே மலைத்தாழ்வரையில் வஸித்துக்கொண்டிருக்கிறேன். மஹா புண்யவதி. ஸத்யத்திலும் தர்மத்திலும் நாடின மனஸுள்ளவள், பதிவிரதாரத்னம்; அபார மஹிமையுள்ளவள். ஓர் வ்ரதத்தை அநுஷ்டிக்க அந்த நதியை விட்டு ஸித்தாச்ரமத்திற்கு வந்தேன். உன் வீர்ய மஹிமையால் என் எண்ணம் நிறைவேறிற்று. நீ கேட்டதால் இந்தத் தேச சரித்திரத்தையும் என் வம்சத்தையும் சொன்னேன்.

இரவில் விழித்துக்கொண்டிருக்க வேண்டிய முன்பாகத்தை இப்படிக் கதைகளால் கழித்தோம். இனி நித்ரைசெய்யப் போ; ஸகல மங்களங்களு முண்டாகட்டும். இதற்குமேல் விழித்துக்கொண்டிருந்தால் நாளை வழிநடப்பில் ச்ரமமுண்டாகும். அதோ பார்! மரங்கள் அசையவில்லை; மிருகங்களும் பக்ஷிகளும் தங்களிடங்களில் ஸுகமாய்த் தூங்குகின்றன. இருட்டால் திக்குகள் மூடப்பட்டிருக்கின்றன. ஸந்த்யாவேளை மெதுவாய்ப் போய்விட்டது. ஆகாசத்தில் அச்வினி முதலிய நக்ஷத்ரக் கணங்களும் ஸாதாரண நக்ஷத்ரங்களும் காந்தியுள்ள நேத்ரங்களைப்போல் தோன்றுகின்றன. சந்த்ரன் கிரணங்களால் இருட்டைப்போக்கி, ஸகலப்ராணிகளுடைய மனஸை ஸந்தோஷிக்கச்

செய்துகொண்டு உதிக்கிறான். கோட்டான் முதலிய இரவில் ஸஞ்சரிக்கும் ஜந்துக்களும், மாம்ஸத்தைப் புஜிக்கும் பயங்கரமான யக்ஷர்களும் ராக்ஷஸர்களும், ஸஞ்சரிக்கிறார்க"ளென்றார். மற்ற ரிஷிகள் "நல்லது, நல்லது; குசிக வம்சம் எப்பொழுதும் தர்மத்திலேயே நோக்கமுள்ளது. அதில் பிறந்த புருஷ ச்ரேஷ்டர்கள் மஹாத்மாக்கள்; ப்ரஹ்மாவிற்கு ஸமானர்கள். அவர்களில் விச்வாமித்ரரென்ற தாங்கள் மஹாகீர்த்திசாலி; கௌசிகியென்ற புண்யநதி தங்களுடைய குலதீப"மென்று பலவிதமாய்க் கொண்டாடினார்கள். பிறகு ஸூர்யன் அஸ்தமிப்பதுபோல் கௌசிகர் நித்ரைசெய்தார். ராஜபுத்ரர்களும் அவரைக் கொண்டாடித், தாங்கள் கேட்ட புண்ய கதையால் ஆச்சர்யமடைந்து தூங்கினார்கள்.

---

## ஸர்க்கம் 35.

### கங்கை

---

அவதாரிகை

தன் திருவடிகளிலிருந்து உண்டான கங்கையின் மஹிமையை ராமன் லோகத்தாருக்குத் தெரிவிக்கிறார்.

---

அன்றிரவில் கௌசிகர் ரிஷிகளுடன் அந்த நதிக்கரையில் தங்கிக், காலையில் ராமனை அழைத்து, "ராத்ரி கழிந்தது. ஸந்த்யாகாலத்தின் முன்பாகம் நடக்கிறது, எழுந்திரு. ப்ரயாணத்திற்கு ஸித்தமாக வேண்டு"மென்றார். உடனே ராஜபுத்ரர்கள் எழுந்து, நித்ய கர்மங்களை முடித்து, "ஸ்வாமி! இந்த நதியின் ஜலம் மிகவும் ரமணீயமாய் அதிக ஆழமின்றி மணல் திட்டுகளால் விளங்குகிறது. இதைத் தாண்ட ஓடம் வேண்டியதில்லை. எந்த வழியாகப் போகவேண்டு"மென்றார். மஹர்ஷி "அதோ ரிஷிகள் போகும் மார்க்கமே என்னால் குறிக்கப்பட்ட"தென்றார். எல்லோராலும் அந்த நதியைத் தாண்டி வெகு தூரம் நடந்து, நடுப்பகலில், தபஸ்விகளால் நிறைந்த கங்கைக் கரைக்கு வந்து, புண்ய நதியைத் தர்சித்து ஸந்தோஷித்து, அந்தப் பாபநாசகரமான சுப ஜலத்தில் ஸ்நாநஞ் செய்து, தேவர்ஷி பித்ரு தர்ப்பணங்களை விதிப்படி செய்து, பஞ்சமஹாயக்ஞத்தையும் அக்னிஹோத்ரத்தையும் முடித்து, அம்ருதத்தைப்போன்ற ஹவிஸ்ஸைப்

புஜித்தார்கள். அன்னம் முதலிய நீர்ப்பறவைகளால் நிறைந்த கங்கைக்கரையில் சுத்தமான இடத்தில் கௌசிகரைச் சூழ்ந்து எல்லோரும் உட்கார்ந்தார்கள். அப்பொழுது ராமன் அவரை வணங்கி, "ஸ்வாமி! இந்தக் கங்கை எப்படி உண்டாயிற்று? த்ரிபதகாவென்று இதற்கு எப்படிப் பெயர் கிடைத்தது? மூவுலகிலும் வ்யாபித்து எப்படி ஸமுத்ரத்தை அடைந்தது? கிருபை செய்து சொல்லவேண்டு"மென்றார்.

கௌசிகர் மகிழ்ந்து "ராம! பர்வதராஜனும் ஸகல தாதுகளுக்கும் உண்டாகும் இடமுமான ஹிமவான், மேருவின் புத்ரியான மனோரமையிடத்தில் கங்கை உமையென்ற நிகரற்ற பெண்களைப் பெற்றார். அவர்கள் ரூபலாவண்யத்தாலும் நற்குணங்களாலும் யாவரையும் மிஞ்சினவர்கள். தேவர்கள் தங்களுடைய ஸ்நாந பானம் ஆராதனை முதலிய கார்யங்களுக்கும் தங்களுக்கு ஒரு ஸேனாபதி உண்டாவதற்கும் மூத்த பெண்ணான கங்கையைக் கொடுக்கும்படி ஹிமவானை வேண்டினார்கள். லோகங்களின் க்ஷேமத்தை உத்தேசித்தும், கேட்பவருக்கு இல்லையென்று சொல்லக்கூடாதென்ற தர்மத்தாலும், அவர் லோகங்களைப் பரிசுத்தம் செய்யக்கூடியவளும் எவ்விடத்திலும் இஷ்டப்படி போகக்கூடியவளுமான கங்கையை அவர்களுடன் அனுப்பினார். லோகோபகார கார்யம் முடிந்ததென்று தேவர்கள் ஸந்தோஷித்து அவளை ஸ்வர்க்கத்திற்கு அழைத்துப் போனார்கள். இளையவள் பரமசிவனைக் கணவனாய் அடைய விரும்பிக் கடுந்தபஸால் அவரை ஸந்தோஷப் படுத்தினாள். ஹிமவான் அவளைப் புருஷோத்தமனான மஹாதேவனுக்கு விவாஹஞ் செய்வித்தார். அவள் ஸகல லோகங்களாலும் கொண்டாடப் பெற்றவள். சங்கரன் எவ்விதத்திலும் அவளுக்குத் தகுந்தவர். பர்வதராஜனுடைய இவ்விரண்டு குமாரிகளும் ஸகல ஜீவகோடிகளின் பூஜைக்குப் பாத்ரமானவர்கள்.

ராம! கங்கையின் உத்பத்தியையும் அவள் ஸ்வர்க்கலோகத்திற்குப் போனதையும் நீ கேட்டபடி சொன்னேன். இந்தத் தேவநதி, தேவலோகத்திற்குப் போய் ஸகல பாபங்களையும் போக்கிப் புண்யத்தை அருளினா"ளென்று சொல்லி முடித்தார்.



## ஸர்க்கம் 36.

## ஸ்கந்த ஜனனம்.

ராம லக்ஷ்மணர்கள் அந்தப் புண்ய சரித்ரத்தை மிகவும் கொண்டாடி, "முனிச்ரேஷ்ட! தர்மத்தைக் கொடுக்கும் இந்த உபாக்யானத்தைத் தாங்கள் தயவுசெய்து சொன்னீர்கள். ஆனால் பர்வதராஜனுடைய மூத்த புத்ரியின் விருத்தாந்தத்தை விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டும். த்ரிபதகா வென்ற பெயர்பெற்ற கங்கை, பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகங்களுக்குச் சென்ற காரணமென்ன? அவள் பூமிக்கு எப்படி வந்தாள்? எந்தச் செய்கைகளால் ஸகல நதிகளுக்கும் ச்ரேஷ்டமானாள்" என்று கேட்டார்கள். அப்பொழுது கௌசிகர் அந்தச் சரித்ரம் முழுவதையும் ரிஷிகளுக்கும் ராம லக்ஷ்மணர்களுக்கும் விஸ்தாரமாய்ச் சொன்னார்.

முன்காலத்தில் நீலகண்டர் பார்வதியை விவாஹஞ்செய்து, மஹா தபஸ்வியானாலும் அவளைப் பார்த்து ஆசைகொண்டு, அவளிடத்தில் புத்ரனை உண்டுபண்ண நினைத்தார். நூறு தேவ வர்ஷங்களாயும் புத்ரோத்பத்திக்குக் காரண முண்டாகவில்லை. ப்ரஹ்மாதி தேவர்கள் அதைக் கண்டு பயந்து, "இவ்வளவு காலத்திற்குப் பிறகு பார்வதியிடத்தில் புத்ரனுண்டானால் அதை யாரால் தாங்கமுடியு"மென்று கவலைகொண்டு, சங்கரனை நமஸ்கரித்து, "மஹாதேவ! லோகங்களுக்கு எப்பொழுதும் மங்களத்தைச் செய்வதிலேயே கவலையுள்ள சிவ! தேவர்கள் தங்களை நமஸ்கரிக்கிறோம். கிருபை செய்யவேண்டும். தங்களுடைய தேஜஸினின்றுண்டாகும் புத்ரனை லோகங்கள் தாங்குமா? அவைகளுக்குப் பரம க்ஷேமத்தை விரும்பும் தாங்கள், பார்வதியுடன் வேதங்களால் கொண்டாடப்பட்ட தபஸைச் செய்யவேண்டும். தேவியிடத்தில் புத்ரனை உண்டாக்கக்கூடாது. தங்களுடைய தேஜஸை தேஜோமயமான சரீரத்தில் அடக்கிக்கொள்ளவேண்டும். வெளியில் விட்டால் லோகங்கள் நாசமடையும். அப்படிச் செய்வது தங்களுக்குத் தர்ம"மென்று வேண்டிக் கொண்டார்கள்.

ஸதாசிவன் அவர்களுடைய ப்ரார்த்தனைக்கிணங்கி "அப்படியே செய்கிறேன்; நானும் உமையும் இதுவரையில் கலங்கி வெளிப்

படாத எங்களுடைய தேஜஸை சரீரங்களில் தரிக்கிறோம். ஸகல லோகங்களும் க்ஷேமத்தை அடையட்டும். ஆனால் இதுவரையில் ஸ்தானத்தை விட்டு நழுவின தேஜஸைத் தரிப்பதற்கு எவரை ஏற்படுத்துகிறீர்க” ளென்றார். அதற்குத் தேவர்கள், “ஸகலத்தையும் தரிக்கும் பூமியைத் தங்களுடைய தேஜஸைத் தரிக்கும்படி கேட்டுக் கொண்டிருக்கிறோ” மென்றார்கள். பிறகு சங்கரன் தன் தேஜஸைப் பூமியில் விட்டார். அதனால் காடு மலை நதி ஏரி நாடு நகரங்களுள்ள பூமி வ்யாபிக்கப்பட்டது. தேவர்கள் அக்னியைப் பார்த்துத், “தேவ! பூமி ஒருவளே இதைத் தாங்க முடியாதென்று தோன்றுகிறது; சீக்ரத்தில் வெடித்துப் போவாள். ஆகையால் நீயும் வாயுவும் ருத்ரனுடைய தேஜஸில் ப்ரவேசியுங்க”ளென்று அடிக்கடி ப்ரார்த்தித்து, அவருடைய பயத்தைத் தீர்த்து ஸம்மதிக்கச் செய்தார்கள். அக்னியால் வ்யாபிக்கப்பட்ட அந்த தேஜஸ் வெண்மையான பர்வதமாயிற்று. வெகுகாலங் கழித்து அதில் ஸூர்யனைப் போலவும் அக்னியைப் போலவும் காந்தியுள்ள ஓர் நாணற்காடு உண்டாயிற்று. அங்கே மஹாதேஜஸ்வியான ஸ்கந்தர் அக்னிக்கும் கிருத்திகைகளுக்கும் புத்ரனாய் அவதரித்தார். இப்படித் தங்களுடைய கார்யம் நிறைவேறினதால் தேவர்கள் ஸந்தோஷமடைந்து, பார்வதி பரமேசுவரர்களின் எண்ணத்திற்கு விக்னஞ் செய்ததால் அவர்களுக்குண்டான கோபத்தைத் தணிப்பதற்காக ஸ்தோத்ரஞ் செய்தார்கள். பார்வதி அதனால் சாந்தமடையாமல் “நீங்கள் எனக்கு ப்ரியமில்லாத கார்யத்தைச் செய்தபடியால் அதன் பலத்தை அனுபவியுங்க”ளென்று, ஜலத்தை எடுத்துக் கடுங்கோபத்தால் கண்கள் சிவக்க, “நான் புத்ரனை அடைவதற்காகச் செய்த யத்னத்தை நீங்கள் கெடுத்தபடியால், இன்றுமுதல் உங்களுடைய பத்னிகளிடத்தில் புத்ரர்களை உண்டாக்கமாட்டீர்கள். இன்றுமுதல் உங்களுடைய பார்யைகளுக்குப் புத்ரபாக்ய மில்லாமற் போகட்டு”மென்று சபித்தாள். பிறகு பூமிதேவியைப் பார்த்து, “நீயும் இந்தக் கார்யத்திற்கு ஸஹாயமாயிருந்தபடியால் அநேக ரூபங்களை அடையக் கடவாய்; அநேகர்களுக்குப் பார்யையாகக் கடவாய். எனக்குப் புத்ரனுண்டாவதைத் தடுத்ததால் என் கோபத்திற்குப் பாத்ரமாய்ப், புத்ரனாலுண்டாகும் ப்ரீதியை அடையாமலிருக்கக் கடவா”யென்று சபித்தாள்.

இப்படிச் சாபத்தால் வெட்கமடைந்து வருந்தும் தேவர்களைப் பார்த்து ருத்ரன் ஸஹிக்காமல், ஹிமயமலையின் வடமேற்கு பாகத்தில் சென்று, பார்வதியுடன் கடுமையான தபஸ் செய்து கொண்டிருந்தார். ராம! பர்வதராஜனுடைய இளைய புத்ரியான

பார்வதியின் விருத்தாந்தத்தை விஸ்தாரமாய்ச் சொன்னேன். இது இனி சொல்லப்போகும் கங்கையின் மஹாத்மிய சரித்ரத்திற்கு உபயோகமானது. அதைச் சொல்லுகிறேன் கேள்.

## ஸர்க்கம் 37.

## ஸ்கந்த ஜனனம்.

(தொடர்ச்சி)

இப்படிச் சங்கரன் தேவர்களுக்கு ஸேனாதிபதியாகாமல் கேவலம் தபஸில் மனதைச் செலுத்தினதைக் கண்டு, இந்த்ராதி தேவர்கள் ப்ரஹ்மாவை நமஸ்கரித்து, "எங்களுக்கு ஸேனாபதியாயிருக்கத் தாங்கள் அருளின மஹாதேவன், எங்களைக் கவனிக்காமல் சத்ருக்களினின்று ரக்ஷிக்காமல் ஹிமபமலைச்சாரலில் கடுந்தவம் செய்கிறார். ஆகையால் இனிச் செய்யவேண்டியதை ஆலோசிக்கவேண்டும். அவரையாவது வேண்டி அழைத்துவாருங்கள்; அல்லது வேறொருவரையாவது ஏற்படுத்துங்கள். லோகங்களுக்கு ஹிதத்தைச் செய்வதே தங்களுடைய கவலையல்லவா? எல்லாமறிந்த தாங்களே எங்களுக்குக் கதியெ"ன்று ப்ரார்த்தித்தார்கள்.

ப்ரஹ்மா மதுரமான வார்த்தைகளால் தேவர்களை ஸமாதானஞ் செய்து, "உங்களுக்குப் பார்யைகளிடத்தில் ஸந்ததி உண்டாகாதென்று பார்வதி சபித்ததை மாற்றமுடியாது. அது அப்படியே நடக்கும். இந்த ஆகாச கங்கையிடத்தில் அக்னியாலுண்டாகும் புத்ரனே உங்களுக்கு ஸேனாபதியாவான். பார்வதிக்குத் தமக்கையாகையால் அவள் அந்தப் புத்ரனைத் தரித்து ப்ரியத்துடன் வளர்ப்பாள். அதற்கு உமையும் ஸந்தோஷத்துடன் ஸம்மதிப்பாளெ"ன்றார். தேவர்கள் பரம ப்ரீதியுடன் ப்ரஹ்மாவைப் பூஜித்து, கைலாஸ பர்வதத்திற்குப் போய் அக்னியை அழைத்து "இந்த தேவகார்யத்தை நீயே முடிக்கவேண்டும். பரமசிவனுடைய தேஜஸைத் தாங்கி கங்கையிடத்தில் வி"டென்றார்கள். அக்னி அதற்கிணங்கிக் கங்கையைப் பார்த்து "நீ இந்தக் கர்ப்பத்தைத் தரிக்கவேண்டும். இது தேவர்களுக்கு ப்ரியமான கார்ய"மென்றான். அவள் ஸம்மதித்துத் திவ்யமான ஸ்த்ரீ ரூபத்தைத் தரித்தாள். அதைக் கண்ட அவன் புத்திமயங்கித் தன் ஸகல அவயவங்களிலிருந்தும் அவளுடைய ஸகல அவயவங்களில் ருத்ர தேஜஸை விட்டான். அதினால் கங்கையின் ஸகல உபநதிகளும் நிறைந்தன. ஆனால் அவள் அதைத் தரிக்க முடியாமல் கொளுத்தப்

பட்டு மிகவும் வருந்தித் "தேவ ச்ரேஷ்டா! தேவ புரோஹிதா! அக்னி தேவா! உன்னிடத்திலிருந்து பெற்ற தேஜஸை என்னால் தாங்க முடியா"தென்று முறையிட்டாள். "அப்படியானால் ஹிமயமலையின் அடிவாரத்தில் அந்தக் கர்ப்பத்தை விடுவா"யென்று அக்னி சொன்னான். உடனே அவள் ஸகல நதிகளிலிருந்தும் அந்தக் கர்ப்பத்தை இழுத்து அக்னியால் எரிக்கப்பட்டு வெண்மையான மலையாயிருக்கும் ருத்ரனுடைய தேஜஸில் விட்டாள். அவளுடைய தேகத்திலிருந்து வெளிப்பட்ட ரக்தம், உருக்கி ஓடவிட்ட ஜாம்பூநதமென்ற தங்கமாயும் வெள்ளியாயும், காரமான பாகங்கள் கறுத்த இரும்பாயும் தாம்ரமாயும், அழுக்கு வஸ்துக்கள் தகரமாயும் ஈயமாயும் பரவி லோகத்தில் பல தாதுக்களாய் வழங்கின. அது முதல் அக்னியைப் போல் ஒளியுள்ள தங்கத்திற்கு ஜாதரூபமென்று பெயராயிற்று. மரம் செடி கொடி புதர் புல் பூண்டு யாவும் தங்கமாயிற்று. இப்படி அவதரித்த அந்தக் கர்ப்பத்தை இந்த்ராதி தேவர்கள் கண்டு மகிழ்ந்து, க்ருத்திகைகளைப் பால் கொடுக்க நியமித்தார்கள். "இவன் எங்கள் புத்ரனுக்கடவா"னென்று அவர்கள் தேவர்களிடத்தில் ஏற்பாடு செய்து கொண்டு பால்கொடுத்து வளர்த்து வந்தார்கள். அவர்கள் "இந்தக் குழந்தை உங்களால் வளர்க்கப்பட்டபடியால் கிருத்திகைகளின் புத்ரன் கார்த்திகேயனென்று லோகங்களில் போற்றப்படுவார். ஸந்தேஹமில்லை" யென்றார்கள். பிறகு அந்த தாய்கள் கர்ப்பமலங்களுடன் பிறந்த அந்தக் குழந்தைக்கு ஸ்நானஞ் செய்வித்தார்கள். அது அக்னியைப்போல் நிகரற்ற காந்தியுடன் விளங்கிற்று. கர்ப்பத்திலிருந்து விழுந்ததால் ஸ்கந்தரென்றும், கிருத்திகைகளால் வளர்க்கப்பட்டதால் கார்த்திகேயரென்றும் அதற்குப் பெயரிட்டார்கள். அப்பொழுது அந்த ஆறு கிருத்திகைகளுக்கும் பாலுண்டாயிற்று. அந்தக் குழந்தை ஆறு முகங்களை எடுத்துக்கொண்டு அதைக் குடித்தது. ஒரே நாளில் திவ்ய புருஷனாய் வளர்ந்து தன் வீர்யத்தால் தைத்யஸைன்யங்களை ஜயித்தது. பிறகு அக்னி முதலிய தேவர்கள் அவரைத் தங்களுக்கு ஸேனாபதியாய் அபிஷேகஞ் செய்தார்கள்.

"ராம! நீ கேட்டபடி கங்கையின் வரலாற்றையும் ஸ்கந்தருடைய பிறப்பையும் விஸ்தாரமாய்ச் சொன்னேன். இந்தப் புண்ய சரித்ரத்தைப் பக்தியுடன் கேட்கிறவனும், குமாரஸ்வாமியிடத்தில் பக்தி வைப்பவனும், இவ்வுலகில் புத்ர பௌத்ரர்களுடன் ஸுகமாய் வெகு காலம் வஸித்து, முடிவில் ஸ்கந்தருடைய லோகத்தை அடைவார்க"ளென்றார்.

## ஸர்க்கம் 38.

### ஸகரன்.

ஆகாசத்தில் கங்கை ஸஞ்சரித்ததனைத் தெரிவித்து அவள் மனுஷ்ய லோகத்தில் வந்ததை கௌசிகர் சொல்ல ஆரம்பித்தார். "ராம! முன் காலத்தில் ஸகரன் அயோத்யையில் ஆண்டான். மஹா சூரன், தர்மாத்மா, வெகுகாலம் புத்ரனில்லாமல் வருத்தமடைந்தான். விதர்ப்ப ராஜகுமாரியான கேசினி அவனுடைய மூத்த பார்யை; தர்மபுத்தியுள்ளவள்; ஸத்யம் பேசுகிறவள். காச்யபருடைய பெண்ணான ஸுமதி இளைய பார்யை; அழகில் நிகரற்றவள். ஹிமயமலைச் சாரலில் பிருகுப்ரஸ்ரவணமென்ற புண்ய ஸ்தலத்தில் ஸகரன் பார்யைகளுடன் புத்ரனுக்காகத் தவஞ் செய்தான். நூறு வர்ஷங்களுக்குப் பிறகு பிருகுமுனி அவனுடைய தபஸை மெச்சிப் "புத்ரோத்பத்திக்கு விக்னமான பாபங்கள் விலகின. உத்தம புத்ரர்களையும் நிகரற்ற கீர்த்தியையும் அடைவாய். உன் பார்யைகளில் ஒருத்திக்கு உன் வம்சத்தை விருத்திசெய்யும் ஒரே புத்ரன் பிறப்பான். மற்றொருத்திக்கு அறுபதாயிரம் புத்ரர்கள் பிறப்பார்க" ளென்றார். அவர் வார்த்தை பொய்யாகுமா? ராஜ குமாரிகள் அவரைப் பணிந்து கைகூப்பிப் பரம ப்ரியத்துடன் "ஸ்வாமி! எங்களில் யாருக்கு ஒரே புத்ரன் பிறப்பான்? யாருக்குப் பலர் பிறப்பார்கள்? தங்களுடைய அனுக்ரஹம் நிஜமாகட்டும். அறிய விரும்புகிறோ"மென்றார்கள். பிருகு பரம தார்மிகரானதால் "உங்களிஷ்டப்படி செய்கிறேன். இதில் ஒரு நியமமுமில்லை. வம்சத்தை விருத்திசெய்யும் ஒரே புத்ரனாவது, பலம் பராக்ரமம் கீர்த்தி எல்லையற்ற உத்ஸாஹம் பொருந்தின பல புத்ரர்களாவது யாருக்கு வேண்டு"மென்றார். கேசினி ஒரே புத்ரனையும், ஸுமதி பலரையும் ப்ரார்த்தித்தார்கள். பிறகு அரசனும் பார்யைகளும் பிருகுவைப் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து, உத்திரவுபெற்று அயோத்யைக்கு வந்தார்கள். கேசினிக்கு அஸமஞ்சனென்ற ஒரு புத்ரனும், ஸுமதிக்கு வட்டமான மாம்ஸபிண்டமும் பிறந்தன. அந்த பிண்டத்தைப் பிளந்துபார்க்கையில் அறுபதாயிரம் புத்ரர்கள் வெளியில் வந்தார்கள். தாதிகள் அவர்களை நெய்க்குடங்களில் வைத்து வளர்க்க, அவர்கள் யௌவன [illegible]ந்தன. அழகிலும் பல பராக்ரமத்திலும் நிகரற்று விளங்கி

மூத்தவனான அஸமஞ்சஸ் நகரத்திலுள்ள குழந்தைகளைப் பிடித்து ஸரயூ ஜலத்தில் போட்டு அவர்கள் முழுகும்பொழுது படும் உபத்ரவங்களைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தான். இப்படி ஜனங்களுக்குக் கெடுதிசெய்து ஸாதுக்களை உபத்ரவிக்கும் அந்தப் பாபியை ஸகரன் ராஜ்யத்திலிருந்து துரத்திவிட்டான். (இவன் மஹா யோகி. லோக வாழ்க்கையை விலக்குவதற்காக இப்படி வேஷம் போட்டான். பிறகு காணாமற்போன குழந்தைகளைப் ...ழுக்கச்செய்தான்). அவனுடைய புத்ரனான அம்சுமான் எல்...க்கும் ப்ரியனாய் எல்லோரிடத்திலும் ப்ரியமாய்ப் பேசுகிறவ...யிருந்தான். வெகுகாலம் கழித்து ஸகரன் யாகஞ்செய்ய ...ம்பி, உபாத்யாயர்களையும் ரித்விக்குகளையும் முன்னிட்டு அச்வமேதத்தை ஆரம்பித்தா''னென்றார்.

---

## ஸர்க்கம் 39.

### ஸகரனுடைய யாகம்.

ப்ரஹ்மதேஜஸால் அக்னியைப்போல் ஜ்வலிக்கும் விசுவாமித்ரர் இப்படிச் சொல்ல, ராமன் வெகு ஸந்தோஷத்துடன் "ஸ்வாமி! இதை விஸ்தாரமாய்க் கேட்க விரும்புகிறேன். என் முன்னோரான ஸகரன் யாகஞ் செய்த விதத்தைச் சொல்லவேண்டு''மென்றான். நாம் சொல்லப்போவதை இவர் எவ்வளவு ஆவலுடன் கேட்கிறார். "ஒன்றுந் தெரியாதவரைப்போல் காட்டுகிறாரே''ன்று சிரித்துக் கொண்டு, முனிவர் "ராம! கேள். ஸகரனுடைய சரித்ரத்தை விஸ்தாரமாய்ச்சொல்லுகிறேன். சங்கரனுக்கு மாமனாரான பர்வதராஜனுமான ஹிமவானும் அதற்குத்தெற்கிலுள்ள ... டையின்றி ஒன்றை யொன்று பார்த்துக்கொண்... பகளுக்கு நடுவிலுள்ள தேசம் யக்ஞங்களை ... பூமி. அங்கே ஸகரன் யக்ஞம் செய்தான். அம்... ற மஹாரதன் யாகக் குதிரையைக் காப்பாற்ற நியமிக்கப்பட்டான். உக்ய தினத்தில் இந்த்ரன் ராக்ஷஸ ரூபத்துடன் அதைக் கொண்டுபோனான். ரித்விக்குகள் "அரசனே! இந்தத் தினத்தில் யாகக் குதிரை காணாமற் போயிற்றே. அதைத் திருடினவனைக் கொன்று குதிரையைக் கொண்டுவர வேண்டும். யாகத்தில் இவ்விதமான அபராதம் நேர்ந்தால் நம்மெல்லோர்க்கும் கெடுதியுண்டாகும், தகுந்த ஏற்பாடு செய்யு''மென்றார்கள். ஸகரன் அறுபதாயிரம் புத்ரர்களை

...க் "குழந்தைகளே! ஞானத்திலும் ஆசாரத்திலும் தந்திரத்திலும் மேலானவர்களே இந்த யாகத்தை நடத்துகிறார்கள். ரக்ஷோக்ன முதலிய மந்த்ரங்கள் விதிப்படி ஜபிக்கப்படுவதால் ராக்ஷஸர்கள் இங்கே வர நியாயமில்லை. ஆகையால் இந்தப் பூமியில் ஓரிடம் பாக்கியின்றி தேடுங்கள். ஒவ்வொரு யோஜனையையும் ஜாக்ரதையாய்த் தேடிப் பாருங்கள். அப்படியும் காணவிட்டால் குதிரையும் திருடனும கிடைக்கும்வரையில் பூமியை வெட்டிப்பாருங்கள். [illegible] யாகதீக்ஷை பெற்றிருப்பதால் உங்களுடன் வர [illegible]யாது. [illegible] யைக் கொண்டுவரும் வரையில் நானும் அம்சுமானும் நீக்கி[illegible] இங்கே இருக்கிறோம், போய்வாருங்க"ளென்றார்.

அந்த ஸகர புத்ரர்கள் பிதாவின் உத்தரவுப்படி ஒவ் யோஜனையாய் பூமியைத் தேடினார்கள். குதிரையைக் [illegible] வில்லை. வஜ்ரம்போன்ற நகங்களாலும் இடிகளைப் போன்ற சூலங்களாலும் பயங்கரமான கலப்பைகளாலும் பூமியைப் பிளந் தார்கள். அப்பொழுது அவர்களால் கொல்லப்பட்ட நாகர் களும் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் மற்ற ப்ராணிகளும் பெருங் கூச்சலிட்டார்கள். இந்த ஜம்பூத்வீபத்தை இப்படி அறுபதா யிரம் யோஜனை தூரம் ரஸாதலம் வரையில் வெட்டிப் பார்த்தார் கள். தேவ கந்தர்வ அஸுர பன்ன யக்ஷகணங்கள் நடுங்கிப் பயந்து, இதென்ன விபரீதமென்று வாடின முகத்துடன் ப்ரஹ்மாவிடத் திற்குப் போய் "ஸ்வாமி! ஸகரபுத்ரர்கள் பூமியை வெட்டிப் பிளக் கிறார்கள். ரஸாதலத்திலுள்ள பல மஹாத்மாக்களைக் கொல்லு கிறார்கள். யக்ஞத்தைக் கெடுத்தவன் இவனே; குதிரையைக் கொண்டுபோனவன் இவனேயென்று எல்லா ஜந்துக்களையும் அழிக் கிறார்க"ளென்று முறையிட்டார் ள்.

## ஸர்க்கம் 40.

## ஸகரபுத்ரர்கள் அழிக்கப்பட்டது.

---

ஒப்போன்ற ஸகரபுத்ரர்களின் பலத்தாலும் கோபத்தாலும் ... ... இங்கும் தேவர்களை ப்ரஹ்மா ஸமாதானஞ் செய்து "இந்த ... ...கை விருத்தடித்த வாஸுதேவனுன பரமபுருஷன் ... ...யாய் இதை ரக்ஷித்து வருகிறார். அவருடைய ...வி ஸகர புத்ரர்களை எரிக்கும். பூமி இப்படி வெட்டப் ...ம் ஸகர புத்ரர்கள் அல்பாயுஸாய் அழிவதும் ஒவ்வொரு ...திலும் நடக்க வேண்டிய விஷயங்களை"யென்றார். தேவர் ...அதைக் கேட்டு ஆறுதலடைந்து திரும்பிச் சென்றார்கள்.

ஸகரபுத்ரர்கள் பூமியைப் பிளக்கும் சப்தம் இடிவிழுவது போல் கேட்கப்பட்டது. அப்படியும் யாகக் குதிரையைக் காணமல் அவர்கள் அரசனிடத்தில் வந்து, "ஸ்வாமி! பூமியில் ஓரிடம் விடாமல் தேடினோம், வெட்டிப் பார்த்தோம். தேவ தானவ ராக்ஷஸ பிசாச உரக கின்னர கணங்கள் முதலிய மஹா பலசாலிகளை நாசம் செய்தோம். குதிரையையாவது அதைக் கொண்டுபோனவனை யாவது காணவில்லை. இனி என்ன செய்யட்டு"மென்றார்கள் ஸகரன் வெகு கோபங்கொண்டு, "இன்னும் வெட்டுங்கள், இன்னும் தேடுங்கள். குதிரையையும் அதைக் கொண்டுபோனவனையும் எப்படியாவது கண்டுபிடித்து வாருங்க"ளென்று கட்டளையிட்டான்.

அவர்கள் ரஸாதலத்திலிருந்து வெட்டிக்கொண்டே போனார்கள். அங்கே விரூபாக்ஷனென்ற திக்கஜம் பர்வதத்தைப்போல் பூமியையும் அதிலுள்ள மலை ந... முதலியவைகளையும் தாங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். ...ற்றுப் ...காலங்களில் ச்ரமத்தைப் போக்க அது தலையை அசைக்கும் பொழுது பூகம்பம் உண்டாகிறது. அதை ப்ரதக்ஷிணஞ் ... பூஜித்து அவர்கள் அப்பால் வெட்டிக் கொண்டே போகையில் ...திக்கில் மஹா பத்மமென்ற திக்கஜம் பூமியைத் தாங்கிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். அதை ப்ரதக்ஷிணஞ் செய்து பூஜித்து, மேற்கு திக்கில் வெட்டிக்கொண்டே போகையில் ஸௌமனஸமென்ற திக்கஜம் பெரிய மலை... பூமியைத் தாங்கிக்கொண்டு நிற்பதைக் கண்டார்கள்.

ப்ரதக்ஷிணஞ் செய்து க்ஷேமம் விசாரித்து அப்பால் வடக்கே வெட்டிக்கொண்டு போகையில் பத்ரமென்ற திக்கஜம் வெள்ளி மலையைப் போல் பூமியைத் தாங்கிக்கொண்டு நிற்பதைக் கண்டார்கள். அதையும் தடவிக்கொடுத்து ப்ரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து வட கிழக்காய் வெகு ரோஷத்துடன் வெட்டிக் கொண்டு போகையில் புராண புருஷனை கபில வாஸுதேவரையும் அவருக் கருகில் யாகக்குதிரை மே[illegible]டார்கள். எல்லையற்ற ஆனந்தமடை[illegible]ர் யாகக் குதிரையைத் திருடினவனை [illegible] நிச்சயித்துக், கோபத்தால் கண்கள் சிவந்து மண்வெட்டி கலப்பை பாறை மலைமுதலியவைகளை எடுத்துக்கொண்டு "துஷ்டா, நில் நில். எங்களுடைய யாகக் குதிரையைத் திருடத் துணிந்தாயல்லவா? புத்தியற்றவனே! உன்னைக் கொல்ல வந்திருப்பவர்கள் யார் தெரியுமா? அயோத்யா பதியின் பராக்ரமமுள்ள புத்ரர்க"ளென்று கர்ஜித்துக் கொண்டு ஓடி வந்தார்கள். அதைக் கேட்ட கபிலபகவான் வெகு கோபங்கொண்டு ஹூங்காரஞ் செய்தார். அவருடைய அளவற்ற மஹிமையால் அந்த அறுபதாயிரம் ஸகர புத்ரர்களும் உடனே எரிக்கப்பட்டு சாம்பலானார்கள்.

---

## ஸர்க்கம் 41.

## அம்சுமான்.

தன் புத்ரர்கள் போய் வெகுகாலமாயும் திரும்பி வராததைக் கண்டு ஸகரன் மஹாதேஜஸ்வியான பேரனை அழைத்துக் "குழந்தாய்! நீ மஹாசூரன், லௌகிக வைதிக வித்யைகளில் நிபுணன், தேஜஸில் என் முன்னோர்களைப்போன்றவன். யாகக் குதிரையைத் [illegible] கப்பன்களையும் கண்டுபிடித்து வா. [illegible] ப்ராணிகள் மஹா பலசாலிகள். [illegible] வயகங்களுட ன் போ. பூஜிக்கத்தகுந்த [illegible] களை நமஸ்காரஞ் செய்து, காரியத்தை முடித்து வா. யக்ஞம் உன்னால் நிறைவேற வேண்டு"மென்றார். அவருடைய உத்திரவுப்படி அம்சுமான் ஆயுதபாணியாய் ஸகர புத்ரர்கள் வெட்டின வழியாய்ப் பூமிக்குள் அதிவேகமாய்ச் சென்றார். அங்கே தேவ தானவ ராக்ஷஸ பிசாச பதக உரக கணங்களால் பூஜிக்கப்படும் திக்கஜத்தைக் கண்டார். அதை ப்ர

தக்ஷிணஞ் செய்து க்ஷேமம் விசாரித்து "என் சிறிய தகப்பன்களெங்கே? யாகக் குதிரையை யார் கொண்டுபோனார்க"ளென்று கேட்டார். அது, "அஸமஞ்சஸின் புத்ர! உன் கார்யம் நிறைவேறியாகக் குதிரையுடன் சீக்ரமாய்த் திரும்பிவா"வென்றது. மற்ற திக்கஜங்களையும் கண்டு இப்படிக் கேட்ட பொழுது அவைகளும் "குதிரையுடன் திரும்பிப் போவா"யென்றன. பிறகு அதிவேகமாய்ப் போ... ...ர்கள் எரிக்கப்பட்டு சாம்பல் மேடுகளா... ...க்கம் தாங்காமல் கோவென்று கதறியபடி... ...ஸமீபத்தில் மேய்ந்து கொண்டிருந்தது. அந்த ராஜபுத்ரர்களுக்கு ஜல தர்ப்பணம் செய்ய விரும்பிச் சுற்றிப்பார்க்கையில் ஓரிடத்திலும் ஜலத்தைக் காணவில்லை. அப்பொழுது அங்கே தன் பிதாவிற்கு மாமனும், அரிஷ்டநேமியின் புத்ரனும், வேகத்தில் வாயுவைப் போன்றவருமான கருடன் நிற்பதைக் கண்டார். அவர் "குழந்தாய்! வருத்தப்படாதே. இவர்கள் இப்படி நாசமடைந்தது ஸகல லோகங்களுக்கும் ஹிதமே. கபில பகவானுடைய கோபாக்னியால் இவர்கள் எரிக்கப்பட்டபடியால் பூலோகத்திலுள்ள ஜலத்தால் இவர்களுக்குத் தர்ப்பணம் செய்யத் தகாது. ஹிமவானுடைய மூத்த பெண்ணான கங்கையின் ஜலத்தால் தர்ப்பணஞ் செய். அதனால் நனைக்கப்பட்டால் இவர்கள் ஸகல பாபங்களும் நீங்கிப் புண்யாத்மாக்களாய் ஸ்வர்க்கமடைவார்கள். அந்த ஜலத்தால் சாம்பல் மேடுகளை நனைக்கவேண்டும். யாகக் குதிரையைக் கொண்டுபோ. உன் பாட்டனுடைய யாகத்தை நிறைவேற்''றென்றார்.

அப்படியே அம்சுமான் யாகக் குதிரையுடன் அதிவேகமாய் ஸகரனிடத்திற்கு வந்து, நடந்த வரலாற்றையும் கருடன் சொன்ன யோஜனையையும் தெரிவித்தார். இடிவிழுந்ததைப்போன்ற அந்தத் துக்க ஸமாசாரத்தைக் கேட்டு ஸகரன் மனம் நொந்தார். ஆயினும் ஆரம்பித்த யக்ஞத்தை விதிப்படி முடித்து அயோத்யைக்குப் போனார். பிறகு பதினாயிர வர்ஷ... வரையில் அரசாள்... , கங்கையைப் பூமிக்கு வருவிப்பதைப்ப... ...நிச்சயத்தையும் செய்யாமல் தேகத்... ...மடைந்தார்.

## ஸர்ச்கம் 42.

## திலீபன்—பகீரதன்.

ஸகரன் காலகதியை அடைந்த பிறகு ஜனங்கள் தர்மவானான அம்சுமானைப் பட்டாபிஷேகஞ் செய்தார்கள். அவனுடைய புத்ரனே திலீபன். அவனிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்து அம்சுமான், ஹிமயமலைச் சிகரத்தில் ஒரு புண்ய க்ஷேத்ரத்தில் முப்பத்திரண்டாயிரம் வர்ஷங்கள் வரையில் கடுந்தவம் செய்தும் கங்கையைப் பூமிக்கு வருவிக்க முடியாமல் ஸ்வர்க்க மடைந்தார். தன் பாட்டன்கள் கோரகதியை அடைந்ததைத் திலீபன் கேட்டுத், துக்கத்தால் மனம் வாடிக், 'கங்கையைப் பூமிக்குக் கொண்டு வருவதெப்படி? அந்த ஜலத்தால் என் பாட்டன்களுக்குத் தர்ப்பணஞ் செய்வதெப்படி? அவர்களுக்கு உத்தமகதி கிடைக்கும் உபாயமென்ன'? வென்று எவ்வளவு யோசித்தும் ஒரு முடிவும் ஏற்படவில்லை. அதே ஞாபக மாயிருந்த அந்தத் தர்மாத்மாவிற்குப் பகீரதன் பிறந்தான். திலீபன் எண்ணிறந்த யாக யக்ஞங்களை நடத்தி முப்பதாயிரம் வர்ஷங்கள் வரையில் ஆண்டு, பிறகு பகீரதனுக்குப் பட்டங்கட்டி, தன் முன்னோர்களைக் கரையேற்ற வழி தெரியாமல் அதே கவலையாயக் காலகதியடைந்து, தன் புண்யகாமங்களால் ஸ்வர்க்கத்திற்குச் சென்றார்.

பகீரதன் வெகு காலமாய்ப் புத்ரனில்லாமல் வருந்திக், கங்கையைப் பூமிக்கு எப்படியாவது கொண்டு வர நிச்சயித்து, மந்த்ரிகளிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்துக், கோகர்ணக்ஷேத்ரத்தில் கடுந்தவம் செய்தார். பஞ்சாக்னி மத்தியில் நின்று, கைகளை உயரத் தூக்கிக் கொண்டு, இந்த்ரியங்களையும் மனதையும் அடக்கி, மாஸத்திற்கு ஒருதடவை சிறிது ஆஹாரஞ் செய்து, பல்லாயிர வர்ஷங்களைக் கழித்தார். அந்தக் கோரமான தபஸால் ப்ரஹ்மா வெகு ஸந்தோஷ மடைந்து தேவர்களுடன் அங்கே வந்து "பகீரத! மஹானுபாவ! உன் தபஸால் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். வேண்டிய வரங்களைக்கேள்" ன்றார். அந்த ராஜ ரிஷி அவரை வணங்கிக் கைகூப்பி, "ஸ்வாமி! தாங்கள் என்னிடத்தில் ஸந்தோஷ மடைந்தால், என் தபஸ் பயன் பெறுமானால், நான் கங்கா ஜலத்தால் செய்யும் தர்ப்பணம், சாம்பல் மேடாய்க் கிடக்கும் ஸகரபுத்ரர்கள்

அனைவரையும் நனைத்து அவர்களுக்கு உத்தம கதியைக் கொடுக்கட்டும். மேலும், இக்ஷ்வாகு குலத்திற் பிறந்த எனக்கு, வம்சத்தை விருத்தி செய்யும் ஒரு புத்ரனை அனுக்ரஹிக்க வேண்டு"மென்றார். ப்ரஹ்மா, "இக்ஷ்வாகு குலதிலக! உன் எண்ணங்கள் நிறைவேறும். ஹிமவானுடைய மூத்த பெண்ணான கங்கை அந்த மலையில் வஸிக்கிறாள். அவள் பூமிக்கு வந்தால் அவளுடைய வேகத்தைத் தாங்கக் கூடியவர் பரமசிவனே. அதற்காக அவரை ப்ரார்த்திக்க வேண்டும். இல்லாவிட்டால் கங்கையின் வேகத்தால் பூமி பிளந்துவிடு" மென்றார். இப்படி அனுக்ரஹித்துக், கங்கையை அழைத்து "தகுந்த காலம் வரும்பொழுது பகீரதனுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்" யென்று கட்டளையிட்டுத் தேவர்களுடன் தன்னுலகிற்குப் போனார்.

---

## ஸர்கம் 43.

## கங்கை பூமிக்கு வந்தது.

பிறகு பகீரதன் கால் கட்டைவிரலைப் பூமியில் ஊன்றிக், கைகளை உயரத்தூக்கிக் கொண்டு, யாதொரு பற்றுமின்றி, வாயுவே ஆஹாரமாய்க் கட்டையைப் போல் அசையாமல் இரவும் பகலும் பரமசிவனைக் குறித்துத் தவஞ்செய்தார். பிறகு மஹாதேவன் பார்வதியுடன் அவருக்கு ப்ரஸன்னமாய் "ராஜச்ரேஷ்ட! உன் தபஸால் திருப்தியடைந்தேன். உன்னிஷ்டப்படி பர்வதராஜ புத்ரியான கங்கையைத் தலையில் தரிக்கிறே"னென்றார். அப்பொழுது ஸகல லோகங்களிலும் கொண்டாடப்பட்ட கங்கை, பெரிய ரூபத்துடனும் தாங்க முடியாத வேகத்துடனும் ஆகாசத்திலிருந்து பரமசிவனுடைய சிரஸில் விழுந்தாள். "என் வேகத்தைத் தாங்கக் கூடியவர்களுமுண்டோ! இந்தச் சங்கரனையும் அடித்துக்கொண்டு பாதாளத்திற்குப் போவே"னென்றாள். அவளுடைய கர்வத்தை அறிந்து ருத்ரன் கோபங்கொண்டு அவளை மறைக்க நினைத்தார். அவருடைய புண்யமான சிரஸில் விழுந்தவுடன் ஜடாமண்டலமென்ற பெரும் வலையில் சிக்கிக்கொண்டு வெளியில்போக வழிதெரியாமல் பல வர்ஷங்கள் வரையில் அலைந்து திரிந்தாள். "பரமசிவனுடைய தலையில் கங்கை விழுவதைப் பார்த்தேன். உடனே பூமிக்கு வர வேண்டியதல்லவா? இவ்வளவு காலமாயும் என் இன்னும் வெளிப்படவில்லை. ஸர்வேச்வரனை சங்கரனையே சரணமடைய வேண்டு"மென்று மறுபடியும் அவ

ரைக் குறித்துத் தவம்செய்தார். அதனால் பகவான் ஸந்தோஷித்து ப்ரஹ்மாவால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிந்து ஸரஸில் அவளை விட்டார். அவள் அப்பொழுது ஏழு ப்ரவாகங்களாய்ப் பூமியில் விழுந்தாள். அவைகளில் ஹ்லாதினி பாவனி நளினியென்றவை கிழக்கிலும், ஸுசக்ஷு ஸீதா ஸிந்துவென்றவை மேற்கிலும் ஓடின. ஏழாவதான ப்ரவாஹம் பகீரதரைப் பின் தொடர்ந்தது. அந்த ராஜச்ரேஷ்டர் திவ்யமான ரதத்தில் ஏறிக்கொண்டு முன்னே போனார். கங்கைக்கு த்ரிபதகாவென்ற பெயர் வந்த விதத்தைச் சொன்னேன். அவளுடைய அத்புதமான செய்கைகளைச் சொல்லு கிறேன்.

ஆகாசத்திலிருந்து சிவனுடைய சிரஸிலும் அங்கிருந்து பூமியிலும் விழுந்ததால் அந்த ஜலம் பயங்கரமான சப்தத்துடன் வந்தது. மீன் ஆமை சிம்சுமாரம் முதலை முதலிய ஜல ஜந்துக்கள் அதில் துள்ளி விழுந்துகொண்டிருந்தபடியால் பூமி விளங்கிற்று. ஆகாசத்திலிருந்து கங்கை பூமிக்கு வரும் ஆச்சர்யத்தைப் பார்க்கத் தேவர்ஷி கந்தர்வ யக்ஷ ஸித்த கணங்கள் நகரங்களைப் போன்ற விமானங்களிலும் குதிரைகளிலும் யானைகளிலும் கூட்டங் கூட்டமாய் அங்கே வந்தார்கள். அவர்களின் தேஹ காந்தியாலும் ஆபரணங்களின் ப்ரகாசத்தாலும் எண்ணிறந்த ஸூர்யர்கள் விளங்குவது போல் ஆகாசம் மேகங்களில்லாமல் ஜ்வலித்தது. கங்கையில் மீன் சிம்சுமாரம் முதலிய ஜல ஜந்துக்கள் அங்குமிங்கும் துள்ளுவதால் மின்னல்கள் பாய்வதுபோலிருந்தது. நான்கு புறங்களிலும் பல விதமாய் வாரியிறைக்கப்பட்ட நுரைகளாலும் நீர்த்திவலைகளாலும், ஹம்ஸக்கூட்டங்களுடன் கூடிய வெண்மையான சரத்கால மேகங்களால் ஆகாசம் நிறைந்ததுபோலிருந்தது. அந்த நதியின் ஜலம் சிலவிடங்களில் அதிவேகமாயும், சிலவிடங்களில் கோணலாயும், சிலவிடங்களில் நேராயும், பள்ளங்களில் கீழாயும், கல்லு முதலியவைகளால் தடுக்கப்பட்ட பொழுது மேல் முகமாயும், சிலவிடங்களில் மெதுவாயும், சில விடங்களில் அலைகளின் வேகத்தால் ஜலத்துடன் ஜலம் மோதிக் கொண்டு அடிக்கடி எதிர்த்து ஓடிக்கொண்டும் பூமியில் விழுந்தது. பரமசிவனுடைய தலையில் விழுந்து அங்கிருந்து பூமியில் வந்ததால், நிர்மலமாய்ப் பாபங்களைப் போக்கும் புண்ய தீர்த்தமாயிற்று. தேவர்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் பூமியிலுள்ளவர்களும் "பரமசிவனே இதைத் தலையால் தாங்கினதால் இது மஹா பரிசுத்தமான தீர்த்தம். அவருடைய தேஹத்தில் பட்டுப் பூமியில் விழுந்ததால் இதற்கு

விசேஷ சக்தியுண்டாயிற்றென்று அதில் ஸ்நானஞ் செய்தார்கள். சாபத்தால் தேவலோகத்திலிருந்து பூமிக்கு வந்தவர்களும் அதில் ஸ்நானஞ் செய்து பாபங்கள் நீங்கிப் புண்ய லோகங்களுக்குப் போனார்கள். பூமியிலுள்ளவர்கள் அதில் ஸ்நானஞ் செய்து பாபங்கள் விலகிப் பரமானந்தமடைந்தார்கள்.

ராஜர்ஷியான பகீரதர் திவ்யரதத்தில் ஏறிக் கொண்டு முன்னே சென்றார். கங்கை அவரைப் பின்தொடர்ந்தாள். தேவ ரிஷி தைத்ய தானவ ராக்ஷஸ கந்தர்வ யக்ஷ கின்னர உரக அப்ஸரஸ்கணங்களும் ஜல ஜந்துக்களும் பகீரதரைப் பின் தொடரும் கங்கையைப் பின் தொடர்ந்தார்கள். அவர் போகும் வழியெல்லாம் கங்கையும் போய் ஸமஸ்த பாபங்களையும் நாசஞ் செய்தது. வழியில் ஜன்ஹுரிஷி யாகஞ் செய்துகொண்டிருந்த விடத்தில் பரவி யாக பதார்த்தங்களை அடித்துக்கொண்டு போயிற்று. அவளுடைய கர்வத்தால் அந்த ரிஷி கோபங்கொண்டு அந்த ஜலம் முழுவதையும் குடித்து விட்டார். அந்த ஆச்சர்யத்தால் தேவரிஷிகணங்கள் ப்ரமித்து அந்த மஹாத்மாவைப் பல விதமாய் ப்ரார்த்தித்து, "ஸ்வாமி! கங்கையின் அபராதத்தைப் பொறுக்கவேண்டும். தங்களுடைய தேஹத்திலிருந்து வெளிப்படுவதால் அவள் தங்களுக்குப் பெண்ணாகட்டு"மென்றார்கள். அதனால் அவர் ஸந்தோஷித்து கங்காப்ரவாஹத்தைத் தன் காதின் வழியாய் வெளியில் விட்டார். அன்றுமுதல் அவளுக்கு ஜான்ஹவி (ஜன்ஹுவின் புத்ரி) யென்று பெயராயிற்று. பிறகு அவள் பகீரதரைப் பின்தொடர்ந்து ஸமுத்ரத்திற்கு வந்து அங்கிருந்து ரஸாதலத்திற்குப் போனாள். தன் முன்னோர்கள் எரிந்துகிடக்கு மிடத்திற்கு அவர் அவளை அழைத்துக் கொண்டு போய், அவர்கள் சாம்பலா யிருப்பதைக் கண்டு மிகவும் வருத்தப்பட்டார். அந்தப் புண்யஜலம் சாம்பல்மேட்டை நனைத்தவுடன் ஸகர புத்ரர்கள் பாபம் ஒழிந்து உத்தம லோகங்களை அடைந்தார்கள்.

ஸர்க்கம் 44.

## ஸகர புத்ரர்கள் உத்தமகதியை அடைந்தது.

அப்பொழுது ஸகல லோகங்களுக்கும் ப்ரபுவான ப்ரஹ்மா அங்கே வந்து "பகீரத! புருஷ ச்ரேஷ்ட! ஸகரனுடைய அறுபதாயிரம் புத்ரர்களைக் கரையேற்றினாய். அவர்கள் ஸ்வர்க்கத்தில் தேவர்களைப்போல் விளங்குகிறார்கள். ஸமுத்ரஜல முள்ளவரையில் ஸ்வர்க்கத்தில் ஆனந்தமாய் வஸிப்பார்கள். இந்தக் கங்கை உனக்கு மூத்த பெண்ணாகட்டும். பாகீரதியென்ற பெயருடன் உலகத்தில் ப்ரஸித்தி யடைவாள். ஸ்வர்க்கம் பூமி பாதாளமென்ற மூவிடங்களில் சென்றதால் திரிபதகாவென்றும், உன்னால் கொண்டுவரப்பட்டதால் பாகீரதி யென்றும், இவளுக்குப் பெயர் வந்தது. உன் முன்னோர்களுக்கு இதில் தர்ப்பணஞ் செய்து அவர்களைக் கரையேற்றி உன் ப்ரதிக்ஞையை முடி. மஹா தர்மசீலனான ஸகரனும் அபார தேஜஸுள்ள அம்சுமானும், ராஜ ச்ரேஷ்டனும் உத்தம குணவானும் மஹர்ஷிகளைப் போன்ற தேஜஸுள்ளவனும் தபஸில் என்னைப்போன்றவனுமான திலீபனும் இந்தக் கங்கையைப் பூமிக்குத் தருவிக்க எவ்வளவோ முயன்றார்கள். ஆனால் இந்தப் புண்ய ஜலத்தில் தர்ப்பணஞ் செய்து ஸகர புத்ரர்களைக் கரையேற்றுவதென்ற ப்ரதிக்ஞையை நிறைவேற்ற முடியவில்லை. அந்த அஸாத்யமான கார்யத்தை நீ செய்தாய். லோகத்தில் அழிவற்ற கீர்த்தியடைந்தாய். ஸ்வர்க்கத்திலிருந்து கங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்தபடியால் தர்மத்திற்கு இருப்பிடமானாய். மற்ற நதிகளைப்போலின்றி எப்பொழுதும் ஸ்நானஞ் செய்யக்கூடிய இந்த நதியில் நீயும் ஸ்நானஞ்செய்து சுத்தனாய் விசேஷ புண்யத்தை அடை. உன் முன்னோர்களுக்கு இதில் தர்ப்பணஞ் செய். உனக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும் நான் ஸத்யலோகத்திற்குப் போகிறேன். நீயும் பூலோகத்திற்குப் போ"வென்று அனுக்ரஹித்து தன்னுலகிற்குச் சென்றார்.

பகீரதர் விதிப்படி கங்கையின் புண்ய ஜலத்தால் ஸகர புத்ரர்களுக்குத் தர்ப்பணம் முதலிய உத்தரக்ரியைகளைச் செய்து தன் ப்ரதிக்ஞை நிறைவேறினதால் அளவற்ற ஸந்தோஷமடைந்து அயோத்யைக்கு வந்து வெகுகாலம் அரசாண்டார். அவருடைய காலத்

தில் ஜனங்கள் நோய் மனக்கவலையின்றி காப்பாற்றப்பட்டு ஸகல ஸௌக்யங்களும் பொருந்தி இருந்தார்கள்.

ராம ! கங்கையின் வரலாற்றை உனக்கு விஸ்தாரமாகச் சொன்னேன். உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். ஸந்த்யா காலம் கிட்டினதால் இங்கே நிறுத்துவோம். கங்கை பூமிக்கு வந்த இந்தப் புண்யசரித்ரத்தைக் கேட்பவன் ஸகல இஷ்டங்களையும் அடைகிறான்; ஸமஸ்த பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான்; ஆயுஸாம் கீர்த்தியும் வளர்கின்றன. புத்ர பௌத்ரர்களுடன் இவ்வுலகத்தில் ஸந்தோஷமாய் வஸித்து இறந்த பிறகு ஸ்வர்க்கத்தை அடைகிறான். ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்யர்களில் இதைப் பிறர்க்குச் சொல்லுகிறவனுடைய பித்ருக்களும் தேவதைகளும் மிகுந்த ப்ரீதியடைகிறார்க"ளென்றார்.

---

## ஸர்க்கம் 45.

## ஸமுத்ர மதனம்

ராம லக்ஷ்மணர்கள் அந்தப் புண்ய சரித்ரத்தைக் கேட்டு "மஹர்ஷே! தாங்கள் சொன்ன சரிதம் வெகு ஆச்சர்யகரமானது. ஸகர புத்ரர்கள் ஸாகரத்தை வெட்டினதும், பகீரதர் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்ததும் வெகு அத்புதமான கார்யங்க"ளென்று கொண்டாடி அன்றிரவு முழுவதும் அந்தக் கதையையே நினைத்துக் கொண்டிருந்தார்கள். காலையில் எழுந்து நித்யகர்மங்களை முடித்து உட்கார்ந்திருக்கும் கௌசிகரிடத்தில் வந்து "ஸ்வாமி! தாங்கள் சொன்ன கதையைப்பற்றி யோசித்துக் கொண்டிருந்த எங்களுக்கு ராத்ரி ஒரு க்ஷணம் போல் கழிந்தது. இந்தப் புண்யநதியைத் தாண்டி அக்கரைக்குப் போவோம். தாங்கள் இங்கே வந்திருப்பதை அறிந்து ரிஷிகளுக்கு வேண்டிய ஸௌகர்யங்களுள்ள ஓடம் தயாராயிருக்கிற"தென்றார்கள். பிறகு கௌசிகரும் ராஜபுத்ரர்களும் ரிஷிகளும் கங்கையைத் தாண்டி அதற்கு உதவியாய் வந்த ரிஷிகளை உபசரித்து அனுப்பிவிட்டுக், கங்கைக் கரையில் சற்று நேரம் உட்கார்ந்தார்கள். அங்கிருந்து விசாலா நகரம் காணப்பட்டது. பிறகு அவர்கள் அதை நோக்கி ப்ரயாணஞ் செய்தார்கள். போகும் பொழுது ராமன் ஸகலமும் தெரிந்தும் விச்வாமித்ரரை வணங்கிக் கைகூப்பி "இந்த விசாலையின் மஹிமை எவ்விதமானது?

இதில் எந்த ராஜவம்சம் ஆண்டுவருகிறது? கேட்க விரும்புகிறேன்'' னென்றார்.

அப்பொழுது கௌசிகர் விசாலா சரித்ரத்தைச் சொல்ல ஆரம்பித்தார். ''இங்கே நடந்த ஓர் விருத்தாந்தத்தைச் சொல்கிறேன். அதற்கு ஸம்பந்தப்பட்ட இந்த்ரனுடைய கதையையும் சொல்லக்கேள். சென்ற கிருதயுகத்தில் திதியின் புத்ரர்களான தைத்யர்கள் மஹா பலவான்கள். அதிதியின் புத்ரர்களான தேவர்கள் வீர்யவான்கள்; தார்மிகர்கள். ஒரு ஸமயத்தில் அவர்கள் பிறப்பு இறப்பு கிழத்தனம் நோய் கவலை முதலிய உபத்ரவங்களின்றி, பலத்திலும் புத்தியிலும் ஸுகத்திலும் நிகரற்றிருக்கும் வழியை யோசித்து, பாற்கடலைக் கடைந்து அமிருதத்தை எடுத்துப் புஜிக்க நிச்சயித்தார்கள். அதற்கு மந்தர மலையை மத்தாகவும் வாஸுகி யென்ற நாகத்தைக் கயிறாகவும் உபயோகித்து, ஆயிர வர்ஷங்கள் கடைந்தார்கள். வாஸுகி அந்த ச்ரமத்தைத் தாங்க முடியாமல் க்ரூரமான விஷத்தைக் கக்கி மலைப்பாறைகளைக் கடித்தான். பிறகு ஹாலாஹலமென்ற மஹா விஷம் அக்னியைப்போல் ஜ்வலித்துக் கொண்டு ஸமுத்ரத்திலிருந்து வெளிப்பட்டு தேவர்களையும் மனிதர்களையும் லோகங்களையும் எரிக்கவாரம்பித்தது. அப்பொழுது தேவர்கள் சங்கரனைச் சரணமடைந்து, எங்களை ரக்ஷிக்கவேண்டு''மென்று முறையிட்டார்கள். பரம தார்மிகரான மஹாவிஷ்ணு சங்க சக்ரத்துடன் அங்கே வந்து ருத்ரனைப் பார்த்துப் புன் சிரிப்புடன் ''தேவதைகள் ஸமுத்ரத்தைக் கடைந்த பொழுது முதலில் உண்டான பதார்த்தம் உம்மைச் சேரவேண்டியது. நீர் தேவர்களில் முதல்வரல்லவா? ஆகையால் மற்றவர்கள் தங்களுக்குச் செய்யும் பூஜை யென்று இதை எண்ணி இந்த விஷத்தைப் புஜிக்கவேண்டு'' மென்று மறைந்தார். தேவர்கள் பயந்து நடுங்குவதைக் கண்டு விஷ்ணுவின் வார்த்தையை அங்கீகரித்து ஹாலாஹலமென்ற கோரமான விஷத்தைப் பரமசிவன் புஜித்தார். பிறகு தேவர்கள் பாற்கடலைக் கடைந்தார்கள். மந்தரகிரி பாதாளத்தில் அமிழ்ந்து போயிற்று. தேவகணங்கள் மறுபடியும் விஷ்ணுவைச் சரணமடைந்து ''ஸகல ப்ராணிகளுக்கும் தாங்களே கதி; தேவர்களிடத்தில் தங்களுக்கு விசேஷ ப்ரீதி. இந்த மலையைத் தூக்கி நிறுத்தி, எங்களை ரக்ஷிக்கவேண்டு''மென்று ப்ரார்த்தித்தார்கள். அதைக் கேட்டுக் கேசவன் ஆமையின் ரூபத்தை எடுத்து, மந்தரகிரியைத் தன் முதுகில் தாங்கி ஸமுத்ரத்திலிருந்தார். அதின் நுனியை அசையாமல் கைகளால் பிடித்துக் கொண்டார். தேவர்களின் நடுவி

லிருந்தும் கடைந்தார். ஆயிரம் வர்ஷங்களுக்குப் பிறகு, தன்வந்த்ரி பகவான் தண்ட கமண்டலத்துடனும், ஸௌந்தர்ய நிதிகளான அப்ஸரஸ்களும் அதிலிருந்து வெளிப்பட்டார்கள். அப்ஸு, ஜலங்களிலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட ஸாரமான பதார்த்தமாகையால் அந்த ஸ்த்ரீகளுக்கு அப்ஸரஸ்களென்று பெயர். அவர்கள் அறுபது கோடி. அவர்களின் வேலைக்காரர்களுக்குக் கணக்கில்லை. தேவர்களும் தானவர்களும் அவர்களை மணஞ் செய்யவில்லை; அவர்களும் கணவர்களைத் தேடவில்லை. ஆகையால் எல்லோருக்கும் பொது ஸ்த்ரீயானார்கள். பிறகு வருணனுடைய பெண்ணான வாருணியுண்டானாள். தனக்கு ஒரு பர்த்தாவைத் தேடினாள். தைத்யர்கள் அவளை ஒப்புக்கொள்ளவில்லை. அதிதியின் புத்ரர்களான தேவர்கள் அவளை அங்கீகரித்தார்கள். ஸுரா வென்ற அவளை ஒப்புக்கொள்ளாத தைத்யர்களுக்கு அஸுரர்களென்றும், அங்கீகரித்த தேவர்களுக்கு ஸுரர்களென்றும் பெயர் வந்தது. அவளை அடைந்ததால் தேவர்கள் மிகவும் ஸந்தோஷித்தார்கள். பிறகு உச்சைச்ரவ ஸென்ற குதிரையும் கௌஸ்துபமென்ற மணியும், அமிருதமும் உண்டாயின. அப்பொழுது அதற்காக தேவாஸுரர்களுக்குக் கோரயுத்தம் நடந்தது. மூன்று லோகங்களும் பயத்தால் மெய்மறந்தன. இரண்டு பக்கத்திலும் எண்ணிறந்தவர்கள் அழிந்தார்கள். தைத்யர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் வரவர பலம் அதிகமாய்த் தேவர்களைக் கூட்டங் கூட்டமாய்க் கொல்ல ஆரம்பித்தார்கள். அப்பொழுது மஹாவிஷ்ணு ஆச்சர்யமான சக்தியால் எல்லோரையும் மோஹிக்கச் செய்து, அந்த அமிருதத்தை எடுத்துக் கொண்டுபோனார். அழிவற்ற புருஷோத்தமனை எதிர்த்துச் சண்டை செய்த அஸுரர்கள் திவ்யாயுதங்களால் தூளானார்கள். அவரைச் சரணமடைந்த தேவர்கள் அவருடைய கிருபையாலும் அமிருதபானத்தாலும், பலம் வீர்யம் உத்ஸாஹம் வளர்ந்து, தைத்யர்களைக் கூட்டங் கூட்டமாய்க் கொன்று, தங்களுடைய ராஜ்யத்தை அடைந்து ஸந்தோஷமாய் அரசு புரிந்தார்கள்.

## ஸர்க்கம் 46.

## மருத்துக்களின் உத்பத்தி.

தன் புத்ரர்கள் தேவர்களால் அழியக் கண்டு திதிதேவி மிகவும் வருந்தித் தன் பர்த்தாவான காச்யபரைப் பார்த்து, "உமக்கு அதிதியிடத்தில் பிறந்த புத்ரர்கள் என் பிள்ளைகளைக் கொன்றார்கள். வெகு காலம் தபஸ் செய்து இந்த்ரனைக் கொல்லும்படியான புத்ரனைப் பெற விரும்புகிறேன். பலவானும் பராக்ரமசாலியாயும் மஹா புத்திமானும் பிறரால் ஜயிக்கப்படாதவனும் இந்த்ரனைக் கொல்லக் கூடியவனுயுமிருக்கும் புத்ரனை எனக்கு அருளவேண்டு"மென்றார். புத்ரர்களைப் பறிகொடுத்துத் தபிக்கும் திதியிடத்தில் காச்யபருக்கு இரக்க முண்டாயிற்று. "பெண்ணே! அப்படியே ஆகட்டும். நான் உனக்கு ஒரு வ்ரதத்தை உபதேசிக்கிறேன். ஆயிரம் வர்ஷங்கள் வரையில் வெகு சுத்தியுடன் நீ அதைஅனுஷ்டித்து வந்தால் இந்த்ரனைக் கொல்லக்கூடிய புத்ரனை என்னால் அடைவாய். அவன் மூன்று லோகங்களையும் ஆள்வா"னென்று அவளைத் தடவிக்கொடுத்து வயிற்றைத் தொட்டு அனுக்ரஹித்தார். "நீ நினைத்தபடி புத்ரனுண்டாகக் கடவ"தென்று ஆசீர்வதித்துத் தபோவனத்திற்குச் சென்றார்.

திதி பரமஸந்தோஷத்துடன் குசப்லவனமென்ன க்ஷேத்ரத்தில் வெகு பயங்கரமான தபஸைச் செய்ய ஆரம்பித்தாள். அப்பொழுது இந்த்ரன் வெகு வணக்கமாய் அவளுக்கு ஸகல பணிவிடையையும் செய்து வந்தான். பழம் கிழங்கு ஜலம் தர்ப்பம் விறகு நெருப்பு முதலிய யாவற்றையும் அந்தந்த ஸமயந்தவறாமல் கொண்டுவந்து கொடுத்தான். அவளுடைய எண்ணங்களைத் தெரிவிப்பதற்கு முன் நிறைவேற்றினன். இரவும் பகலும் வெகு ஜாக்ரதையாய் அலுக்காமல் அவளிடத்தில் கட்டிக்காத்து, கைகால்களைப் பிடித்து விசிறிப், பலவித உபசாரங்களால் அவளுடைய மனதைக் கவர்ந்தான். பத்து வர்ஷங்கள் பாக்கியிருக்கையில் ஒருநாள் திதி, இந்த்ரனிடத்தில் தனக்குண்டான மிகுந்த திருப்தியால் அவன் தன் எண்ணத்திற்கு விரோதியென்பதை மறந்து, "குழந்தாய்! உன்னை ஜயிக்கும்படியான புத்ரனைக் கொடுக்கவேண்டுமென்று உன் பிதாவை ப்ரார்த்தித்தேன். அவர் ஓர் வ்ரதத்தை உபதேசித்து, "இதை நீ ஆயிரம் வர்ஷங்கள் வரையில் சுத்தியுடன்

அனுஷ்டித்தால் உன் உத்தேசம் நிறைவேறு"மென்று ஆசீர்வதித்தார். பத்து வர்ஷங்களுக்குப் பிறகு உனக்கு ஸஹோதரன் பிறப்பான். உன்னை ஜயிப்பதற்காக அவனை வேண்டினேன். நீ எனக்கு செய்த பணிவிடையால் உன்னிடத்தில் விரோத புத்தி நீங்கிற்று. உனக்கும் அவனுக்கும் ஸ்நேஹம் செய்விக்க நிச்சயித்திருக்கிறே"னென்றாள்.

பிறகு நடுப் பகலில் தூக்கத்தால் மெய்மறந்து தன் தலைமயிர் காலில் படும்படி தூங்கி விழுந்தாள். அவள் அசுத்தமாயிருப்பதை அறிந்து, இந்த்ரன் நல்ல ஸமயமென்று மகிழ்ந்து சிரித்து, வெகு தைர்யமாய் அவளுடைய தேஹத்தில் புகுந்து அந்தக் கர்பத்தை ஏழு துண்டுகளாக்கினான். வஜ்ரத்தால் பிளக்கப்பட்ட அந்தச் சிசு, உபத்ரவம் தாங்காமல் அலறிற்று. திதி விழித்துக்கொண்டாள். இந்த்ரன் 'அழாதே அழாதே' யென்று சொல்லிக்கொண்டே அதை வெட்டினான். திதி "ஐயோ! என் குழந்தையைக் கொல்லாதே, கொல்லாதே" என்று 'அலறினாள். தாயின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அவன் வெளியில் வந்து வஜ்ராயுதத்துடன் கைகூப்பி வணங்கி "அம்மா! தலைமயிர் காலில் விழும்படி தூங்கினதால் அசுத்தமானீர்கள். இந்தத் தோஷத்தைக் காரணமாய்க் கொண்டு தங்களுடைய தேஹத்தில் நான் புகுந்து, என்னைக் கொல்ல வளரும் சிசுவை வஜ்ரத்தால் வெட்டினேன். மன்னிக்கவேண்டும். தன்னைக் கொல்ல வந்த பசுவையும் கொல்லலாமென்று ந்யாயமுண்டல்லவா" வென்றான்.

---

## ஸர்க்கம் 47.

(தொடர்ச்சி)

தன் கர்ப்பம் ஏழு துண்டானதைக் கண்டு திதி வெகு துக்கமடைந்து, இந்த்ரனை ஜயிக்கமுடியாதென்று நிச்சயித்து ஸமாதானஞ் செய்தாள். "என் பிசகால் இப்படி நேர்ந்ததே ஒழிய உன் குற்றமல்ல. உன்னைக் காப்பாற்ற முயன்றது ந்யாயமல்லவா? ஆனால் உன்னால் வெட்டப்பட்ட துண்டுகளுக்கு ஓர் உபகாரம் செய். அவை ஏழு மருத்துக்களாய், ஏழு வாதஸ்கந்தங்களுக்குப் பாலகர்களாகட்டும். கனன் ஸத்யலோகத்திலும், ஸ்பர்சனன் இந்த்ர லோகத்திலும், வாயு புவர்லோகத்திலும், அனிலன் ப்ராணன் ப்ராணேச்வரன் ஜீவனென்றவர்கள் பூமியில் நான்கு திக்குகளிலும் திவ்ய ரூபங்களுடன் "மாருதி" (அழாதே) என்ற உன்னால் கொடுக்

கப்பட்ட பெயருடன் ஸஞ்சரிக்கட்டும். அப்படிச் செய்வதால் உனக்குப் பரம க்ஷேமமுண்டாகு”மென்றாள். இந்த்ரன் தன் கார்ய முடிந்ததால் அவளை நமஸ்கரித்துக் கைகூப்பி வணங்கி “அப்படியே யாகட்டும். தங்களுடைய புத்ரர்கள் மருத் கணங்களாய் எப்பொழுதும் விளங்கட்டு”மென்றான். இப்படி ஏற்படுத்தி இந்த்ரனும் திதியும் தங்களுடைய கார்யங்களை முடித்துக்கொண்டு திரும்பிப் போனார்கள். தவஞ்செய்து கொண்டிருந்த திதிக்கு இந்த்ரன் பணிவிடை செய்தவிடம் இதே.

இக்ஷ்வாகுவிற்கு அலம்புஸாவென்ற அப்ஸரஸிடத்தில் பிறந்த புத்ரன் விசாலன். அந்தப் பரமதார்மிகன் ஏற்படுத்தின நகரமே விசாலை. அவனுக்குப் பிறகு முறையே ஹேமசந்த்ரன், ஸுசந்த்ரன், தூம்ராசுவன், ஸ்ருஞ்ஜயன், ஸஹதேவன், குசாச்வன், ஸோமதத்தன், காகுத்ஸ்தன், ஸுமதி யென்ற பரம்பரை உண்டாயிற்று. மஹாதேஜஸ்வியான ஸுமதியே இப்பொழுது விசாலாதிபதி. இக்ஷ்வாகுவின் அருளால் இந்தராஜாக்கள் நீண்ட ஆயுஸாலும் வீர்யத்தாலும் தர்மத்தாலும் விளங்குகிறார்கள். இந்த ராத்ரி இங்கே ஸுகமாய் வஸித்துக் காலையில் மிதிலைக்குப் போவோ” மென்றார். கௌசிகருடைய வரவையறிந்து ஸுமதி, பந்துக்களோடும் உபாத்யாயர்களோடும் அங்கே வந்து கைகூப்பி நமஸ்கரித்து “ஸ்வாமி! க்ஷேமமாய் வந்தீர்களா? என் தேசத்தில் தாங்களே வந்து எனக்குத் தர்சனங் கொடுத்தால் என்னைப்போன்ற தன்யனில்லை. தங்களுடைய அனுக்ரஹத்திற்குப் பாத்ரமானே”னென்றான்.

---

## ஸர்க்கம் 48.

## அஹல்யை.

இப்படி ஒருவர்க்கொருவர் க்ஷேமம் விசாரித்த பிறகு கௌசிகருக்கு அருகிலிருந்த ராஜ புத்ரர்களை ஸுமதி அடிக்கடி கவனித்துப் பார்த்து, அவர்களுடைய அழகாலும் தேஜஸாலும் வீர்யத்தாலும் ஆச்சர்யமடைந்து “ஸ்வாமி! தங்களுக்குப் பரமமங்கள முண்டாகட்டும். இந்தக் குழந்தைகள் யார்? தேவதைகளைப்போல் பராக்ரம முள்ளவர்கள். யானையைப்போன்ற கம்பீரமான நடையையும், ஸிம்ஹத்தைப்போல் சத்ருக்களை அவமதிக்கும் நடையையும், புலியைப்

போல் விரோதிகள் கண்டு நடுங்கும் நடையையும், விருஷபத்தைப் போல் கர்வமுள்ள நடையையு முடையவர்கள். தாமரையிதழ் போன்ற விசாலமான கண்களால் பார்ப்பவரின் மனதைக் கவருகிறார்கள். மஹாவீரர்கள் தரிக்கும் கத்தி வில் அம்பறை முதலியவைகளை இந்தச் சிறுவயதிலும் ஸுலபமாய்த் தரிக்கிறார்கள். அழகில் அசுவினி தேவர்களும் இவர்களுக்கிடோ? பால்யம் நீங்கி யௌவனம் ஆரம்பிக்கிறது. தேவலோகத்திலுள்ள தேவர்கள் பூலோக வாஸிகளிடத்தில் கிருபை வைத்து இங்கே வந்தது போலிருக்கிறது பகலில் ஸூர்யனாலும் இரவில் சந்த்ரனாலும் ஆகாசம் விளங்குகிறது; ஆனால், ஸூர்ய சந்த்ரர்களைப் போன்ற இந்த ராஜகுமாரர்களால் என் தேசம் ஒரே காலத்தில் ப்ரகாசிக்கிறது. வெகு செல்வமாய் வளர்க்கப்பட்ட குழந்தைகள் இந்தக் காட்டுமார்க்கங்களில் எப்படி நடந்து வந்தார்கள்? எதை உத்தேசித்து வந்திருக்கிறார்கள்? இவர்களின் திவ்ய மங்கள விக்ரஹத்தைப் பார்த்தால், ஸகல இச்சைகளும் நிறைவேறின மஹாபுருஷர்களென்று தோன்றுகிறது. ஆகையால் பிறருடைய க்ஷேமத்தை உத்தேசித்தே இங்கே வரவேண்டும். அவர்களைப் புத்ரர்களாயடையும் பாக்யத்தைப் பெற்ற மஹான்கள் யார்? அளவு உயரம் நடையுடை பார்வை பேச்சு செய்கை முதலிய லக்ஷணங்களில் இருவர்க்கும் பேதம் கண்டுபிடிப்பதரிது. ஜன ஸஞ்சாரமற்ற காடுகளின் வழியாய் ச்ரேஷ்டமான ஆயுதங்களைத் தரித்து இந்த ராஜகுமாரர்கள் வந்த காரணத்தை விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டும். அவர்களை அண்டினவர்களுடைய கஷ்டத்தையும் துக்கத்தையும் தீர்க்க வந்தவர்களென்று பொதுவாய் அறிந்தேன். ஆனாலும் இன்னும் நன்றாய் அதின் விஷயங்களை அறிய விரும்புகிறே"னென்றான். அப்பொழுது கௌசிகர், தாடகை ஸுபாஹு மாரீசன் முதலிய ராக்ஷஸர்களை ராமலக்ஷ்மணர்கள் கொன்று ஸித்தாச்ரமத்தில் தன் யாகத்தை நிறைவேற்றினதையும், மிதிலைக்குப் போவதையும் எடுத்துச் சொன்னார். அயோத்யாபதியான தசரத புத்ரர்கள் தனக்கு அதிதியாய்க் கிடைத்ததைப் பற்றி ஸுமதி மிகவும் மகிழ்ந்து அந்த வீரர்களை விதிப்படி பூஜித்தான். அவர்கள் அங்கே அன்றிரவில் தங்கி, காலையில் மிதிலைக்கு ப்ரயாணஞ் செய்தார்கள்.

அதற்கருகில் வந்தவுடன் அம்முனிவர்கள் அதின் அழகையும் செல்வத்தையும் பார்த்து நல்லது நல்லதென்று மெச்சினார்கள். போகும் வழியில் அந்நகரத்திற்கு ஸமீபத்தில் ஒரு ஆச்ரமம் சூன்யமாயிருக்கக் கண்டு ராமன், "ஸ்வாமி! இந்தத் தபோவனம் வெகு

அழகாயும் ரம்யமாயுமிருக்கிறதே. ரிஷிகள் வஸிக்கத் தகுந்தது. வெகு நாளாயுள்ளதாய்த் தோன்றுகிறது. ஆனால் இப்பொழுது இதில் தபஸ்விகள் ஏன் வஸிக்கவில்லை? இது யாருடைய"தென்றார். அஹல்யையின் சாபம் தீரும் காலம் வந்ததென்று கௌசிகர் ஸந்தோஷித்து, "ராம! சொல்லுகிறேன், கேள். கௌதமரிஷி இங்கே வெகுகாலம் தவஞ்செய்தார். அவருடைய கோபத்தால் இந்தப் புண்ய ஸ்தலம் சபிக்கப்பட்டு, இப்படி அலங்கோலமாயிற்று. தேவர்களும் இங்கே வஸிக்க விரும்புவார்கள். ஞானத்திலும் ஆசாரத்திலும் மேலான கௌதமர், தன் பார்யை அஹல்யையுடன் இங்கே வெகுகாலம் வஸித்தார். ஒருநாள் அவர் வீட்டிலில்லாத ஸமயம் பார்த்துத் தேவராஜன் அவருடைய ரூபந்தரித்து அங்கே வந்து "அஹல்யே! ஆசைக்கு வசப்பட்டவர்கள் ஸ்த்ரீகளுக்கு ருதுகாலம் வரும் வரையில் எதிர் பார்க்கமுடியுமா? உன் அழகாலும் லாவண்யத்தாலும் மயங்கினேன். உன்னை அனுபவிக்க விரும்புகிறே"னென்றான். "கௌதமர் ஒருநாளும் இப்படிப் பேசினதுமில்லை. இவ்விதமாய்ச் செய்ய விரும்பினதுமில்லை. இந்த்ரனைத் தவிர மற்றவர் இங்கே வரமுடியாது. அவன் தன்னிடத்தில் வெகுநாளாய் ஆசை வைத்திருக்கிறானென்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகையால் கௌதமரூபத்தைத் தரித்து வந்திருப்பவன் இந்த்ரனே"ன்றறிந்தாள். அழகே ரூபமெடுத்து வந்த எண்ணிறந்த அப்ஸரஸ்களுக்கு நாதனான தேவராஜன் அவர்களை அலக்ஷ்யஞ் செய்து தன்னை மேலாக எண்ணி ஆசைவைத்ததால் கர்வமடைந்து புத்தி மயங்கி அவனிடத்தில் ஆசைவைத்தாள். பிறகு தன்னிஷ்டம் நிறைவேறினதால் ஸந்தோஷமடைந்து இந்த்ரனைப் பார்த்து, "உன் ஸ்நேஹத்தால் மிகவும் ஆனந்தமடைந்தேன். மஹர்ஷி வருவதற்குமுன் இங்கிருந்து புறப்பட்டுப்போ. உனக்கும் எனக்கும் இதனால் யாதொரு கெடுதியும் நேராமல் ஜாக்ரதையா யிருக்க வேண்டு"மென்றாள். முப்பத்து முக்கோடி தேவதைகளுக்கு அதிபதியும் வஜ்ரபாணியுமான எனக்கும் ஒருவரால் ஆபத்து நேருமென்று இவள் நினைக்காளேயென்று, தேவராஜன் சிரித்து, "அஹல்யே! என் எண்ணம் நிறைவேறிற்று. போய் வருகிறே"னென்று அந்த ஆச்ரமத்திலிருந்து வெளியில் வந்தான். கௌதமர் எங்கே வந்து விடுவாரோவென்று பரபரப்புடன் அதிவேகமாய்ப் போய்க்கொண்டிருக்கையில் அந்த மஹா தபஸ்வியே எதிரில் வரக்கண்டான். வெகுகாலமாய்க் கடுந்தவஞ் செய்து ஸம்பாதித்த மஹிமையால் தேவாஸுரர்களும் அவரை ஜயிக்க முடியாது. கங்கையில் ஸ்நானஞ்செய்து, தர்ப்பம் ஸமித்து முதலியவைகளை எடுத்துக்

கொண்டு ஜ்வலிக்கும் அக்னியைப் போல் வந்தார். இந்த்ரனுக்கு நடுக்கமெடுத்தது, காந்தி குறைந்தது. தேவர்களுக்கு அரசனுயிருந்தும், மூவுலகத்திலுள்ளவர்களுக்குத் தர்மத்தை நடத்திக் காட்ட வேண்டியவனுயிருந்தும் காமத்திற்கு இடங்கொடுத்து, தன் புண்யாச்ரமத்தில் தன் ரூபத்தைத் தரித்துத் தன் பார்யையைக் கெடுத்த தேவராஜனைக்கண்டு அந்தத் தபோநிதி அடங்காக் கோபங் கொண்டு "துர்ப்புத்தி பிடித்தவனே! என் ரூபத்தைத்தரித்துச், செய்யக்கூடாத இந்தப் பாபத்தைச் செய்ததால் உனக்கு அதற்கு ஆதாரமான விருஷணங்கள் போகக்கடவ" தென்று சபித்தார். உடனே அப்படியாயிற்று. பிறகு கௌதமர் அஹல்யையைப் பார்த்து "நீ காற்றைக்தவிர ஆஹாரமின்றி சாமபலில் படுத்துக்கொண்டு ஒருவருடைய கண்ணிற்கும் தெரியாமல் இங்கே பலவர்ஷங்கள் வரையில் இருக்கக் கடவாய். இக்ஷ்வாகு வம்சத்தரசனுன தசரத குமாரன் ஸ்ரீராமசந்த்ரன் இந்தக் கோரமான வனத்திற்கு வருவார். அவருக்கு அதிதி பூஜைசெய், உன் பாபங்கள் விலகும். நிஜ ரூபத்தை அடைந்து என்னுடன் சேர்வாய். லோபம் மோஹந் தீர்ந்து ஸந்தோஷத்துடன் என் பார்யையாயிருக்க யோக்யத்தை பெறுவா"யென்று வ்யபிசாரிகளுக்கு நியமிக்கப்பட்ட ப்ராயச்சித்தத்தைச சாப ரூபமாகச் சொல்லி, அதற்குப் பரிஹாரத்தையும் தெரிவித்து, இந்த ஆச்ரமத்தைவிட்டு ஸித்தசாரணர்கள் வஸிக்கும் வெகு புண்ய ஸ்தலமான ஹிமயமலைச் சிகரத்தில் தபஸ் செய்யப் போனுர். (வேறு விதமாக இந்தக் கதை உத்தரகாண்டத்தில் சொல்லப்படுகிறது.)

## ஸர்க்கம் 49.

## அஹல்யா சாப விமோசனம்.

மஹர்ஷியின் சாபத்தால் இந்த்ரன் விருஷணமற்றுப் பயத்தால் நடுங்கி முகம் வாடி, அக்னி முதலிய தேவதைகளிடத்திற்குச் சென்று "கௌதமருடைய தபஸை கெடுக்க அவருக்குக் கோபமூட்டிச் சபிக்கும்படி செய்யச்சொன்னீர்கள். உங்களுடைய கார்யமாகவே நான் போய் அவருடையதபஸைக் குறைத்தேன். அதினுல் விருஷணங்களை இழந்தேன். அவருடைய பார்யையான அஹல்யை கோரமான கதியை அடைந்தாள். தேவர்களே! உங்களுக்காக இவ்வளவு ச்ரமப்பட்டு ஆபத்தை அடைந்த என்னை விருஷணமுள்ளவனுகச் செய்யவேண்டு" மென்றுன்.

அக்னி முதலிய தேவர்களும் ரிஷிகளும் பிதிருக்களிடத்திற்கு வந்து, "நம்மரசன் கௌதமருடைய சாபத்தால் விருஷணமற்றான். தங்களுக்கு யாகத்தில் கொடுக்கப்படும் பசுவின் விருஷணங்களை அவனுக்குக் கொடுங்கள். விருஷணமில்லாத பசுக்களால் உங்களுக்கு விசேஷ திருப்தியுண்டாகட்டும். அவைகளைக் கொடுக்கும் யஜமானர்களுக்கும் க்ஷேமமுண்டாகட்டு"மென்றார்கள். அப்படியே பிதிரு தேவதைகள் ஆட்டின் விருஷணத்தை இந்த்ரனுக்குக் கொடுத்தார்கள். கௌதமருடைய தபோபலத்தால் இந்த்ரனுக்கு அன்று முதல் மேஷவிருஷண னென்று பெயர் கிடைத்தது. பிதிரு தேவதைகள் விருஷணமில்லாத பசுக்களை அங்கீகரித்து யாகஞ் செய்கிறவர்களுக்குப் பூர்ண பலத்தைக் கொடுத்துவருகிறார்கள். ராம ! அந்தப் புண்யாத்மாவான கௌதமருடைய ஆச்ரமத்திற்குப் போவோம், வா. கோரமான சாபத்திலிருந்து அஹல்யையை விடுவிக்கக் கடவா"யென்றார்.

அப்படியே ராமலக்ஷ்மணர்கள் அந்த மஹர்ஷியை முன்னிட்டுக்கொண்டு ஆச்ரமத்தில் ப்ரவேசித்தார்கள். அஹல்யை அநேக வர்ஷங்களாய் அனுஷ்டித்த கடுந்தபஸால் நிகரற்ற காந்தி பொருந்தித் தேவாஸுரர்களும் பார்க்கமுடியாத திவ்ய ரூபத்துடன் விளங்கினாள். ப்ரஹ்மாவின் மாயாசக்தியால் வெகு ச்ரமப்பட்டு ஸிருஷ்டிக்கப்பட்டவள். பனியாலும் மேகங்களாலும் மறைக்கப்பட்ட பூர்ண சந்த்ரனைப்போல், மரங்களும் கொடிகளும் இலைகளும் புஷ்பங்களும் அவளை மறைத்துக்கொண்டிருந்தன. புகையால் சூழப்பட்ட அக்னிக் கொழுந்தைப் போலும், ஜலத்தின் நடுவில் ப்ரதிபிம்பித்த ஸூர்யகாந்தியைப் போலும் விளங்கினாள். கௌதமருடைய சாபத்தால் ராமன் வரும் வரையில் மூன்றுலோகங்களிலுமுள்ளவர்களாலும் பார்க்கப்படாமலிருந்தாள். சாபம் நீங்குங் காலம் வந்தபடியால் அவர்களால் காணப்பட்டாள். ராமலக்ஷ்மணர்கள் அவளுடைய பாதங்களில் நமஸ்கரித்தார்கள். அஹல்யையும் கௌதமருடைய வார்த்தையை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, அர்க்யபாத்யம் முதலியவைகளைக் கொடுத்து அவர்களுக்கு விதிப்படி அதிதிபூஜை செய்தாள். ராமன் அதை அங்கீகரித்தார்; உடனே தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள்; தேவ துந்துபிகள் முழங்கின; கந்தர்வர்கள் பாடினார்கள், அப்ஸரஸ்கள் நாட்யமாடினார்கள். தபஸால் சுத்தி யடைந்து கௌதமரோடு சேர்ந்த அஹல்யையைத் தேவர்கள் கொண்டாடிப் பூஜித்தார்கள். கௌதமர் ராமனுடைய வரவை ஞானதிருஷ்டியால் அறிந்து, அவ்விடம் வந்து, அஹல்யையுடன்

ரம்மை விதிப்படி பூஜித்து, அங்கே வெகுகாலம் தபஸ் செய்து கொண்டிருந்தார். ராமன் அவர்களுடைய பூஜையைப் பெற்றுக் கொண்டு மஹர்ஷிகளுடன் மிதிலையை நோக்கிச் சென்றார்.



## ஸர்க்கம் 50.

### ஜனகர் அவர்களை உபசரித்தது.



#### அவதாரிகை

*ராமன் ஸகல லோகங்களையும் பரிசுத்தஞ் செய்யக்கூடியவ னென்பதை அஹல்யா விருத்தாந்தத்தால் உபதேசித்து, ஸ்ரீயப்பதியான மஹாவிஷ்ணு அவனே யென்பதை ஸீதா விவாஹ விருத்தாந்தத்தால் வால்மீகி தெரிவிக்கிறார்.*

---

*பிறகு விச்வாமித்ரர் ராமலக்ஷ்மணர்களுடனும் மற்ற ரிஷிகளுடனும் அங்கிருந்து வடகிழக்காய் ஜனகருடைய யாகசாலையை நோக்கிச் செல்லும்பொழுது, ராமன், "மஹர்ஷே! ஜனகர் யாகத்திற்காகச் செய்திருக்கும் ஏற்பாடுகள் வெகு ச்லாக்யமானவை. வேதாத்யயனம் செய்த ப்ராஹ்மண ச்ரேஷ்டர்கள் நானா தேசங்களிலிருந்து ஆயிரக் கணக்காய் வந்திருக்கிறார்கள். மஹர்ஷிகளுடைய பர்ணசாலைகள் அநேக வண்டிகளால் சூழப்பட்டு அங்கங்கே விளங்குகின்றன. நமக்கும் வஸிப்பதற்கு ஓரிடத்தை ஏற்படுத்த வேண்டு"மென்றார். அப்படியே விசவாமித்ரர் சுத்தமாய் ஜனக் கூட்ட மில்லாமல் ஜல ஸௌக்யமுள்ள ஓர் ஸ்தலத்தில் தங்கினார். அவர் வந்திருப்பதை அறிந்து, ஜனகர் தன் புரோஹிதரான சதாநந்தரை முன்னிட்டுக்கொண்டு, தீக்ஷை செய்துகொண்டவர்களுக் கேற்பட்ட எல்லையைத் தாண்டாமல் அந்த முனிச்ரேஷ்டரை எதிர்கொண்டழைத்தார்; அவருடைய ரித்விக்குகள் சாஸ்த்ர விதிப்படி அர்க்ய பாத்ய மதுவர்க்கங்களால் காதிபுத்ரரைப் பூஜித்தார்கள். அவர் அதைப் பெற்றுக்கொண்டு அரசனையும் அவர் செய்யும் யாகத்தையும் அங்கு வந்த முனிவர்களையும் ரித்விக்குகளையும் புரோஹிதரையும் பற்றித் தகுந்தபடி க்ஷேமம் விசாரித்துக் கொஞ்சநேரம் அவர்களுடன் பேசிக்கொண்டிருந்தார்.*

பிறகு ஜனகர் விச்வாமித்ரரை நமஸ்கரித்துக் கைகூப்பித், "தாங்களும் இந்த மஹர்ஷிகளும் உத்தமமான ஆஸனங்களில் உட்காரவேண்டு"மென்று ப்ரார்த்தித்தார். அவர்களும் ரித்விக்குகளும் புரோஹிதரும் ஜனகரும் மந்த்ரிகளும் தகுந்த ஆஸனங்களில் உட்கார்ந்தபிறகு, அவ்வரசன் அந்த மஹர்ஷியைப் பார்த்து, "ஸ்வாமி! தாங்கள் மஹர்ஷிகளுடன் இங்கே வந்து எனக்குத் தர்சனங்கொடுத்தபடியால், தேவதைகள் என்மேல் கிருபை செய்து என் யக்ஞத்தை இன்று பூர்த்தி செய்தார்கள்; அதிருக்கட்டும். தங்களைத்தரிசித்ததே நான் செய்யும் யக்ஞத்திற்குப் பலமென்றெண்ணுகிறேன்; தன்யனுனேன்; தங்களுடைய அனுக்ரஹம் பெற்றேன். தாங்களும் இந்த முனிவர்களும் என் யக்ஞசாலைக்கு வந்தீர்களல்லவா? இந்த யாகம் முடிவதற்கு இன்னும் பன்னிரண்டு தினங்கள் செல்லுமென்று ரித்விக்குகள் சொல்லுகிறார்கள். பிறகு ஸாத்யாதினத்தில் தேவதைகள் தங்களுடைய பாகங்களைப் பெற்றுக்கொள்ள இங்கே வருவதைப் பார்க்கலாம். அதுவரையிலிருந்து யாகத்தை நடத்தி என்னை அனுக்ரஹிக்க வேண்டு"மென்று ப்ரார்த்தித்தார்.

பிறகு ராம லக்ஷ்மணர்களைப் பார்த்து அளவற்ற ஆனந்தமடைந்து, மஹர்ஷியை மறுபடியும் வணங்கிக் கைகூப்பி, "பகவான்! தங்களுக்குப் பரம மங்கள முண்டாகட்டும். இந்தக் குழந்தைகள் யார்? பராக்ரமத்தில் தேவதைகளைப் போன்றவர்கள். கம்பீரமான நடையால் யானையையும், சத்ருக்களை அவமதிக்கக்கூடிய நடையால் ஸிம்ஹத்தையும், விரோதிகள் கண்டு நடுங்கும் நடையால் புலியையும், கர்வமுள்ள நடையால் விருஷபத்தையும் ஒத்தவர்கள். தாமரை இதழ் போன்ற விசாலமான நேத்ரங்களால் பார்க்கிறவர்களின் மனஸை அபஹரிக்கிறார்கள். இந்தச் சிறு வயதிலும் மஹாவீரர்கள் தரிக்கும் கத்தி வில் அம்பறை முதலியவைகளை ஸுலபமாய்த் தரிக்கிறார்கள். அழகில் அச்வினிதேவர்களும் இவர்களுக்கீடோ? பால்யம் நீங்கி யௌவனம் ஆரம்பித்திருக்கிறது. தேவலோகத்தில் வஸிக்கும் தேவர்கள் பூலோகவாஸிகளிடத்தில் கிருபை செய்து இங்கே வந்ததுபோலிருக்கிறது. ஆகாசம் பகலில் ஸூர்யனாலும் ராத்ரியில் சந்த்ரனாலும் விளங்குகிறது; ஆனால் ஸூர்யசந்த்ரர்களைப்போன்ற இந்த ராஜகுமாரர்களால் இந்தத் தேசம் ஒரே காலத்தில் ப்ரகாசிக்கிறது. வெகு செல்வமாய் வளர்க்கப்பட்ட குழந்தைகள் இந்தக் காட்டு மார்க்கங்களில் எப்படி நடந்து வந்தார்கள்? எதைக் குறித்து வந்திருக்கிறார்கள்? இவர்களுடைய திவ்யமங்கள விக்ரஹத்தைப் பார்த்தால் ஸகல இச்சை

களும் நிறைவேறின மஹாபுருஷர்களென்று தோன்றுகிறது. ஆகையால் பிறருடைய க்ஷேமத்தை உத்தேசித்தே வந்திருக்கவேண்டும். இவர்களைப் புத்ரர்களால் அடையும் பாக்யத்தைப் பெற்ற மஹான்கள் யார்? அளவு உயரம் நடை உடை பார்வை பேச்சு செய்கை முதலிய லக்ஷணங்களில் இருவர்க்கும் பேதம்கண்டு பிடிப்பது அரிது. ஜனங்கள் ஸஞ்சரிக்க முடியாத இந்த வனங்களின் வழியாய் இந்த ராஜகுமாரர்கள் ச்ரேஷ்டமான ஆயுதங்களைத் தரித்துக் கொண்டு வந்த காரணத்தை விஸ்தாரமாய் எனக்குச் சொல்ல வேண்டும். தங்களை ஆச்ரயித்தவர்களுடைய கஷ்டத்தையும் துக்கத்தையும் தீர்க்க வந்திருக்கிறார்களென்று பொதுவாய் அறிந்தேன். ஆனாலும் இன்னும் நன்றாய் அதின் விஷயங்களை அறிய விரும்புகிறே"னென்றார். அப்பொழுது விச்வாமித்ரர் அவர்கள் தசரத சக்ரவர்த்தியின் புத்ரர்களென்பதையும், தான் செய்யும் யாகத்தை ரக்ஷிப்பதற்காகத் தன்னுடன் வந்து ராக்ஷஸர்களை ஸம்ஹரித்ததையும், விசாலா நகரத்திற்கு வந்ததையும், கௌதமருடைய ஆச்ரமத்தில் அஹல்யையின் சாபத்தைத் தீர்த்ததையும், கௌதமரை ஸந்தித்ததையும், மிதிலையிலுள்ள சிவதனுவின் ஸாரத்தைப் பரீக்ஷிப்பதற்காக அங்கே வந்ததையும் தெரிவித்தார்.

## ஸர்க்கம் 51.

## வஸிஷ்டரும் விச்வாமித்ரரும்.

அதைக் கேட்டுக்கொண்டிருந்த சதாநந்தரென்ற மஹா தபஸ்வி, "ராம! என் தாயைக் கோரமான சாபத்திலிருந்து விடுவித்த மஹாத்மா நீயல்லாவா"வென்று அளவற்ற ஆச்சர்யமடைத்தார். பார்க்கப் பார்க்க ஆனந்தம் பெருகி மயிர்க் கூச்சலுண்டாயிற்று. ஸுகமாய் உட்கார்த்துகொண்டிருக்கும் ராஜகுமாரர்களை மறுபடியும் கண்ணாரப் பார்த்து அந்தக் கௌதமகுமாரர் "முனிவரா! சாம்பில் படுப்பது வாயுபக்ஷணம் முதலிய கடுமையான ப்ராயச்சித்தங்களை அனுஷ்டித்துவந்த மஹாகீர்த்திசாலியான என் தாயை இவருக்குக் காட்டினீர்களா? காட்டில் கிடைக்கும் பதார்த்தங்களால் அவள் இந்த மஹா தேஜஸ்வியை விதிப்படி பூஜித்தாளா? யாவரும் பூஜிக்கத் தகுந்த இந்த மாஹாபுருஷன் அதை அங்கீகரித்தாரா? முன்பு இந்த்ரனால் என் தாய்க்கு நேர்ந்த கெடுதியை விஸ்தாரமாய்

இவருக்குச் சொன்னீர்களா? இவரைத் தர்சித்து ஸகல பாபங்களி லிருந்தும் விடுபட்டுப் பரிசுத்தையாய் என் பிதாவுடன் சேர்ந்து ஸந்தோஷித்தாளா? இந்த மஹா தேஜஸ்வி, அவரால் விதிப்படி அதிதி பூஜையைப் பெற்று இங்கே வந்தாரா? அவர் கோபந்தணிந்து சாந்தமாயிருக்கையில் ராமன் அவரை நமஸ்கரித்தரா" வென்றார்.

பேசும் திறமையுள்ள கௌசிகர், "எந்தெந்தக் காலத்தில் யார் எதைச் செய்யவேண்டுமோ அதெல்லாம் நடந்தது; ஒன்றும் பிசகவில்லை. ஜமதக்னியுடன் ரேணுகை சேர்ந்ததுபோல் உமது மாதா மறுபடியும் கௌதமரை அடைந்தா"ரென்றார்.

அதைக் கேட்டுச் சதானந்தர் "ராம, புருஷோத்தம! க்ஷேமமாய் வந்தீரா? ஒப்பற்ற மஹிமையுள்ள கௌசிகரை முன்னிட்டு இங்கே வந்தது உங்களுடைய பெரும் பாக்யத்தைக் காட்டுகிறது. இந்த மஹா தேஜஸ்வி தபஸால் ப்ரஹ்மர்ஷி பதவியை அடைந்தவர். இவருடைய செய்கை மனவிற் கெட்டாதது. இவர் உமக்குப் பரம அனுக்ரஹத்தைச் செய்யக்கூடியவ ரென்று அறியும். இந்த மஹா தபஸ்வியால் ரக்ஷிக்கப்பட்ட உம்மைக்காட்டிலும் பாக்யவான் மூவுல கத்திலுமில்லை. குசிக வம்சத்திற்கு ரத்ன தீபம்போல் விளங்கும் இந்த மஹானுடைய சரிதத்தையும் தபஸையும் மஹிமையையும் எனக்குத் தெரிந்தவரையில் சொல்லுகிறேன், கேளும்.

ப்ரஹ்மாவிற்கு குசரென்று ஓர் புத்ரர்; அவர் ஸகல வித்யைக ளிலும் நிபுணர்; தர்ம ரஹஸ்யங்களை அறிந்து அனுஷ்டிப்பவர்; ப்ர ஜைகளின் நன்மையையே கோறினவர்; சத்ருக்களை ஜயித்தவர். வெகு காலம் அரசாண்டார். அவருடைய புத்ரன் குசநாபரென்ற தார்மிகர். அவருடைய புத்ரன் காதியென்று ப்ரஸித்தியடைந்தவர். அவருடைய புத்ரன் இந்த விச்வாமித்ர மஹர்ஷி. இவர் அநேக ஆயிர வர்ஷங்கள்வரையில் ராஜ்யத்தை ஆண்டுவந்தார். ஒருக் கால் சதுரங்க ஸைன்யத்துடன் பூமியைச் சுற்றி வந்தார். நாடு நகரம் ஆறு ஏரி மலை வனம் புண்யாச்ரமம் முதலியவைகளைப் பார்த்துக் கொண்டு அக்ஷௌஹிணி ஸைன்யத்துடன் வஸிஷ்ட மஹர்ஷியின் ஆச்ரமத்திற்குப் போனார். அது பலவகைப் பக்ஷிகளாலும் மிருகங் களாலும் நிறைந்து வஸித்த சாரண கந்தர்வ கின்னர தானவ ப்ரஹ்மர்ஷி தேவர்ஷி மஹர்ஷிகள் ஆனந்தமாய் வஸிக்கக்கூடிய ஸ்தலம். மான்கள் பயமின்றி ஸஞ்சரித்தன. கடுந்தபஸ் செய்து சுத்தி அடைந்தஎண்ணிறந்த மஹாத்மாக்கள் அக்னியைப்போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு அங்கே வஸித்தார்கள். சிலர் கிழங்கு வேர்

பழங்களையும், சிலர் சருகுகளையும், சிலர் ஜலத்தையும், சிலர் காற்றையும் புஜிப்பவர்கள்; காமக்ரோதங்களை ஜயித்து ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களை அடக்கி, நிர்மலமான அந்தக்கரணத்தை நிர்விகல்ப ஸமாதியில் நிறுத்தினவர்கள் பலர். ஜப ஹோம வ்ரத அநுஷ்டானங்களில் மனதை நாட்டினவர்கள் பலர். ப்ரஹ்மாவின் வாலிலிருந்துண்டான வாலகில்யர்களும், நகங்களிலிருந்துண்டான வைகானஸர்களும் அங்கே இருந்தார்கள். இப்படி வஸிஷ்டருடைய புண்யாச்ரமம் ப்ரஹ்மலோகத்தைப் போல் விளங்கிக் கொண்டிருப்பதை இந்த ராஜச்ரேஷ்டர் பார்த்தார்.

## ஸர்க்கம் 52.

## வஸிஷ்டர் விருந்து செய்தது.

மஹா பலவானான விச்வாமித்ரர் மிகுந்த ஸந்தோஷ மடைந்து நிகரற்ற தபோ பலமுடைய வஸிஷ்டரை விதிப்படி நமஸ்கரித்தார். அந்த மஹாத்மா இவரை நல்வரவு விசாரித்து ஆஸனங்கொடுத்து, வேர் கிழங்கு பழங்களால் அதிதி பூஜை செய்தார். அதைப் பெற்றுக்கொண்டு இவர் வஸிஷ்டரையும் அவருடைய தபஸையும் அக்னி ஹோத்ரத்தையும் சிஷ்யர்களையும் ஆச்ரமங்களையும் மிருகங்களையும் பற்றி க்ஷேமம் விசாரித்தார். “எல்லாம் ஸௌக்கிய” மென்று வஸிஷ்டர் பதில் சொல்லி, அரசன் ஸுகமாய் உட்கார்ந்த பிறகு அந்த ப்ரஹ்ம புத்ரர் “மஹாராஜ! தங்களுக்கு க்ஷேமமா? ஜனங்களைத் தர்மமாய் ஆண்டு வருகிறீரா? ராஜநீதி தவறாமல் தனத்தைத் தர்மமாய் ஸம்பாதித்து விருத்தி செய்து காப்பாற்றி நல்ல பாத்ரத்தில் உபயோகித்து, ஜனங்களைத் திருப்தி செய்கிறீரா? உமது வேலைக்காரர்களை நன்றாய் போஷிக்கிறீரா? அவர்கள் உமது உத்திரவுப்படி நடக்கிறார்களா? சத்ருக்களை ஜயித்தீரா? உமது ஸைன்யம் நண்பர்கள் பொக்கிஷம் புத்ர பௌத்ரர்கள் பந்து பரிவாரங்கள் குறைவின்றி க்ஷேமமாயிருக்கிறார்களா? இப்படி இருப்பதே எனக்கு மிகுந்த ஸந்தோஷத்தைக் கொடுக்கு”மென்றார். இவர் “மஹர்ஷே! தங்களுடைய அநுக்ரஹத்தால் எனக்கு யாதொரு குறைவுமில்லை”யென்று வணக்கமாய்ப் பதில் சொன்னார்.

பிறகு அவ்விரு தர்மவான்களும் வெகுநேரம் புண்ய கதைகளைப் பேசிக்கொண்டு அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள். அது முடிந்த

வுடன் வஸிஷ்டர் மலர்ந்த முகத்துடன் "மஹாராஜ! நீர் உத்தம ஸ்வபாவமுள்ளவர்; வர்ணாச்ரம தர்மங்களைக் குறைவற அனுஷ்டிப்பவர்; வித்யை வீர்யம் நீதியால் வெகு ப்ரஸித்தியடைந்தவர்; எங்களை ரக்ஷித்து எங்களுடைய தர்மத்தை நடப்பிக்கும் அரசன்; என்னைத் தேடிவந்த அதிதி; எனக்கு ப்ரியமான மித்ரன்; உம்மைப் பூஜிப்பதற்கு இந்தக் காரணங்களில் ஒன்றே போதும். ஆகையால் உமக்கும் ஸைன்யங்களுக்கும் தகுந்தபடி அதிதி பூஜை செய்ய விரும்புகிறேன். அளவற்ற பலத்தையும் மனதிற்கெட்டாத வீர்யத்தையும் படைத்தவர். ஆயினும் என் எண்ணத்தை நிறைவேற்றி என்னாலியன்ற உபசாரத்தை அங்கீகரிப்பீரென்று நம்புகிறே"னென்றார்.

கௌசிகர் "ஸ்வாமி! தாங்கள் இதுவரையில் பழம் கிழங்கு வேர்களாலும், அர்க்யம் பாத்யம் ஆசமனீயத்தாலும் என்னை உபசரித்ததே போதும். 'உனக்கு அதிதி பூஜை செய்ய விரும்புகிறே'னென்ற ப்ரியமான வார்த்தையே அந்த உபசாரத்தைப் பெறும் ஸந்தோஷத்தைக் கொடுத்தது. இது போகட்டும். ஸகல லோகங்களும் பூஜிக்கத் தகுந்த தாங்கள் என்னை ஒரு பொருட்டாயெண்ணி உபசரித்ததே போதும். மஹா புண்ய கர்மங்களின் பலனான தங்களுடைய தர்சனம் எனக்குக் கிடைத்ததைவிட நான் அதிகமாய் என்ன விரும்பப் போகிறேன். தங்களை நமஸ்கரிக்கிறேன். உத்திரவு கொடுத்தனுப்பவேண்டும். என்னையும் தங்களுடைய நண்பனாய் நினைத்துக், கிருபாகடாக்ஷத்தால் பார்க்கவேண்டு"மென்றார். அப்பொழுது, மூன்று காலங்களையும் அறிந்த வஸிஷ்டர், பிறகு நேரும் விஷயங்களைப் பார்த்து விச்வாமித்ரரைப் பலதடவை நிர்ப்பந்தித்துத், தன் அதிதி பூஜையைப் பெற்றுக்கொள்ளவேண்டு மென்றார். கௌசிகர் "ஸ்வாமி! தாங்கள் இவ்வளவு தூரம் சொல்லும் பொழுது நான் தடுப்பது உசிதமல்ல. தங்களுக்கு வீண் சிரமத்தைக் கொடுக்க வேண்டுமே யென்ற கவலையைத் தவிற வேறு ஆக்ஷேபமில்லை. இஷ்டப்படியே ஆகட்டு"மென்றார். அப்பொழுது அந்த மஹா தேஜஸ்வி விசித்ரமான நிறமுடைய சபலையென்ற பசுவைப் பார்த்துப் "பெண்ணே! சீக்ரமாய் வா. நான் சொல்வதைக் கேள். இந்த ராஜர்ஷிக்கும் இவருடைய ஸைன்யத்திற்கும் தகுந்தபடி விருந்து செய்ய விரும்புகிறேன். யாருக்கு எது இஷ்டமோ அந்த அன்னம் பக்ஷ்யம் பானம் ரஸம் அறுசுவை பதார்த்தங்கள், கடித்துத் தின்னக்கூடிய முறுக்கு முதலியவை, குடிக்கக் கூடிய பானம் முதலியவை, நக்கிச் சாப்பிடக்கூடிய தேன் முதலியவை, உறிஞ்சக்கூடிய தயிர்

முதலியவை, பலவகை வாஸனை த்ரவியங்கள், புஷ்பங்கள் பூச்சுகள், தாம்பூலம் யாவும் நினைத்தவுடன் குறைவின்றி பொழிய வேண்டும். விரும்பின யாவற்றையும் உடனே கொடுக்கும் சக்தியுள்ள காமதேனுவல்லவா? எனக்காக இவை யாவையும் வெகு சீக்ரத்தில் ஸித்தஞ்செய்''யென்றார்.

## ஸர்க்கம் 53.

### விச்வாமித்ரர் காமதேனுவை யாசித்தது.

வஸிஷ்டரோ ப்ரஹ்மாவின் புத்ரர்; பாப லேசமற்றவர்; புண்ய நிதி; தபஸால் நிகரற்ற தேஜஸுள்ளவர்; மந்த்ரங்களுக்கு உத்பத்தி ஸ்தானம். அந்த மஹாத்மா உத்திரவு செய்தவுடன் யார் எதை விரும்பினார்களோ அதைச் சபலை உடனே எல்லையில்லாமல் பொழிந்தது. கரும்பு ரஸங்கள், தேன், பொரி, மைரேய மென்ற பானம், பானகம், அப்பம், வடை, மலைபோன்ற உஷ்ணமான அன்னக் குவியல்கள், சித்ரான்னங்கள், பாயஸ வகைகள், நெய் வாய்க்கால்கள், தயிர் ஏரிகள், ருசியுள்ள ரஸவகைகள், வெல்லப் பக்ஷணங்கள் இன்னும் மனதால் நினைக்கக்கூடிய போஜன பதார்த்தங்களும் நினைத்தவுடன் கிடைத்தன. கௌசிகருடைய பெண்டு பிள்ளை, பந்து பரிவாரம், ஸைன்யம், மந்த்ரி புரோஹிதர் ப்ராஹ்மணர் ஸேனாபதி வேலைக்காரன் முதலிய அனைவரும், வஸிஷ்டருடைய உபசாரத்தாலும் விருந்தாலும் அளவற்ற ஸந்தோஷ மடைந்து, வேண்டியவரையில் ஸகல ஸுகங்களையும் அனுபவித்தார்கள். விச்வாமித்ரர் அளவற்ற ஆனந்த மடைந்து வஸிஷ்டரை நமஸ்கரித்து ''ஸ்வாமி! எல்லோரும் தங்களைப் பூஜிக்கவேண்டியிருக்கத், தாங்களே என்னையும் என்னைச் சேர்ந்தவர்களையும் எல்லை மீறிப் பூஜித்தீர்கள். என்னைப் போன்ற க்ஷத்ரியன் தங்களைப் போன்ற ப்ரஹ்மஞானியால் இப்படி உபசரிக்கப்படுவது பூர்வ ஜன்ம புண்யபலமின்றி வேறல்ல. தங்களுடைய தபோ பலத்தையும் மஹிமையையும் பார்க்கையில் ஒரு ப்ரார்த்தனை செய்ய விரும்புகிறேன். ஞானநிதியும் பேசுந் திறமையில் நிகரற்றவருமான தங்களிடத்தில் நான் என்ன சொல்லப்போகிறேன். அநேக லக்ஷம் பசுக்களைக் கொடுக்கிறேன். இந்தச் சபலையை எனக்குக் கொடுங்கள். உத்தம பதார்த்தங்கள் அரசனிடத்திலிருக்க

வேண்டுமென்பது ராஜ தர்ம மல்லவா? ஆகையால் இ.து என்னிடத்திலிருப்பதே ந்யாய''மென்றார்.

அப்பொழுது வஸிஷ்டர் ''மஹாராஜ! பசுக்களை லக்ஷ லக்ஷமாயும் கோடி கோடியாயும் கொடுத்தாலும் சபலையைக் கொடுக்கமாட்டேன். வெள்ளியை மலை மலையாய்க் குவித்தாலும் சபலையைக் கொடுக்கமாட்டேன். பெருந்தன்மையுள்ளவனை விட்டுக், கீர்த்தி பிரிந்திருக்குமா? அப்படி இந்தச் சபலை என்னிடத்தில் எப்பொழுதும் இருக்கும் பதார்த்தம். என்னை விட்டு இதைப் பிரிக்கமுடியாது. தேவதைகளுக்காகச் செய்யும் ஹவ்யங்களும், பிதிருக்களுக்காகச் செய்யும் கவ்யங்களும், காலை மாலையில் செய்யும் அக்னிஹோத்ரமும், ப்ராணனைக் காப்பாற்றும் வஸ்துவும், பூதபலியும், தர்ச பூர்ணமாஸங்களில் (அமாவாஸ்யை பௌர்ணிமை) செய்யும் ஹோமங்களும் இந்தச் சபலையால் நடக்கவேண்டியவை. ஸ்வாஹாகாரம், வஷட்காரமென்ற க்ரியைகளும் இதனால் நடக்கின்றன. இதன் பால் தயிர் நெய் முதலியவைகளைக் குடிப்பதால் பலம் சித்தசுத்தி புத்திக்கூர்மை மனவில் சாந்தி முதலியவை உண்டாகி, வேதாங்க வித்யை கலை சாஸ்த்ரங்கள் ஸுலபமாய்க் கிடைக்கின்றன. எனக்குள்ள தனதான்யமும் செல்வமும் ஸந்தோஷ காரணமும் இதே. இந்தக் காரணங்களாலும் உமக்குச் சொல்ல முடியாத பல காரணங்களாலும் சபலையை உமக்குக் கொடுக்கமாட்டே''னென்றார்.

அதைக் கேட்ட விசுவாமித்ரருக்கு ஆசை அதிகரித்தது. ''பதினாயிரம் மத யானைகளைத் தங்க அரைப்பட்டை சங்கிலி மாவட்டி அம்பாரி முதலியவைகளுடன் கொடுக்கிறேன். நான்கு வெள்ளைக்குதிரைகள் பூட்டித் தங்கச் சலங்கைகள் மதுரமாய் ஒலிக்கும் எண்ணூறு தங்க ரதங்களைக் கொடுக்கிறேன். காம்போஜம் பாரஹ்லீகம் முதலிய தேசங்களிலுண்டாகிக், கந்தர்வ குலத்தில் பிறந்த பதினோராயிரம் உத்தம அச்வங்களைக் கொடுக்கிறேன். நானு வர்ணங்களை யுடைய நல்ல யௌவனமுள்ள கோடிப் பசுக்களைக் கொடுக்கிறேன். இந்தச் சபலையை எனக்குக் கொடுக்கவேண்டு''மென்று பரார்த்தித்தார். மிகவும் சாதுர்யமாயும் தந்த்ரமாயும் கௌசிகர் சொல்ல, வஸிஷ்டர் ''எவ்விதத்தாலும் சபலையைக் கொடுக்கமாட்டேன். ஸகல ரத்னங்களும் தனமும் ப்ராணனும் எனக்கு இதே. அமாவாஸ்யை பூர்ணிமை க்ரியைகளும் யாகயக்ஞங்களும் வைதிக லௌகிக கார்யங்களும் இதனாலேயே நடக்கவேண்டும், ஏன் வீணாய் ச்ரமப்படுகிறீர்? நீர் கொடுக்கக்கூடியவைகளையும் கொடுக்க முடியாதவைகளையும் நினைத்தவுடன்

எல்லையில்லாமல் பொழியும் சபலையை உமக்குக் கொடுப்பேனு”வென்றார்.

## ஸர்க்கம் 54.

## சபலை யுத்தஞ் சய்தது.

வஸிஷ்டர் அந்தப் பசுவைக் கொடுக்கமாட்டாரென்று அறிந்து விச்வாமித்ரர் அதைப் பலவந்தமாக இழுக்க ஆரம்பித்தார். அது அழுதுகொண்டு வெகு துக்கத்துடன், “நான் இந்த மஹர்ஷிக்கு யாதொரு அபராதமும் செய்யவில்லையே. அவருக்கு என்னிடத்தில் மிகுந்த ப்ரீதி. எனக்கும் அவரிடத்தில் எல்லையற்ற பக்தி. ஆயினும் என்னைக் கைவிட்டுப் பிறர் அபஹரிக்கும்படி ஏன் பார்த்துக்கொண்டிருக்கிறா”ரென்று அடிக்கடி பெருமூச்சுவிட்டு, ராஜஸேவகர்களை மூலைக்கு மூலை உதறி அடித்து, வாயு வேகத்துடன் வஸிஷ்டருடைய பாதங்களில் விழுந்து, “ஸ்வாமி! ப்ரஹ்மபுத்ர! தாங்கள் என்னைக் கைவிட்டீர்களோ? தள்ளி விட்டீர்களோ? இந்த ராஜ சேவகர்கள் என்னைப் பலாத்காரம் செய்கிறார்களே. உத்திரவு செய்யுங்க”ளென்று, மஹா மேகங்களையும் துந்துபி முதலிய வாத்யங்களையும் போல கம்பீரமாய் கோவென்றலறிப் ப்ரலாபித்தது. வஸிஷ்டர் தன்னுடன் பிறந்தவளைப்போல் அருமையான சபலை சோகத்தால் தபிப்பதைப் பார்த்துப் பொறுக்காமல், “பெண்ணே! உன்னைக் கைவிடவில்லை. எனக்கு நீ யாதொரு அபராதமும் செய்யவில்லை. இந்த மஹா பலவானுன அரசன் பலக் கொழுப்பால் உன்னை இழுத்துக் கொண்டு போகிறார். அவருடைய அக்ஷௌஹிணி ஸைன்யமெங்கே? காட்டில் தவம் செய்யும் என் பல மெங்கே? மேலும், இவர் நம்மை ஆளும் அரசன். தபோபலத்தால் இவரைத் தண்டிப்பது ந்யாயமல்ல. க்ஷத்ரிய குலத்தில் பிறந்தவர்; பூபாலன்; விசாலமான ராஜ்யத்திற்கு அதிபதி; அஸ்த்ர சஸ்த்ரபலம் பொருந்தினவர்; சதுரங்க ஸைன்யமும் உதவியாயிருக்கிறது. என்னால் என்ன முடியு”மென்றார். சபலை அவரை வணங்கி “ஸ்வாமி! தாங்கள் ப்ரஹ்ம புத்ரர்; ப்ரஹ்ம ரிஷிகளுக்குள் மேலானவர்; தபஸால் எல்லையற்ற தேஜஸுள்ளவர்; ப்ராஹ்மணனுடைய தபோ பலத்திற்கு முன் க்ஷத்ரியனுடைய பலம் எம்மாத்ரம்? அதிலும் தங்களுடைய மஹிமையோ மனோவாக்கிற் கெட்டாதது. தங்களைக்காட்டிலும் பலவான் யார்? விச்வாமித்திரர் மஹா வீரனே. தங்களுடைய தேஜஸை நெருங்கமுடியுமோ? தங்க

னுடைய மந்த்ர பலத்தால் என் சக்தி வளர்ந்திருக்கிறது. என்னை அனுப்புங்கள். இந்தத் துஷ்டனுடைய பலத்தையும் கொழுப்பையும் ஒரு க்ஷணத்தில் அழிக்கிறே''னென்றது. வஸிஷ்டர் "சத்ருக்களை ஜயிக்கும் ஸைன்யத்தை உண்டாக்''கென்று ஆக்ஞாபித்தார்.

உடனே அது "ஹம்பா''வென்று கத்திற்று. அந்தச் சப்தத்திலிருந்து எண்ணிறந்த பப்லவர்கள் உண்டாகி, கௌசிகருடைய ஸைன்யத்தை அவருக் கெதிரிலேயே நாசஞ்செய்தார்கள். அவர் அடங்காக் கோபங்கொண்டு, கண் சிவந்து, ரதத்திலேறி அந்தப் பப்லவர்களை அஸ்த்ர சஸ்த்ரங்களால் கொன்றார். உடனே சபலை எண்ணிறந்த சகர்களையும் யவனர்களையும் ஸிருஷ்டித்தது. அவர்களோ மஹா பலவான்கள். தங்கத்தாமரைத் தாதுவைப் போன்ற நிறமுள்ளவர்கள். நீண்ட பட்டாக் கத்திகளுடன் தங்க நிறமுள்ள ஆடையணிந்து, கொழுந்துவிட்டெரியும் நெருப்பு, பஞ்சுப் பொதியில் பிடித்ததுபோல் கௌசிகருடைய ஸைன்யத்தில் விழுந்து அதை எரித்தார்கள். அவர் கோபங்கொண்டு பல அஸ்த்ரங்களால் யவன காம்போஜ பப்லவர்களைத் துண்டு துண்டாய் வெட்டித் தள்ளினார்.

## ஸர்க்கம் 55.

## விச்வாமித்ர வஸிஷ்ட யுத்தம்.

வஸிஷ்டர் "ஹே, சபலே! உன் யோக பலத்தால் இன்னும் பல ஸைன்யங்களை உண்டாக்''கென்றார். அது ஹம்பாவென்று கத்திற்று; அதிலிருந்து காம்போஜர்களும், மடியிலிருந்து பப்லவர்களும், பெண் குறியிலிருந்து யவனர்களும், சாணத்திலிருந்து சகர்களும், மயிர்க்கால்களிலிருந்து ம்லேச்சர்களும் ஹாரீதர்களும் கிராதர்களும் உண்டானார்கள். அரசனுடைய சதுரங்கபலம் அக்ஷௌஹிணிமுழுவதும் ஒரு க்ஷணத்தில் அழிந்தது. பிறகு அவருடைய நூறு புத்ரர்கள் ஆயுதங்களுடன் கோபத்தால், ஜ்வலித்துக்கொண்டு வஸிஷ்டரை எதிர்க்க ஓடி வந்தார்கள். மந்த்ர ஸ்வரூபியான அந்த மஹர்ஷி அவர்களை "ஹம்''மென்று அதட்டினார். உடனே அவர்கள் சாம்பலானார்கள். தன் புத்ரர்கள் ஒரு நிமிஷத்தில் மடிந்ததையும் சதுரங்க ஸைன்யம் அழிந்ததையும் கண்டு, அவ்வரசனுக்குச் சொல்ல முடியாத வெட்கமும் கவலையுமுண்டாயிற்று. அலை ஓய்ந்த கடலைப்போலும், விஷப்பற்கள் பிடுங்கப்பட்ட, மஹா நாகத்தைப்

போலும், ராஹுவால் பிடிக்கப்பட்ட ஸூர்யனைப் போலும் திடீரென்று காந்தியை இழந்தார். புத்ரர்களையும் ஸைன்யத்தையும் பறிகொடுத்துக், கொழுப்பழிந்து உத்ஸாஹமற்று, மனந்தளர்ந்து, இற கொடிந்த பக்ஷியைப் போல் தீனரானார். மிகுந்திருந்த ஓர் புத்ரனிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்துக் "குழந்தாய்! இதை ராஜநீதிப்படி ஜாக்ரதையாய் ஆளக்கடவா"யென்று கட்டளையிட்டுத், தேவ கந்தர்வ கின்னர கணங்கள் வஸிக்கும் ஹிமயமலைச்சாரலில் வெகுகாலம் சங்கரனைக்குறித்துக் கடுந்தவம் செய்தார். தேவதேவரான உமாபதி, அவருடைய தபஸால் மகிழ்ந்து, அவருடைய இஷ்டத்தை நிறைவேற்ற ப்ரஸன்னரானார். "மஹாராஜ! எதை வேண்டித் தபஸ் செய்கிறீர்? கேட்ட வரங்களைக் கொடுக்கிறேன். என்ன வேண்டு" மென்றார். கௌசிகர் சங்கரனை வணங்கிக் கைகூப்பி "ஸ்வாமி! தாங்கள் என் தபஸால் திருப்தியடைந்தால், அங்கம் உபாங்கம் உபநிஷத் ரஹஸ்யம் முதலியவைகளுடன் தனுர்வேதத்தை எனக்கருள வேண்டும். தேவ தானவ கந்தர்வ யக்ஷ ராக்ஷஸர்களுக்கும் மஹர்ஷிகளுக்கும் எந்த அஸ்த்ரங்கள் தெரியுமோ அவை யாவும் எனக்குத் தெரிய வேண்டு"மென்று ப்ரார்த்தித்தார். அப்படியே ஆகட்டுமென்று சங்கரன் அனுக்ரஹித்துக், கைலாஸத்திற்குப் போனார்.

விச்வாமித்ரர் க்ஷத்ரியர்; மேலும், அரசன்; மேலும் சங்கரனிடத்திலிருந்து திவ்யாஸ்த்ரங்களைப் பெற்று விட்டார். கர்வத்தால் மெய் மறந்தார். ஸமுத்ரம் பர்வகாலங்களில் பொங்குவதுபோல் அவருடைய வீர்யம் வளர்ந்தது. வஸிஷ்டரைக் கொன்றுவிட்டேனென்று முடிவுசெய்தார். அதிவேகத்துடன் அவருடைய ஆச்ரமத்திற்குப் போய், தன் அஸ்த்ர பலத்தால் அதை ஒரு க்ஷணத்தில் சாம்பலாக்கினார். அவர் வருவதைக் கண்டு அங்கிருந்த முனிவர்களும் வஸிஷ்டருடைய சிஷ்யர்களும் மிருகங்களும் பக்ஷிகளும் பயத்தால் நடுங்கி, மூலைக்கு மூலை சிதறி ஓடினதால், அந்தப் புண்ய ஸ்தலம் ஒரு க்ஷணத்தில் சப்தமின்றி ப்ராணி ஸஞ்சாரமில்லாமல் பாலைவனம்போலாயிற்று. "நீங்கள் சற்றேனும் பயப்படவேண்டாம். ஸூர்யன் பனியை நாசஞ்செய்வதுபோல் இந்தக் காதிபுத்ரனை இப்பொழுதே கொல்லுகிறே"னென்று வஸிஷ்டர் எவ்வளவு தடுத்தும் அவர்கள் நிற்கவில்லை. அந்த ரிஷிக்குக் கோபமுண்டாயிற்று. "மூடா! வெகு காலமாய் எண்ணிறந்த ஸாதுக்களுக்கு இருப்பிடமான இந்தப் புண்யாச்ரமத்தை அழித்தாயல்லவா? உன் கெட்ட நடத்தை உன்னையே கொல்லு"மென்று யம தண்டத்தையும் புகையற்றுக் கொழுந்துவிட்டெரி

யும் காலாக்னியையும்போல் ஜ்வலிக்கும தன் ப்ரஹ்ம தண்டத்தைக் கையிலெடுத்தார்.

## ஸர்க்கம் 56.

## விச்வாமித்திரர் தோற்றது.

அதைக் கேட்டு விச்வாமித்ரர் ஆக்னேயாஸ்த்ரத்தை எடுத்து, "ஓய் வஸிஷ்டரே! ஓடாதேயும், நில்லும் நில்லு"மென்று அதட்டினார். அந்த ரிஷி ப்ரஹ்ம தண்டத்தை உயரத் தூக்கி வெகு கோபத்துடன் "க்ஷத்ரியப்பதரே! நான் ஓடவில்லை. இதோ நிற்கிறேன். உன் பலத்தை ஒளிக்காமல் காட்டு. உன் கொழுப்பையும் நீ பெற்ற அஸ்த்ரங்களின் சக்தியையும் இதோ நாசம் செய்கிறேன். உன் க்ஷத்ரியபல மெங்கே? மஹா தபஸால் ஸம்பாதிக்கப்பட்ட என் ப்ரஹ்மபலமெங்கே? அதின் மஹிமையை இப்பொழுது அறிவா" யென்று, நீர்த்தாரைகள் நெருப்பை அணைப்பதுபோல், ஆக்னேயாஸ்த்ரத்தை ப்ரஹ்மதண்டத்தால் நாசம் செய்தார். பிறகு வாருணம் ரௌத்ரம் ஐந்த்ரம் பாசுபதம் ஐஷீகம் மானவம் மோஹனம் காந்தர்வம் ஸ்வாபானம் ஜ்ரும்பனம் மாதனம் ஸந்தாபனம் விலாபனம் சோஷணம் தாரணம் வஜ்ரம் ப்ரஹ்ம பாசம் காலபாசம் வருணபாசம் பைநாகம் நீரிடி நெருப்பிடி தண்டம் பைசாசம் க்ரௌஞ்சம் தர்ம சக்ரம் காலசக்ரம் விஷ்ணுசக்ரம் வாயவம் மதனம் ஹயசிரஸ் இரண்டு வித சக்திகள், கங்காளம் முஸலம் வைத்யாதரம் காலம் த்ரிசூலம் காபாலம் கங்கணம் முதலிய பல அஸ்த்ரங்களை விச்வாமித்ரர் வஸிஷ்டர்மேல் பொழிந்தார். அவை யாவையும் அந்த ப்ரஹ்மபுத்ரர் தன் ப்ரஹ்மதண்டத்தால் விழுங்கினார். அவைகளால் அவருக்கு யாதொரு கெடுதியும் நேராததைக் கண்டு ஸகல ப்ராணிகளும் ஆச்சர்யமடைந்தன. அவை பயனற்றதைக் கண்டு கௌசிகர் ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகித்தார். அக்னி முதலிய தேவர்களும் தேவர்ஷிகளும் கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் உரகர்களும், மூவுலகிலுள்ள ஸகல ஜந்துக்களும், "ஐயோ! ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகிக்கிறாரே! வஸிஷ்டருக்கு என்ன கதி நேருமோ"வென்று பயந்து திகைத்தன. ப்ரஹ்ம வித்யையை அப்யஸித்ததா லுண்டான நிகரற்ற தேஜஸால் நிறைந்த அந்த ப்ரஹ்மதண்டம், விச்வாமித்ரருடைய மஹா கோரமான ப்ரஹ்மாஸ்த்ரத்தையும் விழுங்கிற்று. அப்பொழுது

வஸிஷ்டருடைய ரூபத்தைப் பார்த்து மூவுலகிலுள்ள ப்ராணிகள் பயந்து நடுங்கின. மயிர்க்கால்களிலிருந்து ஸூர்யகிரணங்களைப் போன்ற நெருப்புப் பொறிகள் புகையின்றி சுற்றிலும் விழுந்தன. அவருடைய ப்ரஹ்ம தண்டம், ப்ரஹ்மாஸ்த்ரத்தின் சக்தியை விழுங்கினதால், யமதண்டத்தைப்போலும், புகையற்ற காலாக்னியைப் போலும் ப்ரகாசித்தது.

அப்பொழுது முனிகணங்கள் மந்த்ரநிதியான வஸிஷ்டரைக் கொண்டாடி, "ப்ரஹ்மர்ஷியே! தங்களுடைய பலம் வீணாகுமோ? கௌசிகரால் விடப்பட்ட ப்ரஹ்மாஸ்த்ரத்தின் தேஜஸைத் தங்களுடைய மஹிமையால் அடக்கவேண்டும். விச்வாமித்ரர் மஹா தபஸ்வியானாலும் தங்களால் ஜயிக்கப்பட்டார். இந்த அஸ்த்ரங்களின் உஷ்ணத்தால் லோகங்கள் தபிக்கின்றன; க்ருபை செய்யுங்கள். ப்ராணிகளுக்கு உபத்ரவமில்லாமல் காப்பாற்றுங்க" ளென்று வேண்டினார்கள். வஸிஷ்டரும் தன் கோபத்தைத் தணித்துக்கொண்டார். கௌசிகர் தோல்வியடைந்து வெட்கத்தாலும் வருத்தத்தாலும் பெருமூச்செறிந்து, "க்ஷத்ரிய பலத்தைச் சுடவேண்டும். ப்ரஹ்மதேஜஸின் பலமே பலம். என்ன ஆச்சர்யம்! வெகுகாலமாகக் கடுந்தவம் செய்து சங்கரனை ஆராதித்து அவரிடத்திலிருந்து பெற்ற திவ்யாஸ்த்ரங்களை இந்த ப்ராஹ்மணன், கேவலம் தபஸ்வி, ஓர் ப்ரஹ்மதண்டத்தால் க்ஷணத்தில் அழித்து விட்டாரே! க்ஷத்ரியனுக்குரிய காமக்ரோதங்களை விட்டு மஹா தபஸ் செய்து வஸிஷ்டரைப்போல் ப்ராஹ்மணனாகி ப்ரஹ்மர்ஷி பதவியை அடைவே"னென்று ப்ரதிக்ஞை செய்தார்.

## ஸர்க்கம் 57.

## த்ரிசங்கு.

இப்படி வஸிஷ்டரால் தனக்கு நேர்ந்த அவமானத்தை நினைத்து நினைத்து, மனங்கொதித்து அடிக்கடி பெருமூச்சுவிட்டுக், கௌசிகர் அந்த ப்ரஹ்மக்ஞானியிடத்தில் எல்லையற்ற த்வேஷமடைந்தார். தன் மனைவியுடன் தெற்கே சென்று, இந்த்ரியங்களை அடக்கிக், கிழங்கு வேர் பழங்களையே புஜித்துக்கொண்டு கடுந்தவம் செய்தார். பிறகு அவருக்கு ஹவிஷ்யந்தன், மதுஷ்யந்தன், த்ருடநேத்ரன், மஹாரதனென்ற அநேக புத்ரர்கள் பிறந்தார்கள்,

அவர்கள் ஸத்யத்திலும் தர்மத்திலும் மனம் நாடினவர்கள். இப்படிக் காமக்ரோதங்களை முற்றிலும் விலக்காமல் செய்த தபஸ் பூர்ணமாய்ப் பலிக்கவில்லை. ஆயிரம் வர்ஷங்களுக்குப் பிறகு ப்ரஹ்மா அங்கே வந்து, "குசிகபுத்ர! உன் தபஸால் ராஜர்ஷிகள் அடையும் லோகங்களை ஸம்பாதித்தபடியால் உன்னை ராஜர்ஷியாக அங்கீகரிக்கிறே"னென்று மதுரமாய் அனுக்ரஹித்துத் தேவர்களுடன் ப்ரஹ்ம லோகம் போனார்.

விச்வாமித்ரர் வெட்கத்தால் தலைகுனிந்து அளவற்ற துக்கத்தால் நொந்து தீனமாய், "நான் செய்த தபஸோ வெகு கோரமானது; அப்படியும் ராஜர்ஷி பதவி கிடைத்ததேயொழிய நான் விரும்பின ப்ரஹ்மர்ஷி பதவி கிடைக்கவில்லையே! இதுவரையில் செய்த தபஸ் பயனற்றதென்றே சொல்லலா"மென்று நிச்சயித்து, முன்னைவிடக் கடும் ப்ரயத்னங்களைச் செய்து அதிகோரமான தபஸை அனுஷ்டித்தார்.

அக்காலத்தில் இக்ஷ்வாகு வம்சத்தில் வந்த த்ரிசங்கு அயோத்யையில் ஆண்டான். அவன் ஸத்யம் தவறாதவன்; இந்த்ரியங்களை அடக்கினவன்; தான் யாகஞ்செய்து அந்தச் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போகவேண்டுமென்ற எண்ண முண்டாயிற்று. தன் குல குருவான வஸிஷ்டரிடத்தில் அதைத் தெரிவிக்க அவர், "குழந்தாய்! இதைச் செய்விக்க என்னால் முடியும். பலர் இவ்வழியால் ஸ்வர்க்கமடைந்திருக்கிறார்கள். மனித சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போகிறானென்று சுருதி சொல்லுகிறது. ஆனால் சென்ற கல்பங்களில் நடந்த விருத்தாந்தத்தை ஆலோசித்துப் பார்க்கும்பொழுது இவ்விதமான கர்மபலன் உனக்குக் கிடைக்காது. ஆகையால் இதைப்பற்றி நீ முயற்சி செய்யவேண்டா"மென்றார்.

அவ்வரசன் அதைக் கேட்டு தெற்கே சென்று வஸிஷ்ட புத்ரர்கள் அக்னியைப் போல் ஜ்வலித்துக் கொண்டு தவஞ் செய்யுமிடத்திற்கு வந்தான். தன் குரு புத்ரர்களை நமஸ்கரித்துப் பூஜித்து, வஸிஷ்டரால் தான் தடுக்கப்பட்டதை நினைத்து வெட்கத்தால் சற்றுத் தலை குனிந்து அந்த மஹாத்மாக்களைக் கைகூப்பி வணங்கி, "எல்லோரும் சரணமடையத் தகுந்த தங்களைச் சரணமடைகிறேன். என்னை ரக்ஷியுங்கள். 'எங்கள் பிதா உன் குருவல்லவா? அவரைச் சரணமடை'யென்றால் அப்படிச் செய்தும் அவர் என்னை அங்கீகரிக்கவில்லை. மனுஷ்ய சரீரத்துடன் ஸ்வர்க்கம் போக ஒரு மஹா யக்ஞத்தைச் செய்ய விரும்புகிறேன். தாங்கள் அநுமதி கொடுத்து

நடப்பித்து என்னை அனுக்ரஹிக்க வேண்டும். தாங்கள் ப்ராஹ்ம ணோத்தமர்கள். உத்தமமான தவஞ்செய்கிறவர்கள். குரு புத்ரர்கள். உங்களெல்லோரையும் அடிபணிந்து தலைவணங்கி வேண்டுகிறேன். குருவால் தடுக்கப்பட்ட எனக்குக் குரு புத்ரர்களைத் தவிர வேறு கதி யில்லை. இக்ஷ்வாகு வம்சத் தரசர்களுக்குப் புரோஹிதரான வஸிஷ்ட ரே பரகதி. அரசர்களுக்கு எவ்வித ஆபத்து நேர்ந்தாலும் தீர்த்து வைப்பார். எதைக் கோறினாலும் அதை அனுக்ரஹிப்பார். அவர் என்னை ரக்ஷிக்காவிட்டால் அதற்கடுத்த தாங்களே எனக்குப் பரதைவ"மென்றான்.

---

## ஸர்க்கம் 58.

(தொடர்ச்சி.)

அதைக் கேட்ட வஸிஷ்ட புத்ரர்கள் அடங்காக் கோபங் கொண்டு, "அடே, துர்ப்புத்தி பிடித்தவனே! எங்கள் பிதா ஸத்யம் தவறாதவர். அவர் ஒரு விஷயத்தைச் செய்யக்கூடா தென் றால் அது எக்காலத்திலும் நடக்குமா? ஸத்யமே அவருடைய வார்த் தையாய் விளங்குகிறது. அதற்குக் கட்டுப்படாமல் அவரைக் கை விட்டு வேறு கிளையைப் பற்றத் துணிந்தாயோ? இக்ஷ்வாகு வம்சத் தரசர்கள் யாவர்க்கும் புரோஹிதரான வஸிஷ்டரே பரம குரு வென்றும் பரகதி யென்றும் நீயே சொல்லிவிட்டு, அந்த மஹாத் மாவின் வார்த்தையை மீறத் துணிந்தாயல்லவா? எவனாவது ஸ்வப்னத்திலும் அப்படிச் செய்ய முடியுமா? ப்ரஹ்ம புத்ரரான வஸிஷ்ட பகவான் முடியாதென்ற யாகத்தை அவருடைய புத்ரர்களும் சிஷ்யர்களுமான நாங்கள் மாத்ரம் செய்யமுடியுமா? நீ ராஜச்ரேஷ்டனென்று பெயர்பெற்றும் ஒன்றுந் தெரியாத மூடன். உன் குருவையே மறுபடியும் சரணமடை. மூவுலகத்திலுள்ள எவனுக்கும் எந்தப் பதவியும் கிடைக்கும்படி யாகம் செய்விக்க அவர்க்கே திறமையுண்டு. அவருக்கு விரோதமாக இந்த யாகத்தைச் செய்வித்து அவரை அவமானஞ் செய்ய எங்களுக்குச் சக்தியுண் டென்று எண்ணினாயோ? அந்தக் கார்யத்திற்கு எங்களைத் தவிர வேறு மனுஷ்யர்கள் கிடைக்க வில்லையோ? போ"வென்றார்கள். இப்படி அவர்கள் கடுங்கோபத்துடன் சொல்லக் கேட்டு, த்ரிசங்கு சற்றும் கலங்காமல் "என் குலகுரு என்னைக் கைவிட்டார். ரிஷிபுத் ரர்களான நீங்களும் கைவிட்டீர்கள். ஆனால் இதற்காக என் எண் ணத்தை நிறைவேற்றாமல் விடுவதில்லை. வேறு யாரையாவது சரண

மடைந்து என் கார்யத்தை முடித்துக் கொள்ளுகிறேன். தபஸின் மஹிமையாலும் பலத்தாலும் இப்படி நீங்கள் சொல்லுவது உங்களுக்குத் தகும். போய்வருகிறேன். உங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டுமெ”ன்று அங்கிருந்து புறப்பட்டான். வஸிஷ்ட புத்ரர்கள் அந்தக் கோரமான வார்த்தையைக் கேட்டு ஆச்சர்யத்தால் மெய் மறந்தார்கள். தபோநிதியும் ப்ரஹ்ம புத்ரரும் மஹர்ஷியும் ஞானத்திலும் சக்தியிலும் நிகரற்றவருமான வஸிஷ்ட பகவானைக் குல குருவாயடைந்து, அவரை வேண்டாமென்று தள்ளிவிட்டு, வேறொருவரைச் சரணமடையப் போவதென்ற வார்த்தையே அவர்களுக்கு மஹா கோரமாய்த் தோன்றிற்று. “அடே, துஷ்டா! சண்டாளனாகக் கடவா”யென்று கடுங்கோபத்துடன் சபித்தார்கள். “இந்தப் பாபியைப் பார்த்தாலும் நமக்குப் பயமுண்’டென்று பயந்து தங்களுடைய ஆச்ரமங்களில் புகுந்தார்கள்.

அன்று ராத்ரி முடிந்தவுடன் த்ரிசங்கு சண்டாளனானான். தங்க வர்ணமுள்ள அவனுடைய சரீர காந்தி அழிந்து கறுத்த நிறம் வந்தது. அவயவங்கள் பார்க்க விகாரமாயின; தலைமயிர் குறுகிப் பருத்து அலங்கோலமாயிற்று. அவன் தரித்த பீதாம்பரம் சண்டாளர்கள் உடுக்கும் கறுத்த வஸ்த்ரமாயிற்று. பிணங்களுக்குப் போடும் மாலைகள் கழுத்தில் தொங்கின. பிணங்களை எரித்த சாம்பல் நிறமுள்ள பூச்சுகள் தேஹத்தில் காணப்பட்டன. கிரீட குண்டல ஹார கேயூர மணிமகுடம் முதலிய ஆபரணங்கள் யாவும் சண்டாளர்கள் அணியும் இரும்பு ஆபரணங்களாயின. மார்பில் ப்ரகாசித்த யக்ஞோபவீதம் தோல் வாராயிற்று. அவனுடன் வந்த மந்த்ரிகளும் பரிவாரங்களும் நகரத்து ஜனங்களும் அந்தச் சண்டாள ரூபத்தைக் கண்டு ஓடிவிட்டார்கள். த்ரிசங்கு ஒண்டிபாய் துக்கத்தால் நொந்து, வெட்கத்தால் மனம் குன்றி, ஊண் உறக்கமற்று, இரவும் பகலும் திரிந்தான்; ஆனால் அவனுடைய மனோ தைர்யம் மாத்ரம் குறையவில்லை.

முடிவில் விச்வாமித்ரர் கடுந்தபஸ் செய்துகொண்டிருக்குமிடத்திற்குப் போனான். அவனைக் கண்டவுடன் அவருக்கு எல்லையற்ற இரக்கமுண்டாயிற்று. “ஐயோ! இவன் நம்மைப்போன்ற அரசனல்லவா? ராஜ்யத்தையும் ஐச்வர்யத்தையும் போக போக்யங்களையும் இழந்தான். வர்ணாச்ரம பதவியையும் தேஜஸையு மிழந்தான். இஹத்திலும் பரத்திலும் பரம மங்களத்தைக் கொடுக்கும் ஸாதனங்களையு மிழந்தான். சண்டாளனாய்க் கோரரூபத்துடன்

இப்படித் திரிகிறு"னென்று மனமுருகி, பரம தார்மிகரானதால் "ராஜபுத்ர! நீ அயோத்யாதிபதியான த்ரிசங்குவல்லவா? மஹாபலவானல்லவொ? யாருடைய சாபத்தால் உனக்கு இந்தக் கோரமான சண்டாளத் தன்மை வந்தது? நீ இங்கே வந்த கார்யமென்ன" வென்றார்.

த்ரிசங்கு அவரை நமஸ்கரித்துக் கைகூப்பி வணக்கத்துடன் வெகு சாதுர்யமாய் "ஸ்வாமி! என் குல குருவான வஸிஷ்டரும் என்னைக் கைவிட்டார். அவருடைய புத்ரர்களும் என்னைக் கைவிட்டார்கள். குருக்களைத் தேடி அடைவதும் சுச்ருஷை செய்வதும் உபாஸிப்பதும் எதற்கு? நம்மை ஆபத்துகளும் அபாயங்களும் வராமல் காப்பாற்றி நமக்கு க்ஷேமத்தைக் கொடுப்பார்களென்ற எண்ணத்தாலல்லவா? அப்படி என் குருவும் குருபுத்ரர்களும் என்னை அனுக்ரஹிக்கவில்லை. அதுவுமன்றி இந்தக் கோரமான கதியை அடையும்படி சபித்தார்கள். ஸ்வாமி! இந்த மனுஷ்ய சரீரத்துடன் ஸ்வர்க்கத்தை அடைய விரும்புகிறேன். நூறு யாகங்களைச் செய்திருக்கிறேன். அப்படியும் இந்தப் பயன் எனக்குக் கிடைக்கவில்லை. வஸிஷ்ட பகவான் என்னைக் கைவிட யாதொரு பாபத்தையும் நான் செய்யவில்லை. எண்ணிறந்த யாகங்களைச் செய்தாலும், அவை யாவும் பொய் சொன்னால் அழியுமென்று ந்யாயமுண்டு. அப்படி இதுவரையில் நான் ஒரு பொய்கூடச் சொல்லவில்லை; சொல்லப் போவதுமில்லை. நான் அனுஷ்டிக்கும் க்ஷத்ரிய தர்மத்தை ஸாக்ஷியாகக்கொண்டு ப்ரமாணம் செய்கிறேன். இந்தக் கஷ்டத்திலும் இன்னும் அதிக கஷ்டங்கள் நேர்ந்தாலும் பொய் சொல்ல மாட்டேன். யக்ஞங்கள் யாவையும் செய்திருக்கிறேன். குடிகளைத் தர்மம் தவறாமல் ஆண்டிருக்கிறேன். பணிவிடையாலும் நற்குணங்களாலும் ஆசாரத்தாலும் மஹாத்மாக்களையும் பெரியோர்களையும் குருக்களையும் ஸந்தோஷப்படுத்தியிருக்கிறேன். நான் தர்மத்திலேயே புத்தியைச் செலுத்தினவன். இந்த யக்ஞத்தைச் செய்யவேண்டுமென்று முயலுகிறேன். ஆனால் என் குருவுக்கு என்னிடத்தில் கிருபையில்லை. என்ன செய்வேன்? இந்த ஜன்மத்தில் செய்யும் தர்மானுஷ்டானமான புருஷப்ரயத்னங்கள் வீணென்றும், முன் ஜன்மங்களில் செய்த கர்மக் குவியலிலிருந்து இப்பொழுது அனுபவிக்க எடுக்கப்பட்ட ப்ராப்தமென்று சொல்லப்படும் தைவமே அவைகளைக்காட்டிலும் பெரிதென்றும், ஸுக துக்கங்களை நமக்குக் கொடுக்கக்கூடியதென்றும் நன்றாயறிந்தேன். தைவமே மற்ற எதையும் அடக்கிவிடும். தைவத்தைத் தவிர வேறு கதியில்லை. சொல்ல

முடியாத துக்கத்தால் தபிக்கிறேன். தங்களுடைய க்ருபையை அடைய ப்ரார்த்திக்கிறேன். என் யத்னங்களைக் கெடுத்தது தைவமே. அதையே எனக்கு அனுகூலமாயிருக்கச் செய்யவேண்டும். 'ஒரு வேளை வஸிஷ்டரே வந்து உன்னை அழைத்தால் என்ன செய்வா'யென்றால், தங்களைச் சரணமடைந்த பிறகு வஸிஷ்டர் வந்து என் மனோரதங்கள் யாவையும் நிறைவேற்றுவதாய் ப்ரதிக்ஞை செய்து அழைத்தாலும், அவருடைய பிதாவான ப்ரஹ்மதேவர் வந்து அழைத்தாலும் போகமாட்டேன். தங்களுடைய பாதங்களே எனக்குக் கதி. வேறொருவரைச் சரணமடையமாட்டேன். தங்களுடைய கிருபா மஹிமையால் தைவம் எனக்கு அனுகூலமாவது நிச்சயம். தங்களுடைய புருஷப்ரயத்தனத்தால் தைவபலத்தை ஜயிக்க வேண்டு"மென்று ப்ரார்த்தித்தான்.

(புருஷ ப்ரயத்னத்தையும் தைவத்தையும் பற்றின பலாபலத்தை பாரதம் அனுசாஸன பர்வம் 6-லும்; யோகவாஸிஷ்டம் 2, 4—9-லும்; மத்ஸ்யபுராணம் 221-லும்; கருட புராணம் 1-113-லும் காணலாம்.)

## ஸர்க்கம் 59.

(தொடர்ச்சி.)

இக்ஷ்வாகு வம்சத்தரசனை த்ரிசங்கு சண்டாளனாகித், தன்னைச் சரணமடைந்து ப்ரார்த்தித்ததைப் பார்த்துக் கௌசிகர், "என் ஸைன்யங்களையும் புத்ரர்களையும் அழித்துப், பரமசிவனிடத்திலிருந்து நான் பெற்ற திவ்யாஸ்த்ரங்களை வீணாக்கி, எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்க என்னை அவமானஞ் செய்த அந்த வஸிஷ்டரே, என் இனத்தானை இந்த த்ரிசங்குவையும் சபித்துக், கோரமான கதியை அடையச் செய்திருக்கிறார். இவனைக் கைவிடக்கூடாது. இவனுடைய எண்ணத்தை நிறைவேற்றி, இவனை அங்கீகரித்து ரக்ஷித்தால் அதெல்லாம் வஸிஷ்டருக்குச் செய்த கெடுதியேயாகும். அவரால் செய்யமுடியாத யாகத்தைச் செய்து, சரீரத்துடன் இவனை ஸ்வர்க்கத்திற் கனுப்பினால், அதைவிட அவருக்கு அவமானமென்ன? க்ஷத்ரிய பலத்தைக் காட்டிலும் ப்ராஹ்மண பலமே மேலென்று பெருமைபேசின அந்த வஸிஷ்டருடைய பலத்தைவிட க்ஷத்ரியனான என் பலமே மேலென்று காட்டுகிறேன். இதைவிட நல்ல ஸமயம் கிடைக்கா"தென்று நிச்சயித்து, "ராஜச்ரேஷ்ட! இக்ஷ்வாகு குல சக்ரவர்த்தியே! க்ஷேமமாய் வந்தாயா? நீ பரம தார்மிகனென்று எனக்

குத் தெரியுமே. உன்னை ரக்ஷிக்கிறேன், பயப்படாதே. புண்யாத்மாக்களான ஸகல ரிஷிகளையும் இங்கே வருவிக்கிறேன். நீ உத்தேசித்த யாகத்தைச் செய்ய அவர்கள் உதவியாயிருப்பார்கள். வஸிஷ்டருடைய சாபத்தால் ஏற்பட்ட இந்தச் சண்டாள ரூபத்தை ப்ரஹ்மாவும் மாற்ற முடியாது. ஆனால் நீ சண்டாளனாய்ப் பிறக்கவில்லை. என் தபோமஹிமை யாவையும் உபயோகித்து ஒரு யாகஞ் செய்து உன்னை இந்தச் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்கு அனுப்புகிறேன். அந்த உத்தம பதவி உன் கையில் கிடைத்ததென்றே எண்ணுகிறேன். குசிக வம்சத்தில் பிறந்த என்னை நீ சரணமடைந்ததே போது''மென்றார். பிறகு பரம தர்மவான்களான தன் புத்ரர்களை அழைத்து, யாக ஸாமக்ரிகைகளை ஸித்தஞ் செய்யச் சொன்னார். ''லோகத்திலுள்ள ஸகல ரிஷிகளையும் அவர்களுடைய சிஷ்யர்களையும் மித்ரர்களையும் ரித்விக்குகளையும் வேதசாஸ்திர நிபுணர்களையும் என் கட்டளையைத் தெரிவித்து அழைத்து வாருங்கள். யாராகிலும் என் வார்த்தையை அலக்ஷ்யஞ் செய்து 'சண்டாளனுக்கு யாகஞ் செய்விக்கிறா' னென்று என்னை நிந்தித்தால், அதையும் மறைக்காமல் பூர்ணமாய் எனக்குச் சொல்லவேண்டு'மென்று வேலைக்காரர்களுக்கு உத்திரவிட்டார்.

அவர்கள் அப்படியே பல திக்குகளிலும் சென்று அவருடைய ஆக்ஞையைத் தெரிவித்தார்கள். ப்ரம்ம ஞானிகளும் வைதிகர்களும் பல தேசங்களிலிருந்து வந்தார்கள். கௌசிகருடைய வேலைக்காரர்கள் திரும்பி வந்து ''ஸ்வாமி! தங்களுடைய உத்திரவால் ப்ராஹ்மணோத்தமர்கள் பல தேசங்களிலிருந்து வருகிறார்கள். மஹோதயரும் வஸிஷ்ட புத்ரர்களும் மாத்ரம் கோபத்தால் மனங்கலங்கிக், கண்கள் சிவக்க, வார்த்தை குளற 'யாகம் செய்விக்க ப்ராஹ்மணனுக்கே அதிகாரம். க்ஷத்ரியனை கௌசிகன் யாகஞ்செய்விக்கப்போகிறானே? சண்டாளர்களுக்கு யாகஞ்செய்ய அதிகாரமுண்டோ? வஸிஷ்ட சாபத்தால் சண்டாளனை த்ரிசங்கு யாகஞ்செய்யப் போகிறானே? சண்டாளனுக்கு க்ஷத்ரியன் செய்விக்கும் யாகத்தில் இந்த்ராதி தேவதைகள் வந்து ஹவிர்ப்பாகங்களை வாங்கப் போகிறார்களோ? அந்த யாகசேஷத்தை ரிஷிகள் புஜிக்கப் போகிறார்களோ? சண்டாளனால் அசுத்தமானவைகளைப் புஜிக்கும் ப்ராஹ்மணர்கள், தபஸிலும் மஹிமையிலும் எவ்வளவு மேலானாலும், கௌசிகன் அவர்களை எவ்வளவு ரக்ஷித்தாலும், நல்ல கதி அடைவதைப் பார்ப்போ'மென்று வெகு நிஷ்டூரமாய்ச் சொன்னார்க''ளென்றார்கள்.

கௌசிகர் அதைக் கேட்டுக் கோபத்தை அடக்க முடியாமல் நெருப்புப் பொறிகள் கண்களிலிருந்து பறக்க, "நான் தோஷமற்றவன்; உக்ரமான தபஸைச் செய்துகொண்டிருக்கிறேன். அதின் மஹிமையால் சண்டாளனுக்கு யாகஞ் செய்வித்த தோஷமும் அழியுமென்ற ந்யாயத்தை அறிந்தும், இப்படி என்னைத் தூஷித்த வஸிஷ்ட புத்ரர்கள் இப்பொழுதே காலபாசத்தால் கட்டுண்டு எமலோகம் போகட்டும்; எரிந்து சாம்பலாகட்டும். இதில் ஸந்தேஹமில்லை. எழுநூறு ஜன்மங்கள் வரையில் பிணங்களையும் நாயின் மாம்ஸத்தையும் தின்றுகொண்டு, இரக்கமற்றவராய், முஷ்டிக (தொம்ப) ஜாதியில் பிறக்கட்டும். விகாரமான பேச்சும் ரூபமும் செய்கையும் பொருந்தி, ஓரிடத்தில் தங்காமல் எங்கும் அலையட்டும். தூஷிக்கத் தகாத என்னைத் தூஷித்த மஹோதயனென்ற துர்ப்புத்தி பிடித்தவன், எல்லோராலும் தூஷிக்கப்பட்டு நிஷாதனாகட்டும். ப்ராணிகளைத் தயவின்றிப் பலவந்தமாகக் கொன்று தின்று வெகுகாலம் வரையில் நீசனாயிருக்கட்டு"மென்று ஸகல ரிஷிகளும் கேட்டுக்கொண்டிருக்கையில் கோரமாய் சபித்தார்.

---

## ஸர்க்கம் 60.

(தொடர்ச்சி.)

தன் தபோபலத்தால் வஸிஷ்ட புத்ரர்களையும் மஹோதயரையும் கெடுத்துக் கௌசிகர், "ரிஷிகளே! இவன் இக்ஷ்வாகு வம்சத்தரசன்; த்ரிசங்கு வென்று ப்ரஸித்தன்; மஹாதர்மாத்மா; ஏராளமாய்க் கொடுத்தவன்; மேலும் என்னைச் சரணமடைந்தவன். இந்தச் சரீரத்துடன் ஸ்வர்க்கம் போக ஒரு யாகத்தைச் செய்ய விரும்புகிறான். அப்படியே செய்விப்பதாய் வாக்களித்தேன். என் ப்ரதிக்ஞை வீணாகாமல், நாமெல்லோரும் இந்த யாகத்தைச் செய்து இவனைச் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற் கனுப்புவோ"மென்றார். மஹர்ஷிகள் ஒன்றுகூடி ஆலோசித்தார்கள். தர்மத்தை நன்றாயறிந்தவர்களாகையால், "குசிகவம்சத்தில் பிறந்த இந்த விச்வாமித்ரர் கடுங்கோபி; இவர் சொல்வதைத் தவறாமல் நாம் நடக்கவேண்டியது அவச்யம். கொழுந்து விட்டெரியும் அக்னியைப்போல் தேஜஸால் ஜ்வலிக்கிறார். கோபங்கொண்டால் நம்மைச் சபிப்பார். ஆகையால் இந்த இக்ஷ்வாகு வம்சத்தரசன் கௌசிகருடைய தபோபலத்தால் மனுஷ்ய சரீரத்துடன் ஸ்வர்க்கத்தை அடைய ஒரு யாகத்தைச் செய்ய ஆரம்பிப்போம். அதில் ரித்விக்குகளாயிருக்கவேண்டிய ஒவ்வொரு

வரும் உங்களுடைய வேலையை வெகு ஜாக்ரதையாய்ச் செய்யுங்கள்” ளென்று எச்சரித்துக்கொண்டார்கள். யாகம் விதிப்படி நடந்தது. அதில் கௌசிகர் அத்வர்யு. ரித்விக்குகள் கல்பஸூத்ர விதி தவறாமல் மந்த்ரங்களைச் சொல்லி அந்தந்த க்ரியைகளைச் செய்தார்கள். பிறகு கௌசிகர் இந்த்ராதி தேவதைகளை அழைத்து, ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொள்ளும்படி ப்ரார்த்தித்தார். “அதிகார மில்லாதவன் ந்யாய விரோதமாய்ச் செய்யும் க்ரியைகள் செய்யப்படாதவை” யென்ற விதிப்படி தேவதைகள் அவருடைய வார்த்தையை லக்ஷ்யஞ் செய்யவில்லை; வரவில்லை. மஹாதபஸ்வியான காதிபுத்ரர் கடுங் கோபங்கொண்டு கையிலிருந்து ஸ்ருவத்தைத் தூக்கி “த்ரிசங்குவே! உன்னை இந்த மனுஷ்ய சரீரத்துடன் தேவதைகள் வஸிக்கும் ஸ்வர்க்கத்திற்கு அனுப்புவதற்குச் செய்த யாகம் தேவதைகளின் பிடிவாதத்தாலும் இறுமாப்பாலும் நிறைவேறவில்லை. போகட்டும். இதுவரையில் கடுந்தபஸ் செய்து, நான் ஸம்பாதித்த வீர்யத்தைப் பார். மனுஷ்ய சரீரத்துடன் ஸ்வர்க்கத்தை அடைவது வெகு கஷ்டமான கார்யம். இதுவரையில் நான் ஸம்பாதித்த தபஸுக்குப் பயனிருந்தால், என் தபோமஹிமையால் நீ இந்தச் சரீரத்துடன் தேவலோகம் போவா”யென்றார். உடனே ரிஷிகள் யாவரும் பார்த்துக்கொண்டிருக்கையில் த்ரிசங்கு அந்த மனுஷ்ய சரீரத்துடன் பூமியிலிருந்து தேவலோகத்திற்குப் போனான்.

அதைக் கண்ட தேவராஜன் தேவகணங்கள் சூழ “அடே, த்ரிசங்குவே! நீ ஸ்வர்க்கத்தில் வஸிக்கத் தகுந்தவனல்ல. பூமிக்குத் திரும்பிப்போ. வஸிஷ்ட மஹர்ஷியின் சாபத்தால் கொளுத்தப் பட்ட மூடா! தலைகீழாகப் பூமியில் விழுவா”யென்றான். உடனே த்ரிசங்கு தலைகீழாகப் பூமியை நோக்கி விழுந்தான். “விச்வாமித்ர மஹர்ஷே! தபோநிதியே! என்னைக் காப்பாற்று”மென்று கதறினான். அந்த வார்த்தைகள் அவருடைய காதில் விழுந்தவுடன் ப்ரளய காலாக்னியைப்போல் அவருக்குக் கோபம் ஜ்வலித்தது. “த்ரிசங்குவே! விழாதே! நில் நில்”லென்றார். உடனே அவ்வரசன் பூமியிலும் விழாமல் ஸ்வர்க்கத்திற்கும் போகாமல் அங்கேயே நின்றான். பிறகு அந்த மஹா முனிவர் ஆகாசவீதியில் தெற்கு திக்கில் வேறு ஸப்தரிஷி மண்டலத்தையும், வேறு இருபத்தேழு நக்ஷத்ரங்களையும் ஸ்ருஷ்டித்துத், தான் ரிஷிகளின் நடுவிலிருந்தே “இவை யாவும் வடக்குத்திக்கில் துருவனைச் சுற்றுவதுபோல் இந்தத் திக்கில் த்ரிசங்குவைச் சுற்றட்டு”மென்றார். பிறகு கோபம் தாங்காமல் “என்னை எதிர்க்கத் துணிந்த இந்த்ரனைப்போல் வேறு இந்த்ரனை

விருஷ்டிக்கட்டுமோ? அல்லது இந்த்ரனில்லாமல் வேறு ஸ்வர்க்கத்தை விருஷ்டிக்கட்டுமோ? அதில் த்ரிசங்குவே இந்த்ரனுயிருக்கட்டு''மென்று தேவகணங்களையும் விருஷ்டிக்க ஆரம்பித்தார். அதைப்பார்த்து இந்த்ராதி தேவதைகள் பயந்து நடுங்கித் தங்களுடைய லோகத்தைப்போன்ற வேறு லோகத்தையும் தங்களைப் போன்ற வேறு தேவதைகளையும் விருஷ்டிக்கும் அபார சக்தியையுடைய அந்தத் தபோநிதி இன்னும் என்ன செய்வாரோ? தன் புது விருஷ்டி முடிந்தவுடன் தனக்குக் கீழ்ப்படியாத இந்த்ராதி தேவர்களைச் சபித்து நாசஞ் செய்வாரோவென்று திகிலடைந்து, தேவாஸுரர்களும் ரிஷிகளும் கௌசிகரைத் துதித்து ஸமாதானஞ் செய்து, கோபத்தைத் தணித்தார்கள். ''ஸ்வாமி! தங்களுக்குத் தெரியாத விஷயமுண்டோ? ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்யர்கள் பாப லேசமின்றி எண்ண முடியாத புண்ய கர்மத்தால் ஸ்வர்க்கத்தை அடைய வேண்டியதல்லவா? இந்த த்ரிசங்கு க்ஷத்ரியனுய்ப் பிறந்தவனே. ஆனுல் வஸிஷ்ட மகர்ஷியின் சாபத்தால் ஜாதியும் புண்யமும் தேஜஸும் அழிந்து சண்டாளனுனன். இந்தச் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்கு வரத் தகாதவனல்லவா? தபோநிதியான தங்களுடைய அனுபவம் இப்படியல்லவா''வென்று விநயத்துடன் தெரிவித்தார்கள்.

அப்பொழுது விச்வாமித்ரருடைய கோபம் ஒருவாறு தணிந்தது. தன்னை எதிர்க்கத் துணிந்த தேவர்கள் தன்னையே ப்ரார்த்தித்ததைக் கண்டு ஸந்தோஷமடைந்தார். ஆனுல், தன்னை அண்டின த்ரிசங்குவைக் கைவிடவும் கூடாது. தான் செய்த ப்ரதிக்ஞையும் பொய்யாகக் கூடாது. தன்னை ப்ரார்த்தித்த தேவர்களின் வார்த்தை ந்யாயத்திற்கும் தர்மத்திற்கும் ஒத்திருந்தபடியால் அதற்கும் விரோதஞ் செய்யக்கூடாது. ஆகையால் ''தேவர்களே! கவலைவேண்டாம். உங்களுக்கு ஸகல மங்களங்களு முண்டாகட்டும். இவ்வரசனை ஸ்வர்க்கத்திற்கு அனுப்புவதாய் ப்ரதிக்ஞை செய்திருக்கிறேன். அது பொய்யாகக் கூடாது. இவன் இருக்குமிடமே ஸ்வர்க்கமாகட்டும். அதில் இவன் சரீரத்துடன் எந்நாளும் வஸிக்கட்டும். என்னுல் விருஷ்டிக்கப்பட்ட நக்ஷத்ரங்களும் ஸப்தர்ஷி மண்டலமும், பூமி முதலிய லோகங்களுள்ள வரையில் அழியாமலிருக்கட்டும். இதை நீங்கள் அங்கீகரிக்க வேண்டு''மென்றார். தேவர்கள் ''தபோநிதியே! அப்படியே ஆகட்டும். ஆகாச வீதியில் வைச்வானர மார்க்கத்திற்கு வெளியில் தங்களால் விருஷ்டிக்கப்பட்ட நக்ஷத்ரங்கள் என்றும் விளங்கட்டும். அவைகளுக்கு நடு

வில் த்ரிசங்கு தேஜஸால் தேவர்களைப்போல் எப்பொழுதும் ப்ரகாசிக்கட்டும். ஆனால் குருவிற்குச் செய்த அபராதத்திற் கடையாளமாய் இப்பொழுதிருப்பது போல் தலை கீழாக இருக்கட்டும். அவனைச் சுற்றி நக்ஷத்ரங்கள் ஸஞ்சரிக்கட்டும். எங்களுடைய ஸ்வர்க்கத்தில் வஸிப்பதுபோல் அவனுக்கு விசேஷ கீர்த்தியும் ஆனந்தமு முண்டாகட்டும். அவனுடைய எண்ணமும் உங்களுடைய வார்த்தையும் எங்களுடைய கோறிக்கையும் நிறைவேறட்டு''மென்றார்கள். பிறகு கௌசிகர் த்ரிசங்குவிற்குப் பதிலாக வேறு யஜமானனை வைத்து யாகத்தை முடித்தார். தேவதைகள் ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக் கொண்டார்கள். அங்கே வந்த ரிஷிகளும் தேவகணங்களும் விச்வாமித்ரரை மிகவும் கொண்டாடித் திரும்பிப் போனார்கள்.

---

## ஸர்க்கம் 61.

## சுனச்சேபன்.

---

அந்த ரிஷிகள் அங்கிருந்து போனபிறகு விச்வாமித்ரர் அந்த வனத்திலிருப்பவர்களை அழைத்து, "நான் இந்தத் திக்கில் தபஸ் செய்ய வந்தேன். இதற்குப் பெரிய இடையூறு நேர்ந்தது. வேறு திக்கிற்குப் போவோம். மேற்கில் விசாலமான பல தபோவனங்களுண்டு. அவைகளில் புஷ்கர தீர்த்தக்கரையில் வெகு புண்யமான ஒரு ஸ்தலமிருக்கிறது. அங்கே போய்க் கடுமையான தபஸ் செய்யவேண்டு''மென்று தன் பரிவாரங்களுடன் சென்று, கிழங்கு பழம் வேர்களைப் புஜித்துக்கொண்டு உக்ரமான தபஸ் செய்தார். (பாரதம், வனபர்வம் 82-ல் புஷ்கர மாஹாத்ம்யத்தைப் பார்க்க.)

அக்காலத்தில் அம்பரீஷனென்ற அயோத்யாதிபதி ஒரு யாகம செய்ய ஆரம்பித்தான். அதில் இந்த்ரன் யாக பசுவைக் கொண்டு போய்விட்டான். ரித்விக்குகள் "மஹாராஜ! உன் அஜாக்ரதையால் இந்தப் பசு இழக்கப்பட்டது. ப்ரஜைகளை அரசன் தர்மமாய் ரக்ஷிக்காவிட்டால் இவ்விதமான அபாயங்கள் நேர்ந்து நாசஞ் செய்யும், இந்தப் பாபம் போக, மஹா ப்ராயச்சித்தம் செய்யவேண்டும். அதே பசுவையாவது அதற்குப் பதிலாக மனுஷ்யனையாவது யாகதினத்திற்குக் கொண்டுவரவேண்டு''மென்றார்கள்,

அம்பரீஷன் தேசங்களிலும் நகரங்களிலும் பட்டணங்களிலும் புண்யாச்ரமங்களிலும் க்ராமங்களிலும் வெகு ஜாக்ரதையாய்த் தேடினன். எண்ணமுடியாத பசுக்களையும் தன தான்யங்களையும் கொடுப்பதாகச் சொன்னன்: நரபசு கிடைக்கவில்லை. பிருகுதுந்தமென்ற ஸ்தலத்தில் ரிசிகரென்ற ரிஷி பார்யையோடும் மூன்று புத்ரர்களோடும் வஸித்துக் கொண்டிருப்பதை ஒருநாள் கண்டு, அவரை நமஸ்கரித்துக் கைகூப்பி வணக்கமாய் க்ஷேமம் விசாரித்து, "ஸ்வாமி! நான் யாகம் செய்யும்பொழுது பசுவை யாரோ கொண்டுபோய்விட்டான். அதற்குப் பதிலாக ஒரு நரபசுவைத் தேடிக்கொண்டு அலைகிறேன். கிடைக்கவில்லை. முடிவில் தங்களையே சரணமடைகிறேன். தங்களுடைய மூன்று புத்ரர்களிலொருவரை எனக்கு யாகபசுவாகக் கொடுத்து, அதற்குப் பதிலாக இஷ்டமான பசுக்களையும் தனத்தையும் பெற்றுக்கொள்ளுங்கள். எப்படியாவது என்னைக் கிருதார்த்தனகச் செய்யவேண்டும். புத்ரர்களைத் தானங் கொடுப்பதும் விற்பதும் சாஸ்த்ர விரோதமே. ஆனல் வம்சம் அழிவதாயிருந்தால் அதை நிலைநிறுத்தப் புத்ரனைக் கொடுப்பதுபோல் இந்தத் தர்மகார்யம் நஷ்டமாகாமல் முடியப், புத்ரனை விற்பதும் தோஷமல்ல"வென்றன். மஹா தேஜஸ்வியான ரிசிகர் "மஹாராஜா! வம்சத்தை விருத்திசெய்யும் மூத்த புத்ரனை ஒருநாளும் விற்கமாட்டே"னென்றார். அவருடைய மனைவி "மூத்த புத்ரனை விற்கமாட்டேனென்று என் பர்த்தா சொன்னர். இளையவனிடத்தில் எனக்கு விசேஷ ப்ரியம். அவனை நான் விற்கமாட்டேன். பிதாவிற்கு மூத்த புத்ரனிடத்திலும் மாதாவிற்கு இளையவனிடத்திலும் அதிக ப்ரியமுண்டென்று உமக்குத் தெரியாதா?"வென்றள். சுனச்சேபனென்ற இரண்டாவது புத்ரன் "மஹாராஜ! மூத்தவனை விற்கக்கூடாதென்று என் பிதாவும், இளையவனை சுனகனை விற்கக்கூடாதென்று என் மாதாவும் சொல்லிவிட்டார்கள். நடுவிலிருக்கும் என்னை விற்க அவர்கள் ஸம்மதித்ததாகத் தோன்றுகிறது. என்னை அழைத்துக்கொண்டு போ"மென்றன். உடனே அம்பரீஷன் கணக்கில்லாத பசுக்களையும் தனதான்யங்களையும் கொடுத்துச், சுனச்சேபனை விலைக்கு வாங்கி ரதத்திலேற்றி அதிவேகமாய் அயோத்யைக்கு வந்தான்.

## ஸர்க்கம் 62.

(தொடர்ச்சி)

போகும் வழியில் புஷ்கர தீர்த்தக் கரையில் தங்கி, நடுப்பகலைக் கழிப்போமென்று அரசன் ரதத்திலிருந்து இறங்கிச் சற்றுக் களைப் பாறினன். சுனச்சேபன் கவலைகொண்டு அங்குமிங்கும் அலைந்தான். ஓரிடத்தில் தன் மாமனை விச்வாமித்ரர் ரிஷிகளுடன் தபஞ்செய்து கொண்டிருக்கக் கண்டான். ப்ரயாணஞ் செய்த களைப்பாலும் பசி தாகத்தாலும் முகம்வாடி மனம்நொந்து கௌசிகருடைய மடியில் விழுந்து, "எனக்குத் தாயுமில்லை, தகப்பனுமில்லை, பந்துவுமில்லை, இனத்தாருமில்லை. எல்லோரும் என்னைக் கைவிட்டார்கள். மாமா! முனிச்ரேஷ்ட! தபோநிதியே! தர்மத்தை அனுஸரித்து என்னை ரக்ஷியுங்கள். தங்களைச் சரணமடைந்தேன். கஷ்டமடைந்தவர்களின் கஷ்டத்தைப் போக்குகிறவர்கள் தாங்களே. அண்டினவர்களின் கவலையையும் துக்கத்தையும் தீர்த்துப் பரமக்ஷேமத்தை அருளும் மஹானுபாவர் தாங்களே. என்னை வாங்கின அம்பரீஷனுடைய உத்தேசமும் நிறைவேறவேண்டும். நான் தீர்க்காயுஸுடன் மேலான தபஸைச் செய்து ஸ்வர்க்கத்தை அடையவும் வேண்டும். அநாதையான எனக்குத் தாங்களே நாதன். க்ருபாகடாக்ஷத்தால் அனுக்ரஹிக்கவேண்டும். என்னைப் பெற்ற தகப்பனே என்னைக் கைவிட்டதால், என் தாயுடன் பிறந்த தாங்களே எனக்குப் பிதாவாக இந்தக் கோரமான ஆபத்திலிருந்து என்னை ரக்ஷிக்கவேண்டு"மென்று கதறினன்.

விச்வாமித்ரர் மனமுருகி அவனைப் பலவிதமாய்த் தேற்றித், தன் புத்ரர்களை அழைத்துப் "பிதாக்கள் எதை உத்தேசித்துப் புத்ரனைப் பெறுகிறார்களோ அந்தப் பரலோக ஹிதத்தை அடையும் ஸமயம் இப்பொழுது நேர்ந்திருக்கிறது. பிதா பிழைத்திருக்கும் வரையில் அவருடைய வார்த்தையை நிறைவேற்றுவதும், இறந்த பிறகு கயாக்ஷேத்ரத்தில் அவருக்குப் பிண்டம் வைப்பதும், ஒவ்வொரு வர்ஷத்திலும் அவருடைய மரண தினத்தில் அவரை உத்தேசித்துப் பல ஜனங்களுக்கு அன்னம்போடுவதும் புத்ரர்களின் கடமை. அவைகளில் முதலாவதைச் செய்யும் ஸமயம் உங்களுக்கு வாய்த்திருக்கிறது. இந்தச் சிறுவன் ரிசீகருடைய புத்ரனென்று உங்களுக்குத் தெரியுமே. என்னைச் சரணமடைந்திருக்கிறான். இவனுக்கு ப்ராணபிக்ஷை கொடுங்கள். நீங்களெல்லோரும் புண்யங்களைச் செய்தவர்கள், தர்மத்தில் மனதைச்

செலுத்தினவர்கள். அம்பரீஷனுடைய யாகத்தில் உங்களில் ஒருவன் பசுவாயிருந்து அக்னியைத் திருப்தி செய்யுங்கள். யாகமும் தடையில்லாமல் நடக்கும்; சுனச்சேபனுக்கும் ஆபத்து நீங்கும்; தேவதைகளுக்கும் திருப்தியுண்டாகும்; என் வார்த்தையும் நிறைவேறு'' மென்றார். மதுஷ்யந்தன் முதலிய புத்ரர்கள் கர்வத்தால் புத்தி மயங்கிக் கைகொட்டிச் சிரித்து, "வெகு நேர்த்தி! தனக்குப் பிறந்த புத்ரனை விட்டு வழியில் போகிறவனுக்குப் பிறந்தவனைக் காப்பாற்றத், தன் மகனை இரைகொடுக்கும் நீரல்லவா? பிதா, உமக்கு ந்யாயாந்யாயம் தெரியாமல் புத்தி பிசகினாலும் எங்களுக்கு அந்தக் கதி இன்னும் வரவில்லை. உத்தமமான அன்னத்தை எறிந்துவிட்டு, நாயின் மாம்ஸத்தைப் புஜிக்க யாராவது விரும்புவார்களா?'' வென்றார்கள்.

தனக்குப் பிறந்த புத்ரர்களே தன் வார்த்தையை மீறித், தன்னைக் கேலிசெய்வதைக் கண்டு கௌசிகருக்குக் கோபம் பொங்கிற்று; கண்கள் சிவந்தன. "துஷ்டர்களே! பெற்ற தகப்பனைத் தெய்வமாக எண்ண வேண்டுமென்று சுருதி சொல்லுகிறது. அவருடைய வார்த்தையை மீறி எதிர்த்துப் பேசுகிறோமே யென்ற பயம் உங்களுக்குக் கொஞ்சமேனும் இல்லையல்லவா? உயிருள்ளவரையில் பிதாவின் ஆக்ஞையை நிறைவேற்றவேண்டுமென்ற தர்மத்தையும் விட்டீர்களல்லவா? அவரிடத்தில் வைக்கவேண்டிய பக்தி கொஞ்சமேனுமின்றிக், கேட்க வெறுப்பாகி, இப்படியும் சொல்லுகிறவர்களுண்டோ வென்று ஆச்சர்யத்தால் மயிர்கூச்சலெடுக்கும்படி பேசினீர்களல்லவா? என் வார்த்தை உங்களுக்கு நாயின் மாம்ஸத்தைப் போலிருக்கிறதோ? அதையே புசித்துக்கொண்டு வஸிஷ்ட புத்ரர்களைப்போல் நீங்களும் தொம்பர்களாகி ஆயிரம் வர்ஷங்கள் வரையில் பூமியில் அலையக்கடவீர்க''ளென்று கோரமாகச் சபித்தார்.

பிறகு தன் மருமகனை அழைத்துப் "பயப்படாதே. உனக்கு யாதொரு அபாயமும் நேராமல் மணி மந்த்ர ஔஷதிகளால் ரக்ஷை செய்கிறேன். விஷ்ணுவைத் தேவதையாயுடைய யூபஸ்தம்பத்தில் யாகபசுவாக உன்னைத் தர்ப்பைகளால் கட்டிச் சிவப்புமாலைகளாலும் வஸ்த்ரங்களாலும் சந்தனத்தாலும் அலங்கரித்துப் பலிகொடுக்கும் பொழுது, அக்கினிக்கு எதிரில் நின்று நான் உபதேசிக்கும் இந்த இரண்டு மந்த்ரங்களைச் சொல். இந்த்ரனும் உபேந்த்ரனும் திருப்தியடைவார்கள். உன் எண்ணமும் நிறைவேறு''மென்றார்.

சுனச்சேபன் அந்தமந்தரங்களைப் பெற்றுக்கொண்டு பரமானந்தமடைந்து, தன் மாமனை நமஸ்கரித்து உத்திரவுபெற்று, அரசனிடத்திற்கு வந்து, "என் தாமஸிக்கவேண்டும்? அயோத்யைக்குப் போவோம். சீக்கிரமாய் யாகதீக்ஷை பெற்று, யாகத்தைநடத்தலாமே" யென்றான். அம்பரீஷன் ஸந்தோஷித்து, அதிவேகமாய் அயோத்யைக்கு வந்து யாகத்தை ஆரம்பித்தான். ரித்விக்குகள் விதிப்படி ஸகல க்ரியைகளையும் நடத்திச் சுனச்சேபனை சிவந்த வஸ்த்ரங்களாலும் மாலைகளாலும் பூச்சுகளாலும் அலங்கரித்துத் தர்ப்பங்களால் யூபத்தில் கட்டினார்கள். அவனைப் பலிகொடுக்கப் போகும் ஸமயத்தில் கௌசிகர் தனக்கு உபதேசித்த இரண்டு மந்த்ரங்களை அவன் உச்சரித்து, யாகபசுவைப புஜிக்கும் இந்த்ரனையும் யூபத்திற்குத் தேவதையான விஷ்ணுவையும் ஸ்தோத்ரஞ் செய்தான். தன்னையும் தனக்கு ப்ரபுவான விஷ்ணுவையும ரஹஸ்யமான பெயர்களால் இப்படித் துதித்த சுனச்சேபனிடத்தில் இந்த்ரன் பரம திருப்தியடைந்து அவனுக்குத் தீர்க்காயுஸைக் கொடுத்தான். யக்ஞத்தை விதிப்படி செய்வதாலுண்டாகும் பயனை விட பல மடங்கு அம்பரீஷனுக்குக் கிடைத்தது. தான் அதுவரையில் செய்த தபஸின் பயன் தன் புத்ரர்களைச சபித்ததால் அழிந்தபடியால், கௌசிகர், "நான் இனி கோபத்திற் கிடங்கொடுப்பதில்லை" யென்று நிச்சயித்துப் புஷ்கரத்தில் மறுபடியும் ஆயிரம் வர்ஷங்கள் வரையில் தபஸ் செய்தார். (ஐதரேயப்ராஹ்மணத்திலும் பாகவதத்திலும் சொன்னபடி த்ரிசங்குவின் புத்ரனை ஹரிச்சந்த்ரனையே இங்கே அம்பரீஷனென்றும், அஜீகர்த்தரையே ரிசீகரென்றும் சொல்லி யிருக்கிறது.)

---

## ஸர்க்கம் 63.

## விச்வாமித்ரரும் மேனகையும்.

---

இப்படிக் கடுந் தவத்தை முடித்து ஸ்நானஞ் செய்த பிறகு ப்ரஹ்மாதி தேவர்கள் அங்கே வந்து "விச்வாமித்ரரே ! உமது தபஸாலும் புண்யங்களாலும் ரிஷியானீர். முன்பு ராஜர்ஷி பதவியை அடைந்தீர். இப்பொழுது க்ஷத்ரியத் தன்மை நீங்கினதால் இந்தப் பதவியை யடைந்தீர்" என்று திரும்பிப் போனார்கள். ஆனால் தன் எண்ணம் இன்னும் நிறைவேறாததால் கௌசிகர் மனம் நொந்து மறுபடியும் கடுந்தவஞ் செய்ய ஆரம்பித்தார்.

வெகு காலங்கழித்து ஒரு நாள் அந்தப் புஷ்கர தீர்த்தத்தில் மேனகை யென்ற அப்ஸரஸ் ஸ்நானஞ்செய்ய வந்தவள். ஒப்பில்லாத ரூபலாவண்யமுடைய அந்தப் பெண் நீருண்ட மேகத்தில் பாயும் மின்னலைப் போல், ஏரி ஜலத்தில் விளையாடுவதைக் கண்டு விச்வாமித்ரர் அவளிடத்தில் எல்லையற்ற ஆசைகொண்டு "பெண்ணே! க்ஷேமமா? இங்கே என் ஆச்ரமத்தில் என்னுடன் வஸித்துக்கொண்டிரு. எனக்கு உன்னிடத்திலுள்ள ஆசைக்கு அளவில்லை. மன்மத பாணத்தால் புத்தி மயங்கியிருக்கும் என்னை அங்கீகரித்து என் தாபத்தைப் போக்குவா"யென்றார். அவள் அப்படியே பத்து வர்ஷங்கள் வரையில் அவருடன் ஸுகமாயிருந்தாள். பிறகு ஒரு நாள் திடீரென்று கௌசிகருக்கு அந்த மோகம் நீங்கிற்று. தான் யாரென்றும், எதற்காக அங்கு வந்தாரென்றும், தான் செய்த கடுந் தபஸ் காமத்திற்குஇடங் கொடுத்ததால் கெட்டதென்றும் உணர்ந்து நினைத்து நினைத்து வருந்தி, வெட்கத்தால் குன்றிக், துக்கமும் கவலையும் பீடிக்க, "ஐயோ! என் தபஸைக் கெடுக்க இப்படித் தேவர்கள் உபாயஞ் செய்தார்களோ? பத்து வர்ஷங்கள் ஒரு இரவு பகலைப் போல் சென்றனவே! காமத்தாலும் மோகத்தாலும் புத்திமயங்கி இந்த விக்னத்தை நானே தேடி அழைத்துக்கொண்டே"னென்று பச்சாத்தாபத்தால் வெந்து, அடிக்கடி பெருமூச்சு விட்டார். அவருடைய கோபத்தையும் வருத்தத்தையும் கண்ட மேனகை, 'ப்ரளய காலாக்னியும் இவருடைய கோபத்திற்கு ஈடல்லவே. இவர் செய்த கடுந்தபஸைக் கெடுத்த என்னை என்ன செய்வாரோ'வென்று பயந்து நடுநடுங்கிக் கைகூப்பி நின்றாள். அவர் மனமிரங்கிப் "பெண்ணே! உன்னிடத்தில் குற்றமென்ன? உன்னைக் கோபிக்க ந்யாயமில்லை. என் புத்தியையல்லவா கண்டிக்கவேண்டு"மென்று மதுரமான வார்த்தைகளைச் சொல்லி அவளை அனுப்பினார்.

பிறகு அங்கிருந்து ஹிமாலயத்திற்குப் போய் தன் தமக்கையான கௌசிகி நதிக் கரையில் ஒரு புண்ய ஸ்தலத்தில் கோரமான தபஸ் செய்ய ஆரம்பித்தார். அந்த வ்ரதம் முடியும்வரையில் இந்த்ரியங்களை அடக்குவதாக ப்ரதிக்ஞை செய்துகொண்டார். ஆயிரம் வர்ஷங்கள் வரையில் உக்ரமான தபஸ் செய்த பிறகு தேவர்களுக்குப் பயமுண்டாயிற்று. அவர்கள் ப்ரஹ்மாவிடத்திற்குச் சென்று "ஸ்வாமி! இந்தத் தபஸ்வி ப்ரஹ்மரிஷி பதவியை அடையட்டு"மென்றார்கள். அவர் தேவர்களையும் ரிஷிகளையும் அழைத்துக் கொண்டு கௌசிகரிடத்திற்கு வந்து "குழந்தாய்! உன் உக்ரமான தபஸால் வெகு திருப்தியடைந்தேன். மேனகை உன் தபஸைக்

கெடுத்தாள். அவளைச் சபிக்காததால் கோபத்தை ஜயித்தாய். ஆகையால் ரிஷிகளுக்குள் மஹானாய் மஹர்ஷி பதவியை அடையக் கடவா”யென்று மதுரமாய் அனுக்ரஹித்தார். ஸர்வலோகேச்வரன் இப்படிச் சொல்லக், கௌசிகருக்கு ஸந்தோஷமுமில்லை, துக்கமுமில்லை. ப்ரஹ்மாவை வணங்கிக் கைகூப்பி, “ஸ்வாமி! என் தபஸாலும் புண்யத்தாலும் மஹர்ஷியென்ற பெயரை நான் அடையத் தகுமானால் இந்த்ரியங்களை ஜயித்தவனென்று உங்களால் ஒப்புக்கொள்ளப் பட்டதல்லவா” வென்றார். ப்ரஹ்மா, “அப்படியல்ல; காமக்ரோதங்களை உண்டாக்கும் காரணங்கள் நேரும்பொழுது உன் மனம் கொஞ்சமேனும் கலங்காமல் விகாரமற்றிருந்தால் மாத்ரம் இந்த்ரியங்களை ஜயித்தவனென்று சொல்லலாம். அந்த ஸ்திதியை அடைய நீ இன்னும் யத்னம் செய்யவேண்டு”மென்று தேவர்களுடன் திரும்பிப்போனார்.

பிறகு கௌசிகர் கைகளை உயரத் தூக்கிக்கொண்டு, யாதொரு பற்றுமின்றி காற்றையேபுஜித்துக்கொண்டு, கோடையில் பஞ்சாக்னி நடுவிலும், மழைகாலத்தில் கடும்மழை பெய்யுமிடங்களிலும், குளிர்காலத்தில் குளிர்ந்த ஜலத்திலும் நின்று இரவும் பகலும் ஓயாமல் கோரமான தபஸ் செய்துவந்தார். இப்படி ஆயிரம் வர்ஷங்களான பிறகு இந்த்ராதி தேவதைகளுக்கு மஹா பயமுண்டாயிற்று. தேவராஜன் ஸபைகூட்டித், தனக்கு ஹிதத்தையும் கௌசிகருடைய தவத்திற்குக் கெடுதியையும் உண்டாக்கும் யோசனையை ரம்பையிடத்தில் சொன்னான்.

## ஸர்க்கம் 64.

## விச்வாமித்ரர்—ரம்பை.

“ரம்பே! உன்னால் ஒரு பெரிய கார்யம் தேவர்களுக்கு நடக்க வேண்டியிருக்கிறது. கடுந்தபஸ் செய்யும் கௌசிகருடைய மனதில் ஆசையை உண்டாக்கி, நீ அவரை மயக்கவேண்டு”மென்றான் அது தன்னால் முடியாதென்ற ரம்பை, வெட்கமடைந்து கைகூப்பி, “மஹாராஜ! இந்த ரிஷி மஹாகோபஸ்வபாவமுள்ளவர். அவருடைய தபஸைக் கெடுக்க முயன்றால் என்னை க்ரூரமாய்ச் சபிப்பார். அதை நினைக்க எனக்கு வெகு பயமுண்டாகிறது. தயவுசெய்து என்னை மன்னிக்கவேண்டு” மென்று ப்ரார்த்தித்தாள். தேவராஜன் அவளை

ஸமாதானஞ்செய்து பயந்து நடுங்கிக் கைகூப்பித் தன்னை வேண்டும் அந்தத் தேவகன்யையைப் பார்த்து "ரம்பே! பயப்படாதே. உனக்கு எந்த ஆபத்தும் நேராது. நான் சொல்வதைச் செய். மரங்கள் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுக்கும் வஸந்த ருதுவில் ஸகல ப்ராணிகளின் மனதைக் கவரும் குயிலாய் நான் ரூபமெடுத்து மன்மதனுடன் உன் பக்கத்திலிருந்து உதவி செய்கிறேன். எல்லோரையும் மயக்கும் ரூபத்தை எடுத்து நீ அந்த ரிஷியின் தபஸைக் கெடுக்க வேண்டு" மென்றான்.

அப்படியே அவள் கௌசிகரிடத்திற்குப் போய், அவருடைய புத்தியைத் தபஸிலிருந்து இழுத்துத், தன்னிடத்தில் செலுத்தப் பலவிதமாய் முயன்றாள். மதுரமாய்ப் பாடும் குயிலின் சப்தம் அமிருததாரையைப் போல் அவருடைய காதில் விழுந்தது. புஷ்பங்களின் வாஸனையை க்ரஹித்துக்கொண்டு இளந்தென்றல் காற்று மிருதுவாயும் ஸுகமாயும் அவர்மேல் வீசிற்று. விச்வாமித்ருடைய தபஸ் குலைந்தது. கண்களைத் திறந்து பார்த்தார். ரூபலாவண்யமே அவதரித்து வந்தது போன்ற ரம்பை எதிரில் நிற்கக்கண்டார். புன்சிரிப்பாலும், பார்வையாலும், அங்கசேஷ்டைகளாலும், ஒய்யார நடையாலும் அவருடைய மனதைக் கவரத், தன் சக்திமுழுவதையும் உபயோகித்தாள். அதை விச்வாமித்ரர் நன்றாய்க் கவனித்து ஆலோசித்து "மேனகையைப் போல் இவளும் வலுவில் என்னைத் தேடி வந்தாளா? அல்லது என் தபஸைக் கெடுக்க இந்த்ரன் இவளை அனுப்பினானா" வென்று ஸந்தேஹப்பட்டார். வெகு மதுரமான பாட்டாலும் காற்றாலும் வஸந்த காலத்தாலும் அது தேவராஜனுடைய செய்கையென்றறிந்து, ரம்பையிடத்தில் அவருக்கு அடங்காக் கோபமுண்டாயிற்று. "அடி துஷ்டே! காமக்ரோதங்களை ஜயிக்க விரும்பும் என்னை இப்படி மயக்கி, என் தபஸைக் கெடுக்க முயலும் நீ, பதினாயிர வர்ஷங்கள் வரையில் கல்லாகக் கடவாய். தபோநிதியாய் தேஜோராசியாய் விளங்கும் வஸிஷ்டர் உன்னை இந்தச் சாபத்திலிருந்து விடுவிப்பா"ரென்று கோரமாய்ச் சபித்தார். பிறகு 'தன் ப்ரபுவின் கட்டளைக்குக் கட்டுப்பட்டு இப்படிச் செய்த வேலைக்காரியிடத்தில் நான் கோபிக்க ந்யாயமில்லை'யென்றறிந்து அந்தச் சாபத்திற்கு விமோசனத்தையும் சொன்னார். ஆனால் தன் கோபத்தை அடக்கமுடியாமல் ரம்பையைச் சபித்துத், தன் தபஸைக் குறைத்ததற்காக அவருக்குச் சொல்லமுடியாத பச்சாத்தாப முண்டாயிற்று. அதற்குள் ரம்பை கல்லானாள். கௌசிகர் கோபங்கொண்டவுடனே இந்த்ரனும் மன்மதனும் இருந்தவிடம் தெரியாமல் ஓடிப்போனார்கள்.

கோபத்தால் தன் தபஸ் அழிந்ததையும் இந்த்ரியங்கள் தன க்கு வசப்படாததையும் நினைத்து நினைத்து, அந்த மஹாத்மாவிற்கு மென்மேலும் துக்கமுண்டாயிற்று. மனதில் கவலை குடிகொண்டது. "இனிமேல் கோபத்திற்கு இடங்கொடுப்பதேயில்லை. பேசினாலல்லவா கெடுதி. ஆகையால் வாயைத் திறந்து ஒரு வார்த்தையையும் பேசுவதில்லை. பேசுவதற்கும் மூச்சுவிட வேண்டியது அவச்யமல்லவா? ஆகையால் கேவல கும்பகத்தை அனுஷ்டித்து ப்ராண வாயுவை அடக்குவேன். எவ்வளவு வர்ஷங்களானாலும் மூச்சு விடுவதில்லை. இந்த்ரியங்களை அடக்கி, ஆஹாரமின்றிப், பேச்சு மூச்சின்றித், தேஹத்தை வாட்டி ஒடுக்கி, ப்ரஹ்மரிஷி பதவியைஅடையும் வரையில் உக்ரமான தபஸ் செய்வேன். ஆயிரம் பதினாயிரம் லக்ஷம் வருஷங்களானாலும் அப்படியே யிருப்பேன். என் தபோமஹிமையால் என் சரீரமும் அவயவங்களும் ப்ராணன்களும் வீர்யமும் புத்தியும் ஒன்றும் குறையா"தென்று ஆயிரவர்ஷங்கள் வரையில் மேற்சொன்னபடி தபஸ் செய்வதாய்த், தீக்ஷை செய்துகொண்டு, லோகத்தில் அதுவரையில் ஒருவரும் செய்யாத கோர தபஸைச் செய்ய நிச்சயித்து, எந்த இடையூறு நேர்ந்தாலும் அப்படிச் செய்யாமல் விடுவதில்லையென்று ப்ரதிக்ஞை செய்தார்.

## ஸர்க்கம் 65.

## விச்வாமித்ரர் ப்ரஹ்மர்ஷி யானது.

பிறகு வடக்கு திக்கை விட்டு மேற்கில் சென்று மௌனவ்ரதத்துடன் ஆயிரம் வர்ஷங்கள்வரையில் கோரமான தபஸைச் செய்தார். அதுவரையிலாவது அதற்குப் பிறகாவது ஒருவரும் அப்படிச் செய்யமுடியாது, செய்ததுமில்லை. தேஹம் கட்டையாய்க் கல்லைப் போல் இந்த்ரியச் செய்கைகள் ஒழிந்திருந்தது. அவருடைய தபஸைக் கலைக்கத் தேவர்கள் பலவிதமாய் முயன்றார்கள். ஆனால் அவர் காமக்ரோதங்களுக்கு இடங்கொடுக்கவேயில்லை. ஒரே உறுதியாய்க், கலங்காமல், ஆயிர வர்ஷங்கள் வரையில் தபஸைச் செய்து முடித்து, ஸ்நானஞ்செய்து பூஜிக்கும் ஸமயத்தில் இந்த்ரன் ப்ராஹ்மண வேஷத்துடன் அங்கே வந்து, அந்த அன்னத்தைத் தனக்குக் கொடுக்கவேண்டினான். தன் தபஸ் வளர்த் திடப்படுவதற்குத், தன்னை யாசித்தவனுக்கு இல்லையென்று சொல்லாமல் கேட்டதைக் கொடுக்கவேண்டுமென்று கௌசிகர்

நிச்சயித்து, சமைத்த அன்னம் முழுவதையும் மனப்பூர்வமாய்ப் பரம ஸந்தோஷத்துடன் அந்த ப்ராஹ்மணனுக்குக் கொடுத்தார். ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. மௌன வ்ரதத்தையே அனுஷ்டித்தார். மறுபடியும் சமையல் செய்வதற்கு வேண்டிய ஸாமக்ரிகளை ஸம்பாதித்து வைக்காததால் ஆஹாரமில்லாமலேயே முன் போல் தபஸ்செய்ய ஆரம்பித்தார்.

ப்ராண வாயுக்களை அடக்கி, மௌனமாய், ஆஹாரமின்றி அவர் தபஸ் செய்யும்பொழுது, தலையிலிருந்து புகையும் நெருப்பும் கிளம்பின. மூன்று லோகங்களிலுள்ள ப்ராணிகள் யாவும் அதனால் எரிபட்டுத் தடுமாறின. அப்பொழுது தேவ கந்தர்வ பன்னக அஸுர ராக்ஷஸ கணங்கள் அவருடைய தேஜோரூபமான அக்னியால் மூர்ச்சையடைந்து காந்தி குறைந்து துக்கம் மேலிட்டுத் தாங்கமுடியாமல், ப்ரஹ்மாவை நமஸ்கரித்துக் கைகூப்பி, "ஸ்வாமி! கௌசிகரென்ற மஹா தபஸ்வியின் தபஸைக் கெடுக்க எங்களால் கூடியவரையில் முயன்றோம். அவருடைய மனதில் காமக்ரோதங்களை உண்டாக்க வேண்டியவரையில் முயன்றோம். ஆனால் எங்கள் இடையூறுகளால் அவர் செய்யும் தபஸ் மென்மேலும் வளர்கிறதே தவிரக் குறையவில்லை. எங்களால் கூடிய வரையில் அவரைப் பரீக்ஷித்துப் பார்த்தோம். அவரிடத்தில் கொஞ்சமாவது தோஷத்தைக் காண முடியவில்லை. அவர் விரும்புவதைக் கொடுக்காவிட்டால் மூவுலகையும் சராசரப் பொருள்களுடன் நாசஞ் செய்வார். பாருங்கள், திக்குகள் கலங்கித் தடுமாறுகின்றன. பதார்த்தங்கள் காந்தியற்றன. கடல்கள் பொங்கிக் கரைபுரளுகின்றன. மலைகள் தூள்தூளாய்ப் பிளக்கின்றன. பூமி நடுங்குகிறது. காற்று கடுமையாய் அடிக்கிறது. இதற்கு என்ன பரிஹாரமென்று எங்களுக்குத் தோன்றவில்லை. கடவுள் ஒருவரிருந்தால் இப்படியெல்லாம் தட்டுக்கெட்டுத் தடுமாறுமாவென்று ஜனங்கள் நம்பிக்கையற்று, கர்மானுஷ்டானங்களையும் தர்மங்களையும் கைவிட்டு, நாஸ்திகராகிறார்கள். மூவுலகிலுள்ள ப்ராணிகள் பித்துப்பிடித்ததுபோல் சித்த ஸ்வாதீனமற்றிருக்கின்றன. கௌசிகருடைய தேஜஸ் ஸூர்யனுடைய காந்தியை அடக்கிவிட்டது. முன்பு ப்ரளயகாலாக்னியால் மூன்று லோகங்களும் எரிக்கப்பட்டதுபோல், இவருடைய தேஜஸால் இப்பொழுது கொளுத்தப்படுகின்றன. இவர் ப்ரபஞ்சத்தை அழிக்க விரும்புவதற்குள் அவருக்கு வேண்டியதைக் கொடுத்துத் திருப்தி செய்யுங்கள். தேவராஜ்யத்தைக் கேட்டாலும் கொடுத்து விடுங்க" ளென்று ப்ரார்த்தித்தார்கள்.

ப்ரஹ்மா அதை ஒப்புக்கொண்டு தேவர்களுடன் கௌசிகர் தவஞ்செய்யு மிடத்திற்குப் போய், மதுரமான வார்த்தைகளால் அவரை அழைத்து "ப்ரஹ்மர்ஷே! உமக்கு ஸகல க்ஷேமமுமுண்டா கட்டும். உமது தபஸால் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தோம். உக்ரமான தபஸால் ப்ராஹ்மணத் தன்மையை அடைந்தீர். என்னைத் தர்சித்ததின் பயனாக நீர் மருத்கணங்களுள்ளவரையில் ஜீவித்திருக்கக் கடவீர். ஸகல மங்களங்களையும் அடையக்கடவீர். இஷ்டமானவிடத்திற்குச் செல்லலா"மென்றார். கௌசிகர் அவரையும் தேவர்களையும் நமஸ்கரித்துத், தான் வெகுகாலமாய்ச் செய்த உக்ரமான தபஸ் தன் எண்ணப்படி பலித்ததால் பரமானந்தமடைந்து, "லோகேச்வர! ப்ராஹ்மண பதவியும் தீர்க்காயுஸும் எனக்குக் கிடைத்தால், ப்ரஹ்மஞானத்திற்கு ஸாதனமான ப்ரணவ வித்தையையும் யக்ஞங்களுக்கு ஸாதனமான வஷட்காரமும் அவைகளை உபதேசிக்கும் வேதவேதாங்கங்களும் என்னை அடையட்டும். வஸிஷ்டர் முதலிய ப்ராஹ்மணர்கள், பிறர்க்கு அத்யயனஞ் செய்விக்கவும் யாகஞ் செய்விக்கவும் அதிகாரம் பெற்றிருப்பது போல் எனக்கும் அதிகாரம் வேண்டும். தாங்களும் தேவர்களும் ப்ராஹ்மண பதவியை எனக்கு அனுக்ரஹித்தீர்கள். ஆனால் நான் ப்ராஹ்மண ஜாதியில் பிறக்கவில்லை. தபஸால் அந்த ஸ்தானத்தை அடைந்தேன். வஸிஷ்ட மஹர்ஷியோ ப்ராஹ்மணராய்ப் பிறந்தவர். தன் ப்ரஹ்மதேஜஸால் என் க்ஷத்ரிய பலத்தை அடக்கினவர். ப்ரஹ்மாவின் மானஸபுத்ரர். ப்ரஹ்மஸ்வரூபத்தை உபதேசிக்கும் உபநிஷத்துகள் அடங்கின வேதங்களையும், க்ஷத்ரியர்களுக்கு வேண்டிய சாந்தி புஷ்டி சத்ருநாசம் ஜயம் முதலியவைகளைக் கொடுக்கும் தனுர்வேதத்தையும், அதர்வணவேதத்தையும் கரை கண்டவர். அவர் என்னை ப்ரஹ்மர்ஷியென்று ஒப்புக்கொள்ளட்டும். என் மனதிலுள்ள கோரிக்கை இதே. இதை நிறைவேற்றின பிறகு நீங்கள் இஷ்டப்படி போகலாம். இல்லாவிட்டால் மறுபடியும் தபஸ் செய்வே"னென்றார். உடனே தேவர்கள் வஸிஷ்டரை ப்ரார்த்தித்து, "ஸ்வாமி! எங்களுடைய வார்த்தையை நிஜமாக்கவேண்டு"மென்றார்கள். அவர், "விச்வாமித்ரரே! நீர் ப்ரஹ்மர்ஷியே. இதில் ஸந்தேஹமில்லை. ப்ராஹ்மண ஜாதியில் பிறந்தவர்களுக்குரிய ஸம்ஸ்காரம் முதலிய ஸகல ப்ரயோஜனங்களும் உமக்குக் கிடைத்தன" வென்றார். அவருடைய வார்த்தையை தேவதைகளும் உறுதிசெய்து, அவ்விரு மஹர்ஷிகளுக்கும் ஸ்நேஹம் செய்வித்துத் திரும்பிப் போனார்கள்.

இப்படி இந்த மஹாத்மா உத்தமமான ப்ராஹ்மண பதவியை அடைந்து வஸிஷ்டரைப் பார்த்து, "ஸ்வாமி! இவ்வளவுக்கும் தாங்களே காரணம். நான் எவ்வளவு தடுத்தும் எனக்கும் என் பரிவாரங்களுக்கும் விருந்து செய்வித்தீர்கள். அதற்கு ஸாதனமாயிருந்த காமதேனுவை நான் எவ்வளவு யாசித்தும் தாங்கள் கொடுக்கவில்லை. அதைப் பலாத்காரமாக அபஹரித்தேன். அதனால் நம்மிருவருக்கும் யுத்தம் நடந்தது. என் ஸைன்யங்களும் புத்ரர்களும் கடுந்தபஸால் பரமசிவனிடத்திலிருந்து நான் அடைந்த திவ்யாஸ்த்ரங்களும் தங்களுடைய ப்ரஹ்மதேஜஸால் அழிந்தன. அதைக் கண்டு தங்களைப்போல் நானும் ப்ராஹ்மணனாய், ப்ரஹ்ம தேஜோபலத்தை அடையவேண்டுமென்று ஆசையுண்டாயிற்று. தாங்கள் யாவையும் அறிந்தவர்கள்; இப்படிப் பின்வருவதைக் கண்டே என்னை விருந்திற்கு அழைத்தீர்களென்று இப்பொழுது தெரிகிறது. ஆகையால் தங்களால் நான் பரம உபகாரம் பெற்றேன்" னென்று அவரை வெகு ப்ரியத்தோடும் பக்தியோடும் பூஜித்தார். தன் எண்ணங்கள் நிறைவேறி, மஹாதபஸ்வியாய் பூமியெங்கும் இஷ்டப்படி ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறார்.

"ராம! இந்த மஹாத்மா, க்ஷத்ரியராய்ப் பிறந்து நான் சொன்னவாறு ப்ராஹ்மண பதவியை அடைந்தார். அந்த முனிச்ரேஷ்டர் இவரே. தபஸே ரூபமெடுத்து வந்ததென்று இவரைச் சொல்லலாம். தர்ம மார்க்கத்திலிருந்து க்ஷணமாவது விலகமாட்டார். வீர்யம் இவரிடத்திலேயே குடிகொண்டிருக்கிற" தென்று சதானந்தர், கௌசிகருடைய பூர்வசரிதத்தையும் மஹிமையையும் விஸ்தாரமாய் வர்ணித்தார்.

ராமலக்ஷ்மணர்களுக்கு முன்பாக ஜனகர், கௌசிகரைக் கைகூப்பி வணங்கித், "தாங்களும் இந்த இக்ஷ்வாகுகுல ராஜபுத்ரர்களும் என்யக்ஞத்திற்கு வந்ததால் தன்யனானேன், அனுக்ரஹம் பெற்றேன். மஹர்ஷே! தங்களைத் தர்சித்ததால் பரிசுத்தனானேன். மஹானுபாவ! ப்ரஹ்மர்ஷிகளுக்குள் ச்ரேஷ்டரே! தங்களைத் தரிசித்ததால் அநேக உத்தமகுணங்களை அடைந்தேன். தாங்கள் செய்த மஹாதபஸையும், தங்களுடைய அனந்த கல்யாண குணங்களையும் நானும் ராம லக்ஷ்மணர்களும் இந்த ஸபையிலுள்ளவர்களும் விஸ்தாரமாய்ச் சொல்லக்கேட்டோம். பிதாமஹரான ப்ரஹ்மாவின் குணங்களையும் உமாபதியான சங்கரனுடைய குணங்களையும்போல் தங்களுடைய தபஸும் பலமும் குணங்

களும் வர்ணிக்கமுடியாதவை; மனதால் நினைக்கமுடியாதவை. ஆச்சர்யகரமான தங்களுடைய சரிதங்களைக் கேட்கக் கேட்கப் போதுமென்ற எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. ஆனால் ஸூர்யன் அஸ்தமிக்கப்போகிறான்; ஸாயங்கால க்ரியைகளைச் செய்ய வேண்டும். காலையில் தாங்கள் எனக்கு மறுபடியும் தர்சனங் கொடுக்க வேண்டும். தபோநிதே! தங்களுக்குப் பரம மங்களமுண்டாகட்டும். என்னை உத்திரவு கொடுத்தனுப்பவேண்டு''மென்றார். விச்வாமித்ரர் பரமஸந்தோஷமடைந்து, ஜனகரைக் கொண்டாடி, போக உத்திரவு கொடுத்தார். அவ்வரசனும் சதாநந்தரும் பந்துக்களும் விச்வாமித்ரரை ப்ரதக்ஷிணஞ் செய்து அங்கிருந்து போனார்கள். கௌசிகரும் அங்குள்ள மஹர்ஷிகளால் உபசரிக்கப்பட்டுத் தன் விடுதிக்குப் போனார்.

## ஸர்க்கம் 66.

## ஸீதை.

காலையில் ஜனகர் நித்யகர்மங்களையும் யாககார்யங்களையும் முடித்து, ராம லக்ஷ்மணர்களுடன் விச்வாமித்ரரை யாகசாலைக்கு அழைப்பித்து விதிப்படிப் பூஜித்தார். பிறகு ''மஹர்ஷே! நான் தங்களுடைய ஊழியன்; என்ன செய்யட்டும். கட்டளையிடுங்க''ளென்றார். அப்பொழுது கௌசிகர், ''இதோவிருக்கும் ராம லக்ஷ்மணர்கள் தசரதருடைய புத்ரர்கள்; க்ஷத்ரிய ச்ரேஷ்டர்கள்; பலபராக்ரமத்தால் ப்ரஸித்தர்கள். உம்மிடத்திலிருக்கும் சிவதனுஸைப் பார்க்க வந்திருக்கிறார்கள். அதை இவர்களுக்குக் காட்டும். உமக்குப் பரம க்ஷேமமுண்டாகட்டும். அதைப் பார்த்துத் திருப்தியடைந்து திரும்பிப்போகட்டு''மென்றார். ஜனகர், ''இந்த வில் எனக்குக் கிடைத்த காரணத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள்.

என் வம்சத்தின் ஆதி புருஷனான நிமியிலிருந்து ஆறுவது அரசன் தேவராதர். அவரிடத்தில் தேவர்கள் இதைக் கொடுத்துக் காப்பாற்றிவரச் சொன்னார்கள். முன்பு தக்ஷ யாகத்தில் பரமசிவன் தேவர்களிடத்தில் கோபங்கொண்டு வில்லை வளைத்து நாணேற்றித் ''துஷ்டர்களே! இந்த யாகத்தில் நீங்கள் எனக்குப் பாகம் கொடுக்காததால் உங்களுடைய தலையை இதனால் பிளக்கிறே''னென்றார். தேவர்கள் பயந்து நடுங்கி மனந்

தளர்ந்து, சங்கரனை நமஸ்கரித்து ஸ்தோத்ரங்களால் ஸமாதானஞ் செய்தார்கள். அவருடைய கோபந்தணிந்தது. தேவர்களிடத்தில் ப்ரீதியடைந்து தன் வில்லை அவர்களுக்குக் கொடுத்தார். அவர்கள் அதைத் தேவராதரிடத்தில் வைத்தார்கள். பிறகு நான் யாகஞ் செய்ய கல்பனையால் யாகபூமியை உழுது சுத்திசெய்துகொண்டிருக்கையில் ஒரு பெண்குழந்தை அங்கிருந்து கிடைத்தது. அவள் பூமியிலிருந்து உண்டானதால் அவளுக்கு ஸீதையென்று பெயரிட்டு என் பெண்ணாய் வளர்த்துவருகிறேன். இந்த வில்லை வளைத்து நாணேற்றுகிறவனுக்கு இவளை விவாஹஞ் செய்விப்பதாய் ப்ரதிக்ஞைசெய்திருக்கிறேன். ஸ்த்ரீபுருஷ ஸம்பந்தமில்லாமல் பிறந்த இந்தப் பெண்ணைப் பல அரசர்கள் தங்களுக்குப் பார்யையாகக் கேட்டார்கள். பரமசிவனுடைய இந்த வில்லை வளைத்து நாணேற்றுகிறவருக்கே இவளை மணஞ் செய்விப்பதாக ப்ரதிக்ஞைசெய்திருக்கிறேனென்று அவர்களுக்குச் சொல்லி அனுப்பிவிட்டேன். அவர்கள் மிதிலைக்கு வந்து சிவதனுவின் வீர்யத்தைப் பரீக்ஷிக்க ஆரம்பித்தார்கள். ஒருவராவது அதை எடுத்து நிறுத்தி வளைக்கமுடியவில்லை. அவர்களுடைய வீர்யம் அல்பமென்றறிந்து, 'உங்களுக்கு ஸீதையை மனைவியாகக் கொடுக்கமாட்டே'னென்றேன். அவர்கள் கோபங்கொண்டு வில்லை வளைத்து ஸீதையை மணஞ்செய்யமுடியாவிட்டாலும், எல்லோரும் சேர்ந்து இவனை ஜயித்து இவளை அபஹரிப்போமென்று நிச்சயித்து மிதிலையை முற்றுகையிட்டார்கள். ஒரு வருஷம் வரையில் என்னால் கூடிய மட்டும் எதிர்த்து யுத்தஞ்செய்தேன். என் கோட்டைகளும் அரண்களும் காவல்களும் யுத்த ஸாமக்ரிகளும் அழிந்தன. அப்பொழுது ஒன்றும் தோன்றாமல் துக்கமடைந்து கடுந்தபஸால் தேவர்களைத் திருப்திசெய்தேன். அவர்கள் எனக்குச் சதுரங்க பலத்தை அனுக்ரஹித்தார்கள். அதனால் என் சத்ருக்களை ஜயித்து மூலைக்கு மூலை துரத்தினேன். அவ்வரசர்கள் வில்லை வளைக்க முடியாமல் அவமானப்பட்டு என் பட்டணத்தைப் பிடிக்கமுடியாமல், என் ஸைன்யங்களால் முறியட்டு ஓடினார்கள். இந்த வில்லின் விருத்தாந்தம் இதே. தேஜஸால் ஜ்வலிக்கும் இந்தச் சிவதனுஸை ராமலக்ஷ்மணர்களுக்குக் காட்டுகிறேன். இதை ராமன் வளைத்து நாணேற்றினால் பூமியிலிருந்துண்டான ஸீதையை அவனுக்குப் பார்யையாகக் கொடுக்கிறே"னென்றார்.

## ஸர்க்கம் 67.

## ராமன் வில்லை முறித்தது.

ஜனகர் இப்படிச் சொல்ல கௌசிகர் "மஹாராஜ! ராமனுக்கு அந்த வில்லைக் காட்டு"மென்றார். ஜனகர் தன் ஸமீபத்திலிருந்த உத்யோகஸ்தர்களைப் பார்த்து, "கந்தபுஷ்பங்களால் பூஜிக்கப்பட்ட அந்த வில்லைச் சீக்ரத்தில் கொண்டுவாருங்க"ளென்றார். அவர்கள் நகரத்திற்குப் போய் அதை எடுத்து வந்தார்கள். தீர்க்கமான தேகத்தையும் அளவற்ற பலத்தையுமுடைய ஐயாயிரம் மனுஷ்யர்கள் அதை எட்டுச் சக்ரங்களுள்ள வண்டியிலேற்றி வெகு ச்ரமத்துடன் இழுத்துக்கொண்டுவந்தார்கள். அந்த இருப்புப் பெட்டியை மந்திரிகள் ஜனகருக்கு முன் வைத்து, "எல்லா அரசர்களாலும் பூஜிக்கப்பட்ட இந்த ச்ரேஷ்டமான வில்லைப் பார்க்க வேண்டுமென்றீர்களே. இதோ கொண்டுவந்திருக்கிறோ"மென்றார்கள். ஜனகர் கைகூப்பிக் கௌசிகரை நமஸ்கரித்து அவரையும் ராமலக்ஷ்மணர்களையும் பார்த்து "மஹர்ஷே! இந்தச் சிவதனுஸை ஜனகவம்சத்தரசர்கள் வெகு காலமாய்ப் பூஜித்து வருகிறார்கள். ஸீதையை விவாஹஞ் செய்யவிரும்பின அரசர்களும் இதை எடுத்து வளைத்து நாணேற்றமுடியாமல், இது எல்லை அற்ற வீர்யமுள்ளதென்று கொண்டாடினார்கள். தேவாஸுர ராக்ஷஸ கந்தர்வ யக்ஷ கின்னர உரககணங்களும் இந்த விஷயத்தில் அசக்தர்களென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். நம்மைப் போன்ற கேவல மனுஷ்யர்கள் இதை அசைக்கவும் முடியுமோ, தூக்கமுடியுமோ, வளைக்க முடியுமோ, நாணேற்ற முடியுமோ, டங்காரஞ் செய்யமுடியுமோ, பாணத்தைப் பூட்ட முடியுமோ? இப்படி மஹாவீர்யம் பொருந்தின இந்த வில்லை ராமலக்ஷ்மணர்கள் பார்க்கட்டு"மென்றார்.

ஜனகர் இப்படிச் சொல்ல விச்வாமித்ரர், "குழந்தாய், ராம! இந்த வில்லைப் பா"ரென்றார். ப்ரஹ்மர்ஷியின் உத்தரவுப்படி ராமன் பெட்டியின் மூடியைத் திறந்து வில்லைப் பார்த்து, "ஸ்வாமி! இந்த ச்ரேஷ்டமான தனுஸைக் கையால் தொடட்டுமா? இதை எடுத்து வளைத்து நாணேற்றலாமோ"வென்றார். ஜனகரும் கௌசிகரும், அப்படியே செய்யென்றார்கள். அந்த யாக ஸதஸிலுள்ள எண்ணிறந்த ஜனங்கள் ஆச்சர்யத்துடன் பார்த்

துக்கொண்டிருக்கையில், ஸ்ரீராமன் அதின் ஒரு நுனியைக் காலின் பெருவிரலால் அழுத்தினார். கழியால் தலையில் அடிக்கப்பட்ட கிருஷ்ண ஸர்ப்பத்தைப்போல் அது உடனே நிமிர்ந்து நின்றது. அவர் அதை நடுவில் பிடித்து நிறுத்தி நாணேற்றிக் காது வரையில் இழுத்தார். அபாரமான வீர்யம் பொருந்தின அந்தப் பரம சிவனுடைய வில் நடுவில் ஒடிந்தது. ஆகாசத்தில் வாயுக்கள் ஒன்றோடொன்று தாக்கிப் பூமியில் விழுவதுபோல் ஒரு பெரும் சப்தமுண்டாயிற்று. மஹா பர்வதங்கள் பிளக்கும்பொழுது நடுங்குவதுபோல் பூமி நடுங்கிற்று. ராம லக்ஷ்மணர்களையும் விச்வாமித்ரரையும் ஜனகரையும் தவிர அங்குள்ளவர்கள் அந்தச் சப்தத்தால் மெய்மறந்து பூமியில் விழுந்தார்கள். சற்றுநேரம் கழித்து அவர்கள் ப்ரக்ஞை தெளிந்தவுடன் ஜனகர் விச்வாமித்ரரை வணங்கிக் கைகூப்பி "ஸ்வாமி! தசரத புத்ரனை ராமனுடைய வீர்யத்தைக் கண்டறிந்தேன். வெகு அத்புதமாயும் மனதால் நினைக்கமுடியாமலுமிருக்கிறது. இதுவரையிலும் இப்படி ஓரிடத்திலும் பார்த்ததில்லை. 'தேவாஸுரகணங்களும் க்ஷத்ரியவீரர்களும் ராஜச்ரேஷ்டர்களும் நெருங்கமுடியாத வில்லை இந்தச் சிறு பையன் எடுத்து வளைத்து நாணேற்றமுடியுமோ? இல்லாவிட்டால் என் ஸீதை விவாஹமில்லாமல் போவாளோ' வென்று நான் கவலைகொண்டு ஸந்தேஹப்பட்டதுண்டு. ஆனால் ராமனுடைய வீர்யம் இவ்விதமென்று நான் ஒரு பொழுதும் எண்ணினதேயில்லை. இது மனுஷ்யனால் ஸாத்யமல்ல. லோகத்தில் எனக்கு யாதொன்றிலும் அபேக்ஷையில்லை. எனக்கு யாதொன்றும் கிடையாது. ஆகையால் என் ஐச்வரியத்திற்கு எல்லையில்லை. மிதிலை நெருப்புப்பிடித்தெரிந்தால் என்னைச் சேர்ந்த யாதொன்றும் எரிக்கப்படவில்லையேயென்று வைராக்யமடைந்த நிகரற்ற கீர்த்திசாலிகளான ஜனக வம்சத்தில் பிறந்த ஸீதை, எல்லோராலும் கொண்டாடப்பட்ட ரகுநாதனைப் பர்த்தாவாக அடைந்தாள். ஸ்த்ரீபுருஷ ஸம்பந்தமில்லாமல் பூமியிலிருந்துண்டானதால் ஸ்வபாவத்திலேயே அவள் நிகரற்ற கீர்த்திசாலி. மேலும் என்னைப் பிதாவாய் அடைந்ததால் விசேஷ கீர்த்தி பெற்றாள். அவளுக்குக் கிடைத்த பர்த்தாவோ எவ்விதத்திலும் ஒப்பற்றவர். கைநிறைந்த பொன்னிலும் கண்ணிறைந்த கணவனே அதிகமென்ற பழமொழிப்படி, பெண்கள் விசேஷ ரூபலாவண்யமுள்ள புருஷர்களையே மணஞ்செய்ய விரும்புவார்கள். ராமனோ மன்மதனுக்கு மன்மதன். கன்யையின் தாய் எல்லையற்ற ஐச்வரியமுள்ளவனைத் தன் பெண் மணம்புரிய வேண்டுமென்று விரும்புவாள். ராமனுடைய ஐச்வரியமோ அளவற்

றது. அதிக புத்திமானும் வேத சாஸ்த்ரங்களில் நிபுணனும் சுத்தமான ஆசாரமுடையவனுமான புருஷனையே தன் புத்ரி மணஞ்செய்ய வேண்டுமென்று பிதா விரும்புவார். ராமனோ புத்தி வித்யை ஞானம் ஆசாரம் வீர்யம் பராக்ரமம் முதலியவைகளில் ஒப்பற்றவன். பல தலைமுறைகளாய்க் கீர்த்திபெற்றுச் சுத்தமான ஆசாரமுள்ள குலத்தில் ஸம்பந்தஞ்செய்யவேண்டுமென்று பந்துக்கள் விரும்புவார்கள். இக்ஷ்வாகு வம்சத்திற்கு மேலான குலமுண்டோ? அதில் பிறந்த அரசர்களைவிட குணசாலிகளுண்டோ? இவ்விதமான பெருமை வாய்ந்த ராகவனைப் பர்த்தாவாயடைந்ததால் ஸீதையின் கீர்த்தி இன்னும் அதிகமாயிற்று. புத்ரனாயிருந்தால் தான் ஸம்பாதித்த கீர்த்தியையே அடைவான். புத்ரியானதால் தான் பிறந்த வம்சத்திற்கும் புகுந்த வம்சத்திற்கும் மூவேழு தலைமுறைகள்வரையில் விசேஷகீர்த்தியை ஸம்பாதிப்பாள். என் ப்ரதிக்ஞை நிறைவேறிற்று. வீரச்ரேஷ்டனுக்கே என் பெண்ணை மணஞ்செய்விக்கும் பாக்யத்தைப் பெற்றேன். என் உயிர்க்குயிரான ஸீதையை ராமனுக்குப் பார்யையாகக் கொடுப்பதில் எனக்குள்ள திருப்திக்கு அளவில்லை. தாங்கள் உத்திரவு செய்தால் இப்பொழுதே என் மந்த்ரிகள் அயோத்யைக்கு அதிவேகமாய் ரதங்களில் போய், இங்கே நடந்த யாவற்றையும் தசரதமஹாராஜனுக்குத் தெரிவிக்கட்டும். என் ப்ரதிக்ஞையையும்; இந்த ராஜகுமாரர்கள் தங்களால் ரக்ஷிக்கப்பட்டு இங்கே வந்ததையும், ராமன் பரமசிவனுடைய வில்லை முறித்து ஸீதையை அடைந்ததையும் விஸ்தாரமாய்ச் சொல்லட்டும். அதிசீக்ரத்தில் இந்த மஹாராஜாவையும் பந்து பரிவாரஸைன்யங்களையும் இங்கே அழைத்துவரட்டு" மென்றார். கௌசிகர் அதற்கு ஸம்மதிக்க, ஜனகர் மந்த்ரிகளை அழைத்து, விவாஹ பத்ரிகைகளைக் கொடுத்துச், சொல்ல வேண்டியவைகளை நன்றாயெடுத்துச் சொல்லி, தசரதரை ஸகல மர்யாதைகளுடன் அழைத்துவரக் கட்டளையிட்டார்.

---

## ஸர்க்கம் 68.

## தசரதர் ஸமாசாரத்தை அறிந்தது.

---

ஜனகரால் அனுப்பப்பட்ட மந்த்ரிகள் மூன்றுநாள் இரவுபகலாய்ப் ப்ரயாணஞ் செய்து, குதிரைகள் களைத்து, நான்காவது நாள் அயோத்யைக்கு வந்தார்கள். அரண்மனை வாசலிலுள்ள காவற்காரரிடத்தில், "மிதிலாபதியான ஜனக மஹாராஜாவால் அனுப்பப்பட்ட தூதர்கள்

தங்களைத் தர்சிக்க விரும்புகிறார்களென்று அரசனுக்குத் தெரிவிக்கச்சொன்னார்கள். அவர்கள் அப்படியே செய்ய, அவருடைய உத்திரவால் மந்திரிகளை உள்ளே அழைத்துப் போனார்கள்.

வயஸ் முதிர்ந்து தேவேந்த்ரனைப்போல் ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கும் தசரதரைக் கண்டு, அவர்கள் இந்த்ரியங்களை அடக்கிக் கொண்டு, கைகூப்பி, வெகு ஜாக்ரதையாய், மதுரமான வார்த்தைகளால் "ஸ்வாமி! மிதிலாபதியும் எங்கள் ப்ரபுவுமான ஜனக மஹாராஜா, தாங்களும் தங்களுடைய அக்னி ஹோத்ரமும் உபாத்யாயரும் புரோஹிதரும் வேலைக்காரரும் க்ஷேமமாவென்று அடிக்கடி வெகு ப்ரீதியுடன் விசாரிக்கிறார். பிறகு விச்வாமித்ர மஹர்ஷியின் அநுமதி பெற்றுத் தங்களுக்குப் பின்வருமாறு தெரிவிக்கிறார். 'என்னிடத்திலிருக்கும் சிவதனுஸை நாணேற்றுகிறவனுக்கே என் புத்ரியைப் பார்யையாகக் கொடுப்பேனென்று நான் ப்ரதிக்ஞைசெய்திருப்பது தங்களுக்குத் தெரியுமே.' இப்படி யத்னஞ் செய்து பலிக்காத அரசர்கள் ஒன்று கூடி மிதிலையை முற்றுகையிட்டதும் அபஜயமடைந்ததும் தங்களுக்குத் தெரியுமே. விச்வாமித்ர மஹர்ஷியுடன் என் யாகத்தைப் பார்க்கவந்த தங்களுடைய புத்ரர்களான ராம லக்ஷ்மணர்களில், ராமன் அந்த வில்லை எடுத்து வளைத்து நாணேற்றி முறித்தார். தக்ஷயாகத்தில் எதைக் கண்டு தேவர்கள் பரமசிவனிடத்தில் பயந்து நடுங்கி ஓடினார்களோ அதே வில்லை எண்ணிறந்த ஜனங்கள் பார்த்துக் கொண்டிருக்க, ராமன் விளையாட்டாய் வளைத்து முறித்தார். நான் செய்த ப்ரதிக்ஞைப்படி ஸீதையை அவருக்கு விவாஹஞ் செய்துகொடுக்கவேண்டும். அதற்குத் தங்கள் அநுமதியை வேண்டுகிறேன். புரோஹிதர்கள் உபாத்யாயர்கள் மந்த்ரிகள் ராஜ்ய உத்யோகஸ்தர்கள் பந்து மித்ரபரிவார ஸைன்யங்களுடன் உடனே புறப்பட்டு மிதிலைக்கு வந்து, நிகரற்ற கீர்த்திசாலிகளான ராம லக்ஷ்மணர்களைப் பார்த்து ஸந்தோஷிக்கவேண்டும். அது எனக்குப் பரமானந்தத்தைக் கொடுக்கும்; ராம லக்ஷ்மணர்களுடைய விவாஹ மஹோத்ஸவத்தைத் தாங்கள் வந்து நடப்பித்து ஆனந்தமடையவேண்டுமென்கிறார். விச்வாமித்ர மஹர்ஷியும் சதானந்த மஹர்ஷியும் இப்படிச் சொல்ல அநுமதிகொடுத்தார்க"ளென்றார்கள். தசரதருடைய பெருந்தன்மையாலும் மர்யாதையாலும் ப்ரியத்தாலும் தைர்யமாய்ப் பரபரப்பில்லாமல் அமரிக்கையாய்த் தங்களுடைய ஸமாசாரத்தைத் தசரதருக்குத் தெரிவித்து, அவருடைய கௌரவத்தையால் கட்டுப்பட்டு, அதிகமாய்ச் சொல்லாமல் நிறுத்திக்கொண்டார்கள்.

தூதர்களின் வார்த்தையைக் கேட்டுத் தசரதர் பரமானந்த மடைந்தார். வஸிஷ்டரையும் வாமதேவரையும் மற்ற மந்த்ரிகளையும் பார்த்துக், "கௌஸல்யையின் கண்மணியான ராமசந்த்ரன் லக்ஷ்மணனுடன் விச்வாமித்ர மஹர்ஷியால் ரக்ஷிக்கப்பட்டு மிதிலையிலிருக்கிறான். ஜனகர் அவனுடைய வீர்யத்தைப் பரீக்ஷித்தறிந்து தன் புத்ரியை அவனுக்கு விவாஹஞ் செய்துகொடுக்க விரும்புகிறாராம். அது நங்களுக்கு இஷ்டமானால் தாமஸமின்றி அதிசீக்ரமாய்ப் புறப்பட்டு மிதிலைக்குப் போவோ"மென்றார். மந்த்ரிகளும் மஹர்ஷிகளும் அதை 'நல்லது நல்ல' தென்று கொண்டாடினார்கள். பிறகு தசரதர் ஜனகருடைய மந்த்ரிகளைப் பார்த்து "இங்கிருந்து நாளை தினத்தில் புறப்பட்டுப் போவோ"மென்றார். அவர்கள் வெகு ப்ரீதியுடன் உபசரிக்கப்பட்டு அன்றிரவில் அங்கே தங்கினார்கள்.

## ஸர்க்கம் 69.

## தசரதர் மிதிலைக்கு வந்தது.

மறுநாட்காலையில் தசரதர் பந்துமித்ர உபாத்யாய மந்த்ரி வர்க்கங்கள் புடைசூழ, ஸபையில் வீற்றிருந்து, "ஸுமந்த்ரரே! நமது பொக்கிஷத்தலைவர்கள் வேண்டியவரையில் ரத்னங்களையும் தனங்களையும் எடுத்துக்கொண்டு, விவாஹமஹோத்ஸவத்திற்குத் தகுந்த ஏற்பாடுகளுடன் முன்னே போகட்டும். சதுரங்க ஸைன்யமும் ரதம் பல்லக்கு யானை குதிரை முதலிய வாஹனங்களும் என் உத்திரவான்வுடன் புறப்படத் தயாராயிருக்கட்டும். வஸிஷ்டர் வாமதேவர், ஜாபாலி, காச்யபர், தீர்க்காயுளுள்ள மார்க்கண்டேயர், காத்யாயனர் முதலிய மஹாத்மாக்கள் எனக்கு க்ஷேமமுண்டாக முன்னே செல்லட்டும். என் ரதத்தை ஸித்தமாய் வைத்திரும். தாமஸஞ் செய்யவேண்டாம். ஜனகருடைய தூதர்கள் சீக்ரப்படுத்துகிறார்க"ளென்றார்.

அப்படியே மஹர்ஷிகள் முந்தியும் தசரதர் நடுவிலும் ஸைன்யங்கள் பின்னுமாக அயோத்யையிலிருந்து புறப்பட்டு, நான்கு தினங்கள் ப்ரயாணஞ் செய்து விதேஹதேசத்திற்கு வந்தார்கள். அதைக் கேட்டு ஜனகர் காணிக்கைகளுடன் அவரை எதிர்கொண்டழைத்துத் தகுந்தபடி உபசரித்தார். தன் ப்ரதிக்ஞை நிறைவேறி, உத்தமகுலத்தில் தன் புத்ரிக்கு ஸம்பந்தம் கிடைத்ததால் பரமானந்த

மடைந்த அவ்வரசன் "மஹாராஜ! க்ஷேமமாய் வந்தீர்களா? தாங்கள் இங்கே வரப் பெற்றது, என் அதிருஷ்டவசமே. தங்களுடைய புத்ரர்கள் வீர்யத்தால் ஸம்பாதித்த நிகரற்ற கீர்த்தியைக் கேட்டு ஆனந்தமடைவீர்கள். தேவர்களால் சூழப்பட்டுத் தேவராஜன் வருவதுபோல், தர்மாத்மாவான வஸிஷ்டபகவானும் மற்ற ப்ராஹ்மணோத்தமர்களும் நானிருக்குமிடத்திற்கு வந்தது என் பாக்யமே. வீரச்ரேஷ்டர்களும் மஹாத்மாக்களுமான ரகு குலத்தில் எனக்கு ஸம்பந்தங்கிடைத்ததால் என் புத்ரியின் விவாஹத்திற்கு நேரும் இடையூறுகளெல்லாம் நீங்கின. என் வம்சம் யாவரும் பூஜிக்கத் தகுந்ததாயிற்று. விவாஹ நிச்சயத்தைப்பற்றின வார்த்தைகளைக் காலையில் பேசிக்கொள்ளலாம். இன்னும் மூன்று நான்கு தினங்களில் இந்த யாகம் முடியும். உடனே ரிஷிகளின் அனுமதி பெற்று ப்ராஹ்மவிவாஹத்தை நடத்துவோ"மென்றார். அதற்குத் தசரதர் வெகுசாதுர்யமாய்த், "தர்மரஹஸ்யத்தை அறிந்தவர்களுக்குள் ச்ரேஷ்டரே! என் புத்ரர்களின் வீர்யத்தால் ஸந்தோஷமடைந்து உமது பெண்களை அவர்களுக்கு விவாஹஞ் செய்துகொடுக்க நிச்சயித்திருப்பதைக் கேள்விப்பட்டேன். க்ஷத்ரியனானையால் நான் இதுவரையில் பிறர்க்குக் கொடுத்தவனே யல்லாமல் தானம் வாங்கினதில்லை. அந்த விஷயத்தில் எனக்கு அனுபவமில்லை. ஆனாலும் கொடுப்பவர்களின் ஸமயத்தை வாங்குகிறவர்கள் அனுஸரிக்க வேண்டுமென்று கேட்டிருக்கிறேன். உமது இஷ்டப்படி நடக்க ஸித்தமாயிருக்கிறே"னென்று தர்மத்திற்கு ஒத்து வணக்கமாயும் கீர்த்திகரமாயும் மறுமொழிசொன்னார். 'தன் புத்ரர்களின் வீர்யத்தால் என் பெண்களை அடைந்து இஷ்டப்படி என் அனுமதியின்றி மணஞ்செய்து கொள்ளலாம். அப்படியிருந்தும் இவ்வளவு வினயமாய்த் தன் பதவி செல்வம் வயஸ் கீர்த்தி முதலியவற்றை லக்ஷ்யஞ்செய்யாமல் என்னிடத்தில் பேசினாரே' யென்று ஜனகருக்கு அடங்காத ஆச்சர்யமுண்டாயிற்று.

அங்கே வந்திருந்த மஹர்ஷிகள் ஒருவர்க்கொருவர் ஸந்தித்து, ப்ரியத்துடன் பேசிக்கொண்டு, அன்றிரவை வெகு ஸந்தோஷமாய்க் கழித்தார்கள். தசரதர் ராம லக்ஷ்மணர்களையும் விச்வாமித்ர மஹர்ஷியையும் கண்டு, பரமானந்தமடைந்து, ஜனகரால் உபசரிக்கப்பட்டு அங்கே வஸித்துக்கொண்டிருந்தார். ஜனகர் யாககார்யங்களை விதிப்படி நடத்தித், தன்புத்ரிகளின் விவாஹத்திற்கு முன்பு நடக்கவேண்டிய அங்குரார்ப்பணம் முதலிய லௌகிக வைதிக கார்யங்களில் கவலை செலுத்தினார்.

## ஸர்க்கம் 70.

## இக்ஷ்வாகு வம்சம்.

மறுநாட்காலையில் ஜனகர் யாக க்ரியைகளை முடித்து ஸபா மண்டபத்தில் வந்து மஹர்ஷிகளுக்கு நடுவில் வீற்றிருந்து சதானந்தரைப் பார்த்து, "ஸ்வாமி! எனக்கு அதிதார்மிகனான ஒரு தம்பியுண்டு. அந்தக் குசத்வஜன் மஹாதேஜஸ்வி, கீர்த்திசாலி; ஜலத்தில் கோட்டைச் சுவர்போல் நாட்டப்பட்டிருக்கும் சூலங்களால் நிறைந்த இக்ஷுமதிநதியால் சூழப்பட்டு, புஷ்பகவிமானம்போல் ஸகல ஜனங்களின் கோரிக்கைகளை நிறைவேற்றும் ஸாங்காச்யமென்ற நகரத்தில் ராஜ்யபாலனம் செய்துவருகிறான். என் யாகத்திற்கு வேண்டிய பதார்த்தங்களை அனுப்பிக்கொண்டு அதைக் காப்பாற்றுகிறானென்று தங்களுக்குத் தெரியுமே. என் புத்ரிகளின் விவாஹமஹோத்ஸவத்தைப் பார்த்து அவனும் ஸந்தோஷிக்கவேண்டியதல்லவா? அவனைச் சீக்ரமாய் அழைத்துவரும்படி உத்திரவு செய்யவேண்டு"மென்றார். உடனே சதானந்தர் நிபுணர்களான தூதர்களை வேகமாய்ச் செல்லும் குதிரைகளின்மேல் அனுப்பினார். மஹேந்த்ரனுடைய ஆக்ஞையால் அவன் தம்பியான உபேந்த்ரனை அழைக்கப்போவதுபோல், அவர்கள் குசத்வஜருடைய நகரத்திற்குப் போய், ஜனகருடைய கட்டளையைத் தெரிவித்தார்கள். அவரும் உடனே புறப்பட்டு மிதிலைக்கு வந்து, மஹா தார்மிகரான ஜனகரையும் சதானந்தரையும் நமஸ்கரித்து, அவர்களுடைய உத்திரவால் உத்தமமான ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்தார்.

பிறகு, அந்த ஸஹோதரர்கள் ஸுதாமாவென்ற மந்த்ரியை அழைத்துச் "சத்ருக்களால் ஜயிக்கமுடியாதவரும் அளவற்ற தேஜஸுள்ளவருமான அயோத்யாதிபதியின் விடுதிக்குப் போய், அவரையும் அவருடைய குமாரர்களையும் மந்த்ரிகளையும் மஹர்ஷிகளையும் தகுந்த மர்யாதையுடன் அழைத்துவரவேண்டு"மென்றார்கள். ஸுதாமா தசரதரிருக்குமிடத்திற்குப் போய் அவரை நமஸ்கரித்துக் கைகூப்பி, "அயோத்யாதிபதே! வீரச்ரேஷ்ட! தங்களுடைய மஹர்ஷி புரோஹித மந்த்ரி பந்து பரிவாரங்களுடன் தங்களைப் பார்க்கவேண்டுமென்று ஜனகமஹாராஜா விரும்புகிறா"ரென்றார். அப்படியே தசரதரும் மஹர்ஷிகளும் மந்த்ரி பரிவாரங்களும் பந்துக்

களும் ஜனகருடைய ஸபாமண்டபத்திற்கு வந்து, அவரால் தகுந்த படி உபசரிக்கப்பட்டார்கள். பிறகு காலதேசத்திற்கு உசிதமாய்ப் பேசுந் திறமையுள்ள தசரதர் ஜனகரைப் பார்த்து, "எங்களுடைய இக்ஷ்வாகு வம்சத்திற்கு வஸிஷ்ட பகவான் பரம குருவென்றும், ஸகல கார்யங்களிலும் முன்னிருந்து பேசுகிறவரென்றும் உமக்குத் தெரியுமல்லவா? விவாஹம் செய்துகொள்ளும் ஸ்த்ரீ புருஷர்க ளின் குலம் பத்துத் தலைமுறைவரையில் ஈத்தமாயும் கீர்த்திபெற்ற தாயு மிருக்கவேண்டுமென்ற ந்யாயத்தால் இங்கிருக்கும் விச்வாமித் ரர் முதலிய மஹர்ஷிகளின் அனுமதிபெற்று, அவர் என் வம்ச பரம் பரையை க்ரமமாக எடுத்துச் சொல்வார்"ரென்றார்.

பிறகு வஸிஷ்டர் ஜனகரையும் சதானந்தரையும் ஸபையிலுள்ள வர்களையும் பார்த்து, "மனோவாக்கிற்கெட்டாத ஸ்வரூபத்தை யுடைய மஹாவிஷ்ணுவிடத்திலிருந்து ப்ரஹ்மா உண்டானார்; அவர் ஒவ்வொரு கல்பத்திலும் உண்டாவதால் ப்ரவாஹ ரூபமாய் நித்யர்; இரண்டு பரார்த்தகாலம் ஆயுஸுள்ளவர்; அவரிடத்திலிருந்து முறையே மரீசி, காச்யபர், விவஸ்வானென்ற ஸூர்யன், வைவஸ்வதமனு, அயோத் யாதிபதிகளுக்கு மூலபுருஷனான இக்ஷ்வாகு, குக்ஷி, விகுக்ஷி, மஹா தேஜஸ்வியும் பராக்ரமசாலியுமான பாணன், அனரண்யன், ப்ருது, த்ரிசங்கு, யுவனாச்வன் (துந்துமாரன்), மாந்தாதா, ஸுஸந்தி, த்ருவ ஸந்தி, ப்ரஸேனஜித்தென்ற ஸஹோதரர்கள், த்ருவஸந்தியின் புத்ரனான பரதன், அஸிதன் உண்டானார்கள். அவருடைய காலத் தில் ஹேஹயர்கள், தால ஜங்கர்கள், சசிபிந்துக்களென்ற அரசர்கள் அவரை யுத்தத்தில் ஜயித்து ராஜ்யத்திலிருந்து துரத்தினார்கள். அவர் தன் இரு மனைவிகளோடும் மந்த்ரிகளோடும் ஹிமயமலைக்குப் போய், ப்ருகு மஹர்ஷி தபஸ் செய்யும் புண்ய ஸ்தலத்தில் வஸித் தார். அவருடைய பத்னிகளில் ஒருத்தி, மற்றொருத்தியின் கர்ப் பத்தை நாசஞ் செய்ய நினைத்து, அவளுக்கு விஷங்கலந்த அன்னத் தைக் கொடுத்தாள். அதைத் தெரியாமல் காளிந்தி யென்ற பார்யை தின்றாள்; அவள் தனக்கு உத்தமமான புத்ரன் பிறக்கவேண்டு மென்று, அங்கே தபஸ் செய்துகொண்டிருந்த ப்ருகு வம்சத்தில் பிறந்த ச்யவன மஹர்ஷிக்குப் பணிவிடை செய்துவந்தாள். தேவர் களைப்போல் தேஜஸ்வியான அந்த முனிச்ரேஷ்டர் அவளிடத்தில் ஸந்தோஷமடைந்து, "நீ தெரியாமல் புஜித்த விஷத்தால் உன் கர்ப் பத்திலுள்ள சிசுவுக்கு யாதொரு கெடுதியும் நேராது. மஹாபாக்ய சாலியே! அது நிகரற்ற பல பராக்ரமத்துடன் உன் வம்சத்தை விளங்கச் செய்யும்; கவலைப்படாதே"யென்றார். சில காலத்திற்குப்

பிறகு அஸிதன் இறந்தான். அந்தத் துக்கத்தால் காளிந்தி மனங் கலங்கி யிருக்கையில் மஹா கீர்த்திமானான ஒரு புத்ரனைப் பெற்றாள். கர்ப்பத்தில் அவனுக்கு விஷ ஸம்பந்தமிருந்தபடியால் ஸகரனென்று பெயர் வந்தது. அவனுக்குப் பிறகு அஸமஞ்சஸ், அம்சுமான், திலீபன், பகீரதன், சகுத்ஸ்தன், ரகு, ப்ரவிருத்தனென்றவர்கள் முறையே பிறந்தார்கள். இவன் ஒரு ஸமயத்தில் "நீ நரமாம்ஸத்தைத் தின்னும் ராக்ஷஸனாகக்கடவா"யென்று சபிக்கப்பட்டான். அதற்குப் பதிலாகச் சபிக்க ஜலத்தைக் கையிலெடுத்தபொழுது அது உசிதமல்லவென்று அவனுடைய பத்னி தடுத்தாள். ஆகையால் அதைத் தன் கால்களில் விட்டவுடன் அவை நிறம் மாறின. ஆகையால் அவனுக்குக் கல்மாஷ பாதனென்று பெயருண்டாயிற்று. அவனுக்குப் பிறகு சங்கணன், ஸுதர்சனன், அக்னிவர்ணன், சீக்ரகன், மரு, ப்ரசுச்ருகன், அம்பரீஷன், நகுஷன், யயாதி, நாபாகன், அஜன், முறையே பிறந்து அரசாண்டார்கள். அஜனுடைய புத்ரனே இதோ! யிருக்கும் தசரதர். இவருடைய புத்ரர்களே ராம லக்ஷ்மணர்கள்.

ஆதிமுதல் வீரர்களும் ஸத்யவாதிகளும் சுத்தர்களும் மஹா தார்மிஷ்டர்களுமான இக்ஷ்வாகு வம்சத்தரசர்களின் குலத்தில் பிறந்த ராமலக்ஷ்மணர்களுக்கு உமது பெண்களை விவாஹஞ்செய்து கொடுக்கும்படி கேட்கிறோம். இவர்கள் எவ்விதத்திலும் ஒருவர்க்கொருவர் தகுந்த வரன்கள். ஆகையால் இதை நீர் அங்கீகரிக்கவேண்டு"மென்றார்.

## ஸர்க்கம் 71.

## நிமிவம்ச பரம்பரை.

அதைக் கேட்டு ஜனகர் கைகூப்பி "மஹர்ஷே! நல்ல குலத்தில் பிறந்தவன் விவாஹ காலத்தில் தன் வம்ச பரம்பரையை எடுத்துச் சொல்லவேண்டும். அப்படியே என் குலக்ரமத்தைச் சொல்லுகிறேன். முன்காலத்தில் தர்மானுஷ்டானத்தாலும் பலத்தாலும் நன்னடத்தையாலும் லோகங்களில் ப்ரஸித்திபெற்ற நிமியென்ற ஒரு அரசனிருந்தார். அவருடைய புத்ரனுக்கு மிதியென்றும் ஜனகரென்றும் பெயருண்டு. இந்த மிதிலாநகரத்தை ஏற்படுத்தினவர் அவரே. அவருடைய வம்சத்தில் முறையே உதாவஸு, நந்திவர்த்தனர், ஸுகேது, தர்மாத்மாவான தேவராதர், பிருஹத்ரதர், மஹாவீரர், ஸுத்ருதி,

திருஷ்டகேது, ஹர்யச்வர், மரு, ப்ரதிந்தகர், கீர்த்திரதர், தேவமீடர், விபுதர், மஹீத்ரகர், கீர்த்திரதர், மஹாரோமா, ஸ்வர்ணரோமா, ஹ்ரஸ்வரோமாவென்றவர்கள் பிறந்தார்கள். இவருக்கு ஸீரத்வஜனென்ற நானும் குசத்வஜனென்ற இந்த என் தம்பியும் புத்ரர்களாய்ப் பிறந்தோம். அவர் எனக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்வித்துத் தபோவனத்திற்குப் போனார். மிகவும் வயஸ் சென்ற எங்கள் பிதா, உத்தம கதியடைந்த பிறகு நான் குசத்வஜனை வெகு அருமையாய்ப் போஷித்துத், தர்மந்தவறாமல் அரசாண்டேன்.

ஸாங்காச்ய நகரத்து அரசனான ஸுதன்வா, "உம்மிடத்திலிருக்கும் சிவதனுஸையும் நிகரற்ற ரூபவதியான ஸீதையையும் எனக்கு அனுப்பு"மென்று தூதர்களால் தெரிவித்தான். நான் அதற்கு ஒப்பாததால் அவன் மிதிலையை முற்றுகை போட்டான். அவனை யுத்தத்தில் கொன்று அவனுடைய ராஜ்யத்தை என் தம்பிக்குக் கொடுத்தேன். தேவகன்யையைப்போல் அழகுள்ளவளும், என்னால் வெகு ப்ரீதியுடன் வளர்க்கப்பட்டவளும் ராமனுடைய வீர்யத்தால் ஜயிக்கப்பட்டவளுமான ஸீதையை ராமனுக்கும், எனக்குப் பிறந்த ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும் விவாஹஞ் செய்து கொடுக்கிறேன். இப்படி மூன்று தடவை உறுதியாகச் சொல்லுகிறேன். இதில் ஸந்தேஹமில்லை. மஹாராஜ! தங்களுடைய குமாரர்களுக்கு ப்ரஹ்மசர்ய வ்ரதத்தை முடிக்கும் ஸமாவர்த்தனத்தையும் விவாஹத்திற்குப் பூர்வாங்கமான நாந்தீச்ராத்தம் முதலிய வைதிக க்ரியைகளையும் செய்யலாம். இன்று சந்த்ரன் மக நக்ஷத்ரத்திலிருக்கிறார். இதற்கு மூன்றாவது தினத்தில் உத்தர பங்குனி நக்ஷத்ரத்தில் தங்களுடைய புத்ரர்களின் க்ஷேமத்திற்காகக் கோதானம் பூதானம் திலதானம் ஹிரண்யதானம் முதலியவைகளைச் செய்யலாம். என் புத்ரிகளுக்குப் பரம மங்களமுண்டாவதற்கு வேண்டிய வைதிக க்ரியைகளை நானும் செய்கிறே" னென்றார்.

## ஸர்க்கம் 72.

## பரத சத்ருக்னர்களின் விவாஹ நிச்சயம்.

பின்பு விச்வாமித்ரர் வஸிஷ்டருடன் ஆலோசித்துப் பராக்ரம சாலியான ஜனகரைப் பார்த்து, "ராஜச்ரேஷ்ட! இக்ஷ்வாகு நிமியென்றவர்களை மூல புருஷர்களாயுடைய வம்சத்தின் மஹிமை நினைக்கமுடியாதது; அளவற்றது; நிகரற்றது. மேலும், ராமனுக்கும் ஸீதைக்கும், லக்ஷ்மணனுக்கும் ஊர்மிளைக்கும் நடக்கும் விவாஹம் இரண்டு வம்சங்களுக்கும் தகுந்தது. ரூபம் ஐச்வர்யம் முதலிய எல்லா விஷயங்களிலும் தம்பதிகள் ஒருவர்க்கொருவர் தகுந்தவர்கள். ஆனால் இதைப்பற்றி உம்மிடத்தில் ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். தர்மாத்மாவான குசத்வஜருக்கு இரண்டு பெண்களிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். ரூபலாவண்யத்தில் நிகரற்ற அந்தக் கன்யைகளைத் தசரத புத்ரர்களான பரதனுக்கும் சத்ருக்னனுக்கும் விவாஹம் செய்விக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். தசரதருடைய நான்கு புத்ரர்களும், இந்த்ரன் யமன் வருணன் குபேரனென்ற லோகபாலர்களைப் போன்றவர்கள். பராக்ரமத்தில் தேவர்களுக்கு ஸமானர்கள். ரூபத்தாலும் யௌவனத்தாலும் எல்லோருடைய மனஸையும் கவர்கிறவர்கள். இவ்விரு வம்சங்களும் தோஷமற்றவை. ஆகையால் பரத சத்ருக்னர்களுக்கு குசத்வஜருடைய பெண்களைப் பார்யைகளாகக் கொடுத்து அந்த ஸம்பந்தத்தையும் அங்கீகரிக்க வேண்டு"மென்றார். இப்படி வஸிஷ்டரும் விச்வாமித்ரரும் சொல்ல, ஜனகர் கைகூப்பி, "முனிச்ரேஷ்டர்களே! என் குலம் இக்ஷ்வாகு வம்சத்திற்கு ஸமமென்று இந்த ஸம்பந்தத்தைச் செய்யும்படி ரிஷிச்ரேஷ்டர்களான தாங்கள் உத்திரவுசெய்ததால் என் குலம் தன்யமாயிற்று. தங்கள் ஆக்ஞைப்படி நடக்க ஸித்தமாயிருக்கிறேன். குசத்வஜனுடைய புத்ரிகளை பரத சத்ருக்னர்களுக்கு மணஞ் செய்விப்பதில் எனக்குப் பரம ஸந்தோஷம். நான்கு ராஜகுமாரர்களும் நான்கு ராஜபுத்ரிகளை ஒரேதினத்தில் பாணிக்ரஹணம் செய்யட்டும். ப்ரஜோத்பத்தி ஸ்தானத்திற்கு அதி தேவதையான பகன், உத்தர பல்குனி நக்ஷத்ரத்திற்கும் தேவதை. ஆகையால் அந்தத் தினத்தில் விவாஹத்தை நடத்துவது ச்லாக்யமென்று ஜ்யோதிஷ வித்வான்கள் சொல்லுகிறார்க"ளென்று மதுரமாய்த் தெரிவித்

தார். பிறகு எழுந்து வணக்கத்துடன் கைகூப்பி "மஹர்ஷிகளே! ச்ரேஷ்டமான தர்மம் எனக்குக் கிடைக்கும்படி செய்தீர்கள். நானும் குசத்வஜனும் தசரதரும் உங்களுடைய சிஷ்யர்கள். எங்களுக்குரிய மூன்று ஸிம்ஹாஸனங்களும் தங்களுடையவை. தசரதருக்கு இந்த மிதிலை எவ்வளவு ஸ்வாதீனமோ அவ்வளவு அயோத்யையும் எனக்கு ஸ்வாதீனம். ஆகையால் தாங்களே இவ்விடத்தில் ப்ரபுக்கள். இந்த ஸிம்ஹாஸனங்களை அங்கீகரித்து மேல் நடக்கவேண்டிய கார்யங்களை ஆக்ஞாபிக்கலா"மென்றார். தசரதர் ஸந்தோஷமடைந்து "ஜனகரே! நீரும் உமது தம்பியும் நிகரற்ற குணசாலிகள். அநேக மஹர்ஷிகளையும் அரசர்களையும் நன்றாகப் பூஜித்திருக்கிறீர்கள். உங்களுக்கு ஸகல க்ஷேமங்களுமுண்டாகட்டும். விவாஹத்திற்குப் பூர்வாங்கமான கோதானம் நாந்தீச்ராத்தம் முதலிய வைதிக க்ரியைகளைச் செய்ய அரண்மனைக்குப் போய் வருகிறே"னென்று அவ்விரு முனி ச்ரேஷ்டர்களையும் முன்னிட்டுக்கொண்டு தன் விடுதிக்குச் சென்றார்.

அங்கே அவர் விதிப்படி நாந்தீச்ராத்தம் செய்து மறுநாட் காலையில் தன் குமாரர்களுக்கு விரத ஸமாவர்த்தனத்தை முடித்தார். ஏராளமாகப் பால் கொடுக்கும் பசுக்களைக் கன்றுகளுடனும், தங்கக் கட்டுகளுடைய கொம்புகளுடனும், பால் கறக்க வெண்கலப் பாத்ரங்களுடனும் ஒவ்வொரு ப்ராஹ்மணர்களுக்கு லக்ஷ லக்ஷமாய்த் தானஞ் செய்து, அளவற்ற த்ரவ்யங்களையும் கொடுத்தார். இப்படித் தன் குமாரர்களின் க்ஷேமத்தை உத்தேசித்து, வைதிக லௌகிக க்ரியைகளைக் குறைவறச் செய்து, பரம ஸந்தோஷமடைந்து, லோகபாலர்களால் சூழப்பட்ட ப்ரஹ்மதேவரைப் போல் தன் குமாரர்களுக்கு நடுவில் விளங்கினார்.

# ஸர்க்கம் 73.

## ஸீதா விவாஹம்.

எந்தத் தினத்தில் தசரதர் தன் புத்ரர்களுக்கு வ்ரத ஸமாவர்த்தனஞ் செய்தாரோ அன்று கேகய ராஜபுத்ரனும் பரதனுக்கு மாமனுமான யுதாஜித் மிதிலைக்கு வந்து தசரதரைக் கண்டு க்ஷேமம் விசாரித்து, "மஹாராஜ! தானும் இன்னும் யாருடைய க்ஷேமத்தைக் கோறுகிறீர்களோ அவர்களும் ஸௌக்யமென்று கேகயாதிபதி வெகு ப்ரீதியுடன் தெரிவிக்கிறார். என் மருமகனைப் பார்க்க விரும்பி அயோத்யைக்கு வந்தேன். நீங்களெல்லோரும் விவாஹ கார்யமாய் மிதிலைக்குப் போனதாய்க் கேள்விப்பட்டு இங்கே வந்தே"னென்றார். தனக்கு வெகு ப்ரியமான தன் மைத்துனனைக் கண்டு தசரதர் ஸந்தோஷித்துத் தகுந்தபடி உபசரித்தார்.

மறுநாட்காலையில் அவர் நித்யகர்மங்களை முடித்துக்கொண்டு பந்து பரிவார மந்த்ரிவர்க்கங்களுடன் மஹர்ஷிகளை முன்னிட்டுக்கொண்டு யாகசாலைக்கு ஸமீபத்திலுள்ள விவாஹ மண்டபத்திற்குப் போனார். அவருடைய குமாரர்கள் விவாஹத்திற்குப் பூர்வாங்கமான வைதிக லௌகிக கார்யங்களை முடித்து, வஸ்த்ராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளை முன்னிட்டுத் தசரதருடைய ஸமீபத்தில் உட்கார்ந்தார்கள். பிறகு வஸிஷ்டர் ஜனகரிடத்தில் வந்து, "ராஜ ச்ரேஷ்ட! அயோத்யாதிபதி தன் புத்ரர்களுக்கு ஸகல விவாஹ பூர்வாங்கங்களை முடித்துக், கன்யாதானஞ் செய்யும் உமது ஸௌகர்யத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார். கொடுக்கிறவரும் பெற்றுக் கொள்ளுகிறவரும் எவ்விதத்திலும் உத்தமமானவர்களாகையால், ஸகல க்ஷேமங்களு முண்டாகும். இந்த ச்லாக்யமான விவாஹத்தைச் செய்து உமது வார்த்தையை நிறைவேற்று"மென்றார். உத்தம தர்மங்களை அறிந்தவரும், வெகு கம்பீர ஸ்வபாவ முள்ளவருமான ஜனகர் அதைக் கேட்டு "என் அரண்மனை வாசலில் தங்களைத் தடுக்கும் காவலாளர்கள் யார்? இங்கே வருவதற்கு யாருடைய உத்திரவைக் கேட்கவேண்டும்? தங்களுடைய கிருஹத்தில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கத் தடையென்ன? அயோத்யை உங்களுக்கு எவ்வளவு ஸ்வாதீனமோ அவ்வளவு இந்த மிதிலையும் ஸ்வாதீனமில்லையா? விவாஹ ஸம்பந்தமான

ஸகல மங்களகார்யங்களையும் என் புத்ரிகளுக்குச் செய்து முடித்தேன். கொழுந்துவிட்டெரியும் அக்னி ஜ்வாலைகளைப்போல் அவர்கள் ஸகல வஸ்த்ராபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, மங்கள வேஷத்துடன் அக்னி வேதிக்கு ஸமீபத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள். நான் ஸித்தமாயிருக்கிறேன். உங்களுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அரண்மனையின் வாசலில் ஏன் தங்கவேண்டும்? காலதாமஸமில்லாமல் வந்து விவாஹத்தை நடத்த வேண்டு"மென்றார். தசரதர் புத்ர மித்ர பந்து மந்திரி புரோஹித மஹர்ஷி பரிவாரங்களுடன் விவாஹ மண்டபத்தில் ப்ரவேசித்தார்கள். ஜனகர் அவர்களுக்குத் தகுந்தபடி மர்யாதை செய்து ஆஸனங் கொடுத்து "வஸிஷ்டமஹர்ஷே! ஸகல லோகங்களுக்கும் பரமானந்தத்தைக் கொடுக்கும் ராமனுடைய விவாஹ மஹோத்ஸவத்தைத் தர்மஸ்வரூபியான தாங்களும் மற்ற ரிஷிகளும் நடத்தும்படி கேட்டுக் கொள்ளுகிறே"னென்றார். வஸிஷ்டர் அப்படியே ஆகட்டுமென்று, விச்வாமித்ரரையும் சதானந்தரையும் மற்ற மஹர்ஷிகளை முன்னிட்டுக்கொண்டு விவாஹ மண்டபத்தின் நடுவில் விதிப்படி வேதியை அமைத்து, அதைச் சந்தனம் புஷ்பம் தங்கப்பாலிகைகள் கிண்டிகள் சங்கபாத்ரங்கள், முளைத்த விதைகளுள்ள மடக்குகள், தூபத்தால் நிறைந்த பாத்ரங்கள், ஸ்ருக், ஸ்ருவம், மஞ்சள் கலந்த அக்ஷதைகள், நெல் பொரிகளும் அர்க்ய ஜலமும் நிறைந்த பாத்ரங்கள் முதலியவைகளால் அலங்கரித்தார். பிறகு அதன்மேல் கோணலில்லாத தர்ப்பங்களைப் பரப்பி மந்த்ரங்களுடன் அக்னி ப்ரதிஷ்டை செய்து தம்பதிகளின் க்ஷேமத்திற்காக ஹோமஞ் செய்தார். பிறகு ஜனக மஹாராஜா ஸர்வாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸீதையை அக்னிக்கு ஸமீபத்தில் ராமனுக்கெதிரில் நிறுத்திக், கௌஸல்யையின் ஆனந்தத்தை விருத்தி செய்யும் ரகுவீரனைப் பார்த்து "இவள் பூமியிலிருந்து கிடைத்ததால் ஸீதையென்று பெயருள்ளவள். (ஸ்த்ரீ புருஷ ஸம்பந்தமின்றி பரம சுத்தமாய் ஆச்சர்யகரமாய்ப் பிறந்தவள்); நான் வெகு ப்ரீதியுடன் இவளை என் பெண்ணாக வளர்த்து, ஸகல தர்மங்களையும் உபதேசித்திருக்கிறேன். நீ எந்தத் தர்மத்தை அனுஷ்டிக்க விரும்புகிறாயோ அதைத் தானும் கூட இருந்து அனுஷ்டிப்பாள். இவளை நான் உனக்குப் பார்யையாகக் கொடுக்கிறேன், பெற்றுக்கொள். உனக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். உன்கையால் இவளுடைய கையைப் பிடி. இவள் மஹா பதிவ்ரதை. மஹா பாக்யசாலி: உன் நிழலைப்போல் உன்னை விட்டுப் பிரியாதவ"ளென்று மந்த்ரங்களால் பரிசுத்தமான ஜலத்தை

அவருடைய கையில் வார்த்தார். அப்பொழுது தேவர்களும் மஹர்ஷி களும் 'நல்லது, நல்ல'தென்று கொண்டாடினார்கள். தேவதுந்துபி முதலிய வாத்யங்கள் முழங்கின. ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி பொழிந்தது.

பிறகு ஜனகர், "லக்ஷ்மணா! என்னால் கொடுக்கப்படும் ஊர்மி ளையை காலதாமஸமில்லாமல் பாணிக்ரஹணஞ் செய். உனக்கு ஸகல மங்களங்களு முண்டாகட்டு"மென்றார். பிறகு பரதனைப் பார்த்து "ரகுநந்தன! மாண்டவியைப் பாணிக்ரஹணஞ் செய்" யென்றார். பிறகு சத்ருக்னனைப் பார்த்து "ப்ராக்ரமசாலியே! சுருத கீர்த்தியைப் பாணிக்ரஹணஞ் செய். நீங்களெல்லோரும் ப்ரஹ்மசர்ய வ்ரதத்தைப் பூர்ணமாய் அனுஷ்டித்தவர்கள். மதுரமான ஸ்வபாவ முள்ளவர்கள். கிருஹஸ்தாச்ரமத்தை அனுஷ்டியுங்கள். காலதாமஸம் வேண்டா"மென்றார். உடனே அந்த நான்கு ராஜபுத்ரர்களும் வஸிஷ்டருடைய அனுமதியால் அந்த நான்கு ராஜபுத்ரிகளைப் பாணி க்ரஹணஞ்செய்தார்கள். பிறகு அவர்கள் அக்னியையும் ஜனகரையும் ரிஷிகளையும் ப்ரதக்ஷிணஞ் செய்து தங்களுடைய ஸூத்ரப்படி தனி யாய் அக்னி ப்ரதிஷ்டைசெய்து விவாஹ ஹோமத்தை நடத்தினார் கள். அந்த ஸமயத்தில் தேவதைகள் புஷ்பமாரி பெய்தார்கள். துந்துபி முதலிய வாத்யங்களை முழங்கினார்கள். கந்தர்வர்களும் அப்ஸரஸ் களும் மதுரமாய்ப் பாடினார்கள். மங்கள வாத்யங்களை வாசித்தார் கள். ஆனந்தமாய் நர்த்தனஞ் செய்தார்கள். ரகுகுல ச்ரேஷ்டர்க ளான அந்த ராஜகுமாரர்களுடைய விவாஹகாலத்தில் இவ்விதமான ஆச்சர்யங்கள் நடந்தன. இப்படி வாத்ய கோஷங்களுடன் ராஜ புத்ரர்கள் அக்னியை மூன்று தடவை ப்ரதக்ஷிணஞ்செய்து விவாஹ ஹோமத்தை முடித்துப், பத்னிகளுடன் தங்களுடைய அரண்மனைக் குப் போனார்கள். தசரத மஹாராஜா தன் பந்து பரிவாரங்களோடும் மஹர்ஷிகளோடும் அவர்களைப் பார்த்துக்கொண்டே ஆனந்த பரவச ராய்ப் பின்சென்றார்.

## ஸர்க்கம் 74.

### பரசுராமர்.

மறுநாட் காலையில் விச்வாமித்ர மஹர்ஷி தசரதரிடத்திலும் ஜனகரிடத்திலும் சொல்லிவிட்டு ராஜகுமாரர்களை மனப்பூர்வமாய் ஆசீர்வதித்து ஹிமயமலைக்குப் போனார். பிறகு தசரதர் ஜனகரிடத்தில் சொல்லிக்கொண்டு அயோத்யைக்குப்போகப் புறப்பட்டார். அப்பொழுது மிதிலாபதி தன் புத்ரிக்குக் கன்யாதானமாய் அநேக லக்ஷம் பசுக்களையும் நேர்த்தியான கம்பளங்களையும் பட்டுகளையும் வஸ்த்ரங்களையும் பூர்ணமாய் அலங்கரிக்கப்பட்ட யானை குதிரை ரதம் காலாட்கள் வேலைக்காரர்கள் வேலைக்காரிகள் அளவற்ற தங்கம் வெள்ளி முத்து பவழம் ரத்ன முதலியவைகளையும் வெகு ப்ரீதியுடன் கொடுத்தார். தசரதருடன் வெகுதூரம் வந்து, அவர் அடிக்கடி கேட்டுக்கொண்டபிறகு மிதிலைக்குத் திரும்பினார்.

பிறகு தசரதர் புத்ர மித்ர பந்துவர்க்க பரிவார ஸைன்யங்களுடன் மஹர்ஷிகளை முன்னிட்டுக்கொண்டு அயோத்யைக்குத் திரும்பும்பொழுது காக்கை முதலிய பக்ஷிகள் கடுமையாகக் கத்தின. ஆனால் மிருகங்கள் பிரதக்ஷிணமாய்ச் சென்றன. அதைக்கண்டு தசரதர் "வஸிஷ்ட மஹர்ஷே! பாருங்கள். பக்ஷிகள் பயங்கரமாய்க் கத்துகின்றன. மிருகங்களோ ப்ரதக்ஷிணமாய்ச் செல்லுகின்றன. என் தேஹம் நடுங்குகிறது. மனதில் கவலை குடிகொண்டிருக்கிறது. இதின் பயனென்ன" வென்று கேட்டார். அந்த முனிச்ரேஷ்டர் "ஸமீபத்தில் நமக்கு ஏதோ ஆபத்து நேருமென்பதைப் பக்ஷிகள் தெரிவிக்கின்றன. ஆனால் அது நிவர்த்தியாகுமென்பதை மிருகங்கள்குறிப்பிடுகின்றன. ஆகையால் கவலைப்பட ந்யாயமில்லை" யென்றார்.

அவர்கள் அப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் ஒரு பெருங் காற்றுக் கிளம்பி பூமியை நடுங்கச் செய்தது. பெரியமரங்கள் முறிந்து விழுந்தன. ஸூர்யனை இருள் மூடிற்று. திக்குகள் விளங்கவில்லை. ஸகல வஸ்துக்களும் புழுதியால் மறைந்தன. ஸகல ப்ராணிகளும் திகைத்து நின்றன. வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளையும் தசரதரையும் ராஜகுமாரர்களையும் தவிர மற்றவர்கள் புழுதியால் மூடப்பட்டு மூர்ச்சையடைந்து அசைவற்று நின்றார்கள். இப்படி எங்கும்

பயங்கரமான இருட்டில் பரசுராமர், ஜடாமண்டலத்துடன் மின்னற் கொடியைப் போன்ற வில்லேயும் ச்ரேஷ்டமான பாணத்தையும் கையில் பிடித்துக்கொண்டு தோளில் சத்ருக்களை வேரறுக்கும் கோடாரியுடன் அவர்களுக்கெதிரில் தோன்றினர். பிருகு வம்சத்திலுதித்த ஜமதக்னி புத்ரரான அந்த ப்ராஹ்மணேத்தமர் ப்ரளய காலாக்னியைப் போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு, ஸாமான்ய ஜனங்கள் கண்ணெடுத்துப் பார்க்க முடியாதவராய்க், கைலாஸத்தைப் போல் பிறரால் ஜயிக்க முடியாதவராகத் தோன்றினர். த்ரிபுராஸுரர்களை ஸம்ஹரித்த பரமசிவனைப் போல் அவர், ராஜவம்சங்களைப் பலதடவை வேரறுத்தவர். பயங்கரமான ரூபத்துடன் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் ஜமதக்னி குமாரனைப் பார்த்து, ஜபஹோம நியமங்களால் ப்ரஸித்தியடைந்த வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகள் "இவருடைய பிதா க்ஷத்ரியனல் கொல்லப்பட்டதற்காக இவர் கோபங்கொண்டு ராஜவம்சங்களைப் பலதடவை வேரறுத்துப், பழிக்குப் பழிவாங்கித், தன் ப்ரதிக்ஞையை நிறைவேற்றிக், கோபதாபங்களை விட்டு, ஸ்வபாவமான சாந்த குணத்தைக் கைக்கொண்டாரல்லவா? இவருக்கு இன்னும் க்ஷத்ரிய வம்சத்தை அழிக்கவேண்டுமென்ற எண்ணமிருக்க ந்யாயமில்லையே"யென்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டார்கள். பிறகு அதிதிபூஜைக்கு வேண்டிய அர்க்யபாத்ய முதலியவைகளை எடுத்துக்கொண்டு அவரை மதுரமான வார்த்தைகளால் 'ராம ராம' வென்று அழைத்தார்கள். அவர் அந்தப் பூஜையை அங்கீகரித்துத், தசரத புத்ரனை ராமனையே லக்ஷ்யஞ் செய்து, இப்படிச் சொன்னர்.

## ஸர்க்கம் 75.

### ராமராம ஸம்வாதம்.

"தசரத புத்ரனை ராம! தாடகை ஸுபாஹு மாரீசன் முதலிய ராக்ஷஸர்களை நீ ஸம்ஹரித்தாயென்றும், அஹல்யையின் சாபத்தைத் தீர்த்தாயென்றும்; சிவதனுஸை எடுத்து வளைத்து முறித்தாயென்றும், உன் வீர்யமும் பலமும் அதிகமாகக் கொண்டாடப்படுவதைக் கேட்டேன். சிவதனுஸ்ஸை முறித்தது வெகு ஆச்சர்யமான கார்யமே. அப்படி நடக்குமென்று மனதாலும் நினைக்க முடியாது. ஆகையால் அதின் உண்மையை அறிய நான் இந்த வில்

னுடன் வந்திருக்கிறேன். இந்த ச்ரேஷ்டமான ஆயுதம் ஜமதக்னி என்ற என் பிதாவால் எனக்குக் கிடைத்தது. நீ சிவதனுஸை முறித்தது உண்மையானல், இதை எடுத்து வளைத்து நாணேற்றி, இந்த ச்ரேஷ்டமான பாணத்தைப் பூட்டு. அதனால் உன் பலத்தை அறிந்து உன் வீர்யத்தை மெச்சி, உன்னுடன் யுத்தஞ்செய்வே" னென்றார்.

ராமனுடைய ஆச்சர்யமான செய்கைகளையும் பராக்ரமத்தையும் நன்றாயறிந்தும், அவரிடத்தில் தான் வைத்த ப்ரீதியால் தசரதர் முகம் வாடித் தீனமாகக் கைகூப்பி, "ஸ்வாமி! தாங்கள் ப்ராஹ்மணோத்தம ரல்லவா? அபாரமான கருணையென்பது தங்களுக்கு ஸ்வபாவகுண மல்லவா? க்ஷத்ரிய வம்சங்களைப் பலதடவை வேரறுத்து ஒப்பற்ற கீர்த்திபெற்ற தங்களுக்கு இந்தக் குழந்தையை ஜயிப்பதால் அதிக கீர்த்தியுண்டோ? க்ஷத்ரியர்களிடத்திலுள்ள கோபத்தை விட்டீர்க ளல்லவா? ஒன்றுந் தெரியாத இந்தச் சிறுவனுடன் தங்களுக்கு விரோதமேன்? இவர்கள் தங்களுக்கு ஒரு பொருட்டா? மேலும், அறு பதாயிரம் வர்ஷங்கள் வரையில் புத்ரனில்லாமல் நான் எண்ணிறந்த வ்ரதங்களையும் நியமங்களையும் அனுஷ்டானங்களையும் செய்து இவர் களை அடைந்திருக்கிறேன். இவர்களுக்கு அபயதானஞ் செய்யவேண் டும். வேதாத்யயனத்திலும் வ்ரதானுஷ்டானத்திலும் நோக்கமுள்ள பார்க்கவ குலத்தில் பிறந்து, ஸ்வபாவ குணங்களால் முன்னோர்களை மிஞ்சின தங்களுக்கு யுத்தம் முதலிய க்ஷத்ரியதர்மங்கள் தகுமா? இருபத்தொரு தடவை அரசர்களை நிர்மூலஞ் செய்து, இந்தப் பூமி யைக் காச்யபருக்குத், தானஞ் செய்தீர்கள். இனி நான் ஆயுதமெடுப்ப தில்லையென்று இந்த்ரனிடத்தில் ப்ரதிக்ஞை செய்தீர்களல்லவா? 'இதுவரையில் என் ஜாதிக்கு விரோதமான தர்மத்தைக் கைக் கொண்டு, கோபத்திற் கிடங்கொடுத்து, மிகுந்த ஜீவஹிம்ஸை செய் தேன். இனி என் ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்கவேண்டு'மென்று பச்சாதாப மடைந்தீர்கள். தாங்கள் செய்த ஜீவஹிம்ஸைக்கு ப்ராயச் சித்தமாய் ஒரு பெரிய யாகத்தை நடத்தி, அதில் அத்வர்யுவான காச்யபருக்குத் தங்களால் ஜயிக்கப்பட்ட இந்தப் பூமி முழுவதையும் தக்ஷிணையாகக் கொடுத்து, மஹேந்த்ர பர்வதத்தில் கடுந்தபஸ் செய்துகொண்டிருக்கிறீர்களல்லவா? ஐயோ! என் துரதிருஷ்டத் தால் என் வம்சத்தையும் நாசம் செய்ய வந்திருக்கிறீர்களே. 'ஒரு புத்ரனிறந்தால் எல்லாம் போய்விடுமா'வென வேண்டாம். எனக் கும் என் பந்து மித்ர பரிவாரங்களுக்கும் இந்த மஹர்ஷிகளுக்கும் ராமனே ஜீவாதாரமென்பது ஸத்யம். அவனுக்கு ஏதாவது கெடுதி

நேர்ந்தால் நாங்களெல்லோரும் மடிவோமென்பதில் ஸந்தேஹ மில்லை'' யென்றார்.

அவருடைய வார்த்தையைக் கொஞ்சமேனும் லக்ஷ்யஞ் செய் யாமல் பரசுராமர் ராமனைப் பார்த்துப், "பூர்வ காலத்தில் விச்வகர்மா உத்தமமான இரண்டு வில்லுகளைச் செய்தான். அவை தைவத் தன்மையுள்ளவை, ஸகல லோகங்களிலும் ப்ரஸித்தி பெற்றவை, வெகு உறுதியானவை, அளவற்ற பலமுடையவை, ஒப்பற்றவை, வெகு ச்ரமத்துடன் செய்யப்பட்டவை. த்ரிபுராஸுரர்களுடன் யுத் தஞ் செய்யச் சங்கரனிடத்தில் தேவதைகள் அவைகளில் ஒன்றைக் கொடுத்தார்கள். ஜனகருடைய ஸதஸில் நீ வளைத்து முறித்த வில் அதே. என் கையிலிருக்கும் வில் இரண்டாவது. இதைத் தேவர்கள் மஹாவிஷ்ணுவிடத்தில் கொடுத்தார்கள். வெகு தேஜஸுடன் விளங்கும் இந்த வில், ருத்ரனுடைய வில்லிற்கு ஸமமான பலமுடை யது. 'இதை என்னிடத்தில் கொடுப்பதில் என்ன விசேஷ'மென் றால் சொல்லுகிறேன் கேள்.

த்ரிபுர ஸம்ஹாரமான பிறகு தேவர்களுக்கு ஒரு பெரிய ஸந்தேஹமுண்டாயிற்று. அதைத் தீர்க்க அவர்கள் ப்ரஹ்மா விடத்திற்குப் போய் "ஸ்வாமி! மஹா விஷ்ணுவே விசேஷ வீர்யமுள்ளவர். வராஹாவதாரமெடுத்துப் பாதாளத்தி லிருந்து பூமியைக் கொண்டுவந்தது முதலிய பல அத்புதமான கார் யங்களே இதற்கு ப்ரமாணமென்று தாங்கள் இதுவரையில் பலதடவை கொண்டாடக் கேட்டிருக்கிறோம். ஆனால் இப்பொழுது ருத்ரன் அந்த விஷ்ணுவையே பாணமாய் வைத்துக்கொண்டு ஒரு வரும் ஜயிக்க முடியாத த்ரிபுராஸுரர்களை ஜயித்திருக்கிறார். விஷ்ணுவின் வீர்யம அதிகமா, சிவனுடைய வீர்யம் அதிகமா" வென்றார்கள். ப்ரஹ்மா, "நான் எவ்வளவு தடவை உபதேசித்தும் இந்த விஷயம் இவர்களுடைய புத்தியில் படவில்லை. விஷ்ணு ருத் ரர்களின் வீர்யத்தை ப்ரத்யக்ஷமாய் வெளிப்படுத்துவது நல்ல தென்றெண்ணி, மஹாவிஷ்ணுவிடத்திற்குப் போய 'ஸ்வாமி! த்ரிபுர ஸம்ஹாரகாலத்தில் நானே ப்ரதானமாயிருந்தேன். நானல்லவா வில்லாளி? இந்த விஷ்ணு கேவலம் எனக்குப் பாணமா யிருந்தவரல்லவா'வென்று பரமசிவன் தங்களைபபற்றி வெகு குறை வாய்ப் பேசுகிறு"ரென்றார். பிறகு மஹாதேவரிடத்திற்குப் போய், "ஸ்வாமி! த்ரிபுர ஸம்ஹார காலத்தில் நான் பாணத்தின் முனையா யிருந்து அவருக்கு ஒத்தாசை செய்யாவிட்டால் ஜயங்கிடைத்

திருக்குமா? அவ்வஸுரர்களைக் கொன்றது நானல்லவா" வென்று மஹாவிஷ்ணு தங்களைப்பற்றி வெகு இகழ்வாய்ப் பேசிக்கொண் டிருக்கிறு" ரென்ருர். இப்படி இருவர்க்கும் வெளிப்படையாய் விரோதத்தை மூட்டிவிட்டார்.

அவர்களும் சதுர்முகருடைய அபிப்ராயத்தை அறிந்து, அதை நிறைவேற்ற, ஒருவரையொருவர் ஜயிக்கவேண்டுமென்று மஹா கோபத்துடன் ஸகல ப்ராணிகளும் பயத்தால் மயிர்க்கூச்ச லடையும்படி யுத்தஞ் செய்தார்கள். அப்பொழுது மஹாவிஷ்ணு ஆயுதத்தைத் தொடாமலேயே 'ஹூம்' என்று ஒரு சப்தம் செய்தார். உடனே பரமசிவனுடைய வில் முறிந்தது. மூன்று நேத்ரங்களையுடைய பரமசிவனும், த்ரிபுரங்களையெரித்த நெற் றிக்கண் பயன்படாமல், அந்தச் சப்தத்தால் ப்ரமித்து நின்ருர். உடனே தேவர்களும் ரிஷிகளும் தேவகணங்களும் அவ்விரு மஹாபுருஷர்களையும் நமஸ்கரித்து, யுத்தத்தை நிறுத்தும்படி ப்ரார்த்திக்க அவர்கள் அப்படியே சாந்தமடைந்தார்கள். பிறகு தேவர்களும் ரிஷிகளும் 'நமக்கு இனி ஸந்தேஹமில்லை. நமது உத்தேசம் நிறைவேறிற்று. நமக்குப் பூஜ்யரான ப்ரஹ்மாவின் வார்த் தையைக் காட்டிலும் நாம் நேரில் பார்த்ததே விசேஷம். த்ரிபுர ஸம்ஹாரகாலத்தில் பரமசிவனுடைய வில்லில் மஹாவிஷ்ணுவின் வீர்யம் நிறைந்திருந்ததால் ஜயம் கிடைத்தது. இப்பொழுது அது விலகினதால் அவருடைய சக்தியால் முறிந்தது. ஆகையால் ருத்ர னைக்காட்டிலும் விஷ்ணுவே மேலானவ'ரென்று முடிவுசெய்தார்கள்.

ருத்ரன் கோபமடங்காமல் தன் வில்லையும் பாணத்தையும் விதேஹ வம்சத்தில் பிறந்த தேவராதனென்ற ராஜர்ஷிக்குக் கொடுத் தார். மஹாவிஷ்ணு தன் உத்தமமான வில்லைப் ப்ருகுவம்சத்தில் பிற ந்த ரிசீகரிடத்தில் ஒப்புவித்தார். அவர் அதைத் தன் புத்ரரான ஜம தக்னிக்குக் கொடுத்தார். மஹாதேஜஸ்வியும் தபோநிதியும் ஒப்பற்ற மஹிமையுள்ளவருமான என்பிதாவை, இந்த ஆயுதமில்லாதபொழுது ஒருநாள், கார்த்தவீர்யார்ஜுனன் ஸாதாரணமாக நினைத்து க்ரூரமாகக் கொன்றுன். அதுவரையில் ஒருவரும் கேட்டிராத அந்த மஹா பாபத்தால் நான் அடங்காக் கோபங்கொண்டு க்ஷத்ரியர்களைப் பிறக்கப் பிறக்க இருபத்தொருதடவை வேரறுத்துப், பூமியை ஜயித்து, ஒரு பெரிய யாகஞ்செய்து அதில் காச்யப மஹர்ஷிக்கு அதைத் தக்ஷிணை யாகக் கொடுத்துவிட்டு, மஹேந்த்ர பர்வதத்தில் தபஸ் செய்து கொண்டிருக்கிறேன். நீ பரமசிவனுடைய வில்லை முறித்ததை

அங்கே கேள்விப்பட்டு, உடனே அதிவேகமாய்ப் புறப்பட்டு வந்தேன். இந்த விஷ்ணு தனுஸ் பரம்பரையாய் என் பாட்டனிடத்திலிருந்து எனக்குக் கிடைத்திருக்கிறது. இதை எடுத்து வளைத்து நாணேற்றி இந்த ச்ரேஷ்டமான பாணத்தைப் பூட்டு. என்னால் முடியாதென்று ப்ராஹ்மணனைப்போல் சொல்லாதே. மஹாவீர்யமுள்ள க்ஷத்ரிய வம்சத்தில் பிறந்தவனென்பதை மறக்காதே. நான் சொன்னபடி நீ செய்தாலும் உன்னை விடுவதில்லை. உன் வீர்யத்தைப் பரீக்ஷிக்க உன்னுடன் யுத்தஞ் செய்வே"னென்றார்.

## ஸர்க்கம் 76.

## பரசுராம கர்வபங்கம்.

ராமன் தன் பிதாவிற்கெதிரில் உரக்கப் பேசக்கூடாதென்ற மர்யாதையை அனுஸரித்துப் பரசுராமரைப் பார்த்து மெதுவாய்ப், "பிருகுகுலதிலக! தங்களுடைய வீரச் செயல்களைக் கேள்விப்பட்டிருக்கிறேன். தகப்பனைக் கொன்றவர்களைக் கொன்று பழி தீர்க்க வேண்டியது சூரனான புத்ரனுடைய கடமை; அதை ஒப்புக்கொண்டேன். இதுவரையில் தங்களை எதிர்த்த க்ஷத்ரியர்களைப்போல் பராக்ரமமற்ற அசக்தனென்று என்னையும் எண்ணி அவமதிக்கிறீர்கள். பிறர் செய்யும் அவமானத்தைப் பொறுக்கமாட்டேன். பிறரை அடக்கும் சக்தி எனக்குண்டு. அதை இப்பொழுது பார்ப்பீர்க"ளென்று அதிகோபத்துடன் பரசுராமருடைய கையிலிருந்து வில்லையும் பாணத்தையும் வெகு லாகவமாக வாங்கி, வில்லை வளைத்து நாணேற்றிப் பாணத்தைப் பூட்டி, "தாங்கள் சொன்னபடி செய்தேன். தாங்கள் பிருகு வம்சத்தில் பிறந்த ப்ராஹ்மண ச்ரேஷ்டர்; என் குருவான விச்வாமித்ரருடைய ஸஹோதரி. தங்களுடைய பிதாவைப் பெற்றவள். ஆகையால் தங்களுடைய உயிரை வாங்கும் இந்தப் பாணத்தை ப்ரயோகிக்க முடியாமலிருக்கிறேன். இந்தப் பாணமோ விஷ்ணுவைச் சேர்ந்தது, சத்ருவை ஜயிக்காமல் திரும்பாது, பலத்தையும் கர்வத்தையும் அழிக்கும், வீண் போகாது. தங்களுடைய தபோ பலத்தால் ஸம்பாதித்த உத்தம லோகங்களை அடையாமல் செய்யட்டுமா? அந்தத் தபஸின் பயனை இதற்குப் பலிகொடுக்கிறீர்களா? அல்லது நினைத்த லோகங்களுக்குப் போகும் தங்களுடைய சக்தியை அழிக்கட்டுமா"வென்றார்.

தன் பூர்வாவதாரமான பரசுராமரிடத்திலிருந்து தன் வில்லையும் பாணத்தையும் வாங்குவதாய் வெளிக்குக் காட்டி, ராமன் அவரிடத்தில் முன்பு வைத்த சக்தியைத் தானே மறுபடியும் தன்னிடத்தில் வருவித்துக்கொண்டார். அந்த ஆச்சர்யத்தைப் பார்க்க ப்ரஹ்மாதி தேவர்களும் மஹர்ஷி கந்தர்வ அப்ஸரஸ் ஸித்த சாரண கின்னர யக்ஷ நாக ராக்ஷஸ கணங்களும் கூட்டங் கூட்டமாய் வந்தார்கள். ஸகல ப்ராணிகளும் அசைவற்று நின்றன. பரசுராமரிடத்திலிருந்த விஷ்ணு தேஜஸ் அவரை விட்டு விலகிற்று. ஒன்றுந் தோன்றாமல் இதென்ன ஆச்சர்ய மென்று அவர் ராமனை உற்றுப் பார்த்தார். தன் சக்தி குறைவதற்கு அவருடைய தேஜஸே காரணமென்று உணர்ந்து, மலர்ந்த செந்தாமரை இதழ்களைப்போன்ற நேத்ரங்களை உடைய ராமனை மஹா விஷ்ணுவென்றறிந்து மெதுவாய்க், "காச்யபருக்கு இந்தப் பூமியை நான் தானம் செய்தபொழுது அவர் 'என் ராஜ்யத்தில் வஸிக்கக்கூடா'தென்றார். அவருடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இந்தப் பூமியில் ஒரு ராத்ரிகூடத் தங்குவதில்லையென்று ப்ரதிக்ஞை செய்தேன். ஆகையால், நான் நினைத்தவிடங்களுக்குப் போகும் சக்தியை அழிக்க வேண்டாம். மனோ வேகமாய் மஹேந்த்ர பர்வதத்திற்குப் போய்விடுகிறேன். என் தபஸால் ஸம்பாதித்த உத்தம லோகங்களை நான் அடையாமல் செய். தாமஸம் வேண்டாம். நீ தேவாதி தேவனென்றும் அழிவற்றவனென்றும் மதுகைடபர்களை ஸம்ஹரித்த மஹா விஷ்ணுவென்றும் அறிந்தேன். இந்த வில்லை வேறொருவர் எடுத்து வளைக்க முடியுமோ? உனக்குப் பரம மங்களமுண்டாகட்டும். இதோ பார். தேவகணங்களும் பராபர வஸ்துவான உன்னை ஆச்சர்யத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். லோகநாதனான உன்னால் ஜயிக்கப்படுவதில் எனக்குக் கொஞ்சமேனும் அவமானமில்லை. நீ பாணத்தை ப்ரயோகித்தவுடன் மஹேந்த்ர பர்வதத்திற்குப் போகிறே"னென்றார். ராமன் அப்படியே செய்ய, உத்தமலோகங்களை அடைய அனுஷ்டித்த பரசுராமருடைய புண்யபலம் அழிந்தது. அதைக் கண்டு அந்த ஜமதக்னியின் குமாரர் அதிவேகமாய் மஹேந்த்ர பர்வதத்திற்குப் போய்விட்டார்.

உடனே திக்குகள் இருள் நீங்கி ப்ரகாசித்தன. ப்ரஹ்மாதி தேவகணங்களும் ரிஷிகளும் கோதண்டபாணியான ராமனைக் கொண்டாடினார்கள். இப்படிப் பரசுராமன் தசரத ராமனைப் புகழ்ந்து ப்ரதக்ஷிணம் செய்து தன்னிடத்திற்குச் சென்றார்.

## ஸர்க்கம் 77.

## அயோத்யைக்கு வந்தது.

பரசுராமர் போனபிறகு ராமனுடைய கோபம் தணிந்தது. மற்றவர்களால் பார்க்கப்படாமல் நின்ற வருணனிடத்தில் தன் கையிலிருந்த விஷ்ணுவின் வில்லையும் பாணத்தையும் கொடுத்தார். பிறகு வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளை நமஸ்கரித்துத், துக்கத்தால் மெய் மறந்த தசரதரை நோக்கி, "ஸ்வாமி! பரசுராமர் போய்விட்டார். நாம் ஸைன்யத்துடன் அயோத்யைக்குப் போவோம். யாவரும் தங்களுடைய உத்திரவை எதிர்பார்க்கிறார்க"ளென்றார்.

தசரதர் கவலைதீர்ந்து, எல்லையற்ற ஸந்தோஷமடைந்து, தானும் தன் புத்ரர்களும் இறந்து பிழைத்ததாக நினைத்தார். ராமனை இறுகத் தழுவி உச்சி முகர்ந்து ஸைன்யங்களும் பரிவாரங்களும் செல்ல உத்திரவுகொடுத்தார். அவர்கள் வருவதை அறிந்த அயோத்யா ஜனங்கள், கொடி தோரணம் த்வஜம் முதலியவைகளால் நகரத்தை அலங்கரித்தார்கள். ராஜவீதிகளில் ஜலந் தெளித்துச், சுத்தஞ்செய்து, மங்களகரமான கோலங்களால் அலங்கரித்து, மணமுள்ள புஷ்பங்களை இறைத்தார்கள். எல்லோரும் ஸ்நானஞ்செய்து வஸ்த்ராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, ப்ரஸன்னமான முகத்துடன் மங்கள வாத்யங்களைக் கோஷித்துக்கொண்டு அங்கங்கே கூட்டங் கூட்டமாக நின்றார்கள். ப்ராஹ்மணர்களும் பெரியவர்களும் நகரத்திலிருந்து வெகுதூரம் சென்று, வாத்யகோஷங்களாலும் ஆசீர்வாதங்களாலும், 'ஜயவிஜயீபவ' வென்ற ஸந்தோஷ சப்தங்களாலும் தசரதரை எதிர்கொண்டழைத்து வந்தார்கள். இப்படி புத்ர மித்ர பந்து பரிவார மந்த்ரி புரோஹிதர்களுடன் அரசன் சுப முஹூர்த்தத்தில் ராஜதானியில் ப்ரவேசித்தார். ப்ரஜைகள் உபசரிக்க வீதிகள் வழியாகப் பட்டணத்தை ப்ரதக்ஷிணஞ்செய்து, தசரதர் ஹிமயமலையைப் போன்ற தன் அரண்மனையில், ஸகல இஷ்டபோகங்களை அனுபவித்துக்கொண்டு ஆனந்தமாகக் காலங் கழித்தார்.

கௌஸல்யை ஸுமித்ரை கைகேயீயென்ற ராஜமஹிஷிகளும், மற்ற ராஜ ஸ்த்ரீகளும், ஸீதை ஊர்மிளை மாண்டவி ச்ருதகீர்த்தியென்ற ராஜபுத்ரிகளைத் தங்கள் அரண்மனைகளுக்கு அழைத்துப் போய் உபசரிப்பதில் கவலையாகவிருந்தார்கள். அந்தக் கன்யைகள் பட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு மங்களகரமான ஸ்தோத்ரங்களையும் பாட்டல்களையும் பாடிக்கொண்டு வீட்டிலுள்ள தேவாலயங்களைக் கந்த

புஷ்பங்களால் பூஜித்தார்கள். பிறகு ராஜபத்னிகளையும் மற்ற பெரியோர்களையும் நமஸ்கரித்துத் தங்கள் அரண்மனைகளுக்குப் போய் ப்ராஹ்மணர்களை பசுக்களாலும் தனங்களாலும் தான்யங்களாலும் திருப்திசெய்து, தங்கள் பார்த்தாக்களுடன் ஸுகமாக வாழ்ந்தார்கள்.

ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்கள், க்ருஹஸ்தாச்ரமத்தை அனுஷ்டித்து, அஸ்த்ரசஸ்த்ர வித்யைகளில் பூர்ணதிறமையை ஸம்பாதித்து, நிகரற்ற வீர்யசாலிகளாக குபேரனுக்குக் கிடைக்காத ஐச்வரியத்தைப் பெற்று, ப்ரியமான மித்ரர்கள் சூழ, மஹாராஜாவுக்கு ஸகல பணிவிடையையும் செய்துவந்தார்கள். எல்லா நீதிகளையும் அறிந்தவர்களானதால், அந்தந்த காலங்களில் தங்களுடைய குணங்களால் பிதாவைத் திருப்தி செய்தார்கள்.

இப்படிச் சிலகாலஞ் சென்றபிறகு தசரதர் "பரத! உன் மாமன் உன்னை கேகய தேசத்திற்கு அழைத்துப் போக வெகு நாளாய்க் காத்துக்கொண்டிருக்கிறார். மிதிலையில் ரிஷிகளுக் கெதிரில் அப்படியே செய்வதாகச் சொல்லியிருக்கிறேன். அவருடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்" யென்றார். "என்னிடத்திலுள்ள ப்ரியத்தால் என்னைவிட்டுப் பிரிய மனமில்லாமல் போவென்று நேரில் சொல்லவில்லை. தன் எண்ணத்தை இப்படி வெளியிடுகிறார்" ரென்று அறிந்த பரதன், தகப்பனையும் ராஜ பத்னிகளையும் ராமனையும் நமஸ்கரித்து, லக்ஷ்மணனை ஆலிங்கனஞ் செய்து, அவர்களிடத்தில் சொல்லிக்கொண்டு, மாமனுடன் கேகய தேசத்திற்குப் போனார். எப்பொழுதும் அவரை விட்டுப் பிரியாத சத்ருக்னன் அவருடன் போனார்.

பிறகு ராம லக்ஷ்மணர்கள் தேவேந்த்ரனைப் போன்ற தங்கள் பிதாவுக்கு உசிதமான பணிவிடை செய்து ஆராதித்தார்கள்; கொஞ்சங்கூட பேத புத்தியில்லாமல் ராஜபத்னிகளுக்கும் சுச்ரூஷை செய்தார்கள். பெரியோர்களுக்கும் குருக்களுக்கும் செய்யவேண்டிய உபசாரங்களைக் காலம் தவறாமல் விதிப்படி செய்தார்கள். மஹாராஜாவின் உத்திரவால் குடிகளுக்கு நேரும் கெடுதிகளைப் போக்கி க்ஷேமத்தைக் கொடுக்கும் கார்யங்களைச் செய்துவந்தார்கள். ஆகையால் தசரதரும் ப்ராஹ்மணர்களும் வைச்யர்களும் தேசத்து ஜனங்களும் ராமனுடைய நடத்தையாலும் ஸ்வபாவத்தாலும் அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள். ஸகல ஜீவகோடிகளைக் காட்டிலும் ஸ்வயம்புவான ப்ரஹ்மா மேலாக விளங்குவதுபோல், மற்ற தசரத புத்ரர்களைக்காட்டிலும் ராமன் கீர்த்திசாலியாய், வீர்யபோகத பராக்ரம முடையவராக விளங்கினார்.

பிதிருசுச்ரூஷை, ராஜ்யபாலனம், தேவதாராதனம் முதலிய கடமைகளில் ராமன் மனதைச் செலுத்தினாலும் க்ருஹஸ்த தர்மத்தை

மறக்கவில்லை. ஸ்த்ரீபுருஷ ஸம்பந்தமில்லாமல் தைவத்தன்மை வாய்ந்து பிறந்த ஸீதையுடன் அந்தந்த ருதுக்களுக்குத் தகுந்தபடி ஸுகங்களை அனுபவித்து அவளுடைய அபிப்ராயத்திற்கு அதிகமாகவே அவளுக்கு ஸுகத்தைக் கொடுத்துவந்தார். அவளிடத்தில் தன் மனஸை நாட்டி அவளுடைய ஹ்ருதயத்தைக் கவரும்படி நடந்து கொண்டார். தனக்குப் பூஜ்யரான பிதாவால் விவாஹம் செய்து வைக்கப்பட்டவளென்ற விஷயமே அவளிடத்தில் ராமனுக்கு விசேஷ ப்ரீதிக்குக் காரணம்; பதிசுச்ரூஷை முதலிய உத்தம குணங்களாலும், நிகரற்ற ரூபலாவண்யத்தாலும், அமானுஷ்யமான பிறப்பாலும், ப்ரஹ்மஞானிகளால் அலங்கரிக்கப்பட்ட ஜனக வம்சத்தைச்சேர்ந்ததாலும், அந்த ப்ரீதி வரவர எல்லையில்லாமல் வளர்ந்தது. ராமன் தன் பர்த்தாவென்ற முக்ய காரணத்தாலும், தன் பிதாவால் விவாஹம் செய்விக்கப் பட்டவராகையாலும், மன்மதனைப் பழிக்கும் ரூபலாவண்ய முள்ளவராகையாலும், குலம் சீலம் செல்வம் பராக்ரமம் கீர்த்தி வித்யை பலம் கருணை முதலிய அனந்த கல்யாண குணங்களுக்கு நிதியாகையாலும், அவரிடத்தில் ஸீதைக்குள்ள ப்ரேமை, ராமன் அவளிடத்தில் வைத்த ப்ரியத்தைக் காட்டிலும் இருமடங்காயிற்று. ஸீதையின் நடை உடை பாவனை பார்வை இங்கிதம் சேஷ்டை முதலியவைகளால் அவளுடைய ஹ்ருதயத்திலுள்ள ப்ரீதியை ராமன் நன்றாய் அறிந்தார். அவருடைய அபிப்ராயத்தையும் ஸீதை பூர்ணமாய்த் தெரிந்துகொண்டு அதற்குத் தகுந்தபடி நடந்தாள். மிதிலா நகரத்தில் ஜனககுலத்தில் பிறந்ததால் ஸூக்ஷ்ம புத்தியுள்ளவள்; தேவகன்யைகளைப்போல் ஒப்பற்ற அழகுள்ளவள்; ஸாக்ஷாத் மஹா லக்ஷ்மியே அவதாரஞ் செய்தது போல் விளங்குகிறவள். ராமனுடைய மனோபாவத்தை அறிவதில் அவரைக் காட்டிலும் திறமையுள்ளவள்.

தசரத சக்ரவர்த்தியின் புத்ரனானதால் எல்லையற்ற ஸுகங்களை அனுபவிப்பதற்கு வேண்டிய ஸாதனங்களில் ராமனுக்குக் குறைவில்லை. பிறருடைய மனதை ஸந்தோஷப்படுத்துவதில் நிகரற்ற திறமையுள்ளவர்; ஸீதை யிடத்தில் தன் ஸகலத்தையும் வைத்தவர்; ஒவ்வொரு விஷயத்திலும் தனக்கு மேலான ஸீதையுடன் சேர்ந்தே அவளுக்கு அபரிமிதமான ஆனந்தத்தைக் கொடுத்து, தேவாதி தேவனை மஹா விஷ்ணு ஸ்ரீதேவியுடன் வைகுண்டத்தில் விளங்குவது போல விளங்கினார்.

(பால காண்டம் முற்றிற்று.)

ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீராம சந்த்ர பரப்ரஹ்மணே நம:

சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ், சென்னை.